# SPECIAL CONCESSION FOR 2 WEEKS ONLY

AT LESS THAN HALF PRICES

EACH GTD. 10 YEARS



ALARM TIME PIECE

| | | | |
|---|---|---|---|
| 605 | ப்ளைன் | ~~26/-~~ | 12/- |
| 605 | சுபீரியர் | ~~36/-~~ | 16/8 |



| | | | |
|---|---|---|---|
| 606 | 15 ஜுவல் க்ரோம் | ~~78/-~~ | 38/- |
| 606 | 15 ,, ரோல்டுகோல்டு | ~~86/-~~ | 43/- |
| 606 | 15 ஜுவல் சுபீரியர் | ~~100/-~~ | 48/- |



| | | | |
|---|---|---|---|
| 607 | 5 ஜுவல் க்ரோம் | ~~60/-~~ | 29/8 |
| 607 | 5 ,, ரோல்டுகோல்டு | ~~70/-~~ | 34/8 |



| | | | |
|---|---|---|---|
| 608 | க்ரோம் கேஸ் | ~~26/-~~ | 13/- |
| 608 | உயர் ரகம் | ~~30/-~~ | 15/- |

தபால் செலவு தனி. இரண்டாக ஆர்டர் செய்வோருக்கு இலவசம்

**PIONEER WATCH Co.**

POST BOX NO. 11428 CALCUTTA



FAS-534

## நவ நாகரீக பெண்கள் விரும்புவது



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்





**டி.எஸ்.ஆர் & கோ.**

**கும்பகோணம்.**

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:

சுராஜ் ஏஜன்ஸீஸ்

10, ஜானிபாட்சா சாஹிப் தெரு, சென்னை-14

கோவை, பாலக்காடு அன்று நீலகிரிக்கு சோல் ஏஜண்டுகள்,

B. பாலபட்டாபி செட்டியார்

346, வைசியாள் தெரு - கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு:

சேகர்ஸ், திருப்பத்தூர் (வ. ஆ.)

உள்ளத்தைத் தொடும்
உல்லாசச் சித்திரம்










மாடர்ன்
தியேட்டர்ஸ்

# திகம்பர
# சாமியார்

டைரக்ஷன் · டி. ஆர். சுந்தரம்

· இப்பொழுது · சென்னை ·
பிராட்வே & ராஜகுமாரி
மற்றும் ராஜதானி பூராவும் நடைபெறுகிறது.........

உங்கள் நவராத்திரி
பண்டிகைக்கு உகந்தது

# ஆரணி பட்டுச் சேலைகள்!

★

எங்கள் சொந்தக் கைத்தறியில் தயார் செய்யப்பட்ட இச்சேலைகள் அற்புதமான வேலைப்பாட்டிற்கும் நவீன டிஸைன்களுக்கும் கெட்டிச் சாயத்திற்கும் பிரசித்தமானவை. நேரில் ஒரு முறை விஜயம் செய்து உங்கள் தேவைகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவும்.

★

# ஆரணி ஸில்க் ஹவுஸ்

5, சன்னதித் தெரு, மயிலாப்பூர், மதராஸ்

போன்: 86349

★

எங்கள் சரக்குகள் கீழ்கண்ட இடங்களில்
மதராஸ் விலைக்கே கிடைக்கும்:

பம்பாய்: சௌத் இந்தியன் கன்சர்ன்ஸ் லிட்., திலக் ரோடு, மாதுங்கா.

புது டில்லி: சௌத் இந்தியன் கோவாபரேடிவ் சப்ளை சொஸைடி லிட்., 9. ஜந்தர் - மந்தர் ரோடு.

கல்கத்தா: சுந்தர்லன் பிரதர்ஸ், 1/4, பிரின்ஸ் குலாம் முகம்மது ரோடு, காளிகாட்.




34/- 15/12/-
42/- 18/8/-



35/- 24/-
ரேடியம் கோல்டன்
36/- 28/-



38/- 40/-
110/- 46/-
86/- 32/-



30/- 13 8/-
ரேடியம் கோல்டன்
34/- 18/-

POSTAGE PACKING EXTRA

STANDARD WATCH CO.
P. BOX. 288. CALCUTTA-1.

ஈரலீஸ்

புகழ் பெற்ற

காபிதூள்

NCZ-8 TH

பருத்தி நூல்களுக்குப் பிரதான ஸ்தாபனம்

# மதுரை மில்ஸ் கம்பெனி லிட்.

**மதுரை - தூத்துக்குடி - அம்பாசமுத்திரம்**

**5,00,000 நூற்கும் கதிர்கள் நம்பர் 80 வரை நூல்கள்**

**எங்களுடைய விசேஷமான நூல்கள்:** ஒத்தை நூல், இரட்டை நூல், பனியன் நெசவுக்கேற்ற கோன் நூல், மில் நெசவுக்கேற்ற சீஸ் நூல், முறுக்கேற்றிய நூல்.

**நாங்கள் சப்ளை செய்வது:** கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கு வேண்டிய காரிக்கன் நூல்கள், இயந்திர நெசவுக்கேற்ற வார்ப்பு நூல்கள் கனத்த வெப்பிங். கான்வாஸ் முதலியவைகளுக்கேற்ற மடக்கு இரட்டை நூல்கள், மற்றும் பின்னல் இயந்திர நெசவுக்கேற்ற மிருதுவான சன்ன நூல்கள். எங்கள் எகிப்திய பருத்தி நூல்கள் இறக்குமதியாகும் நூல்களைப்போல் எல்லாவகையிலும் கீர்த்தி பெற்றவை. நாங்கள் நூற்பதைத் தவிர நெய்வதில்லை.

மானேஜர்கள்: ஏ: & எப்: ஹார்வி லிமிடெட்



நவீன

# எடர்ன

கைகெடிகாரங்கள்

கனவான்களுக்கு

9523...8/0" பளபளப்பான முகப்புள்ள ஸ்டீல் கேஸ், மெருகேற்றிய பிடிகளுள்ளது...ரூ. 213.

9052...11-1/2" அழகிய 40 மைக்ரோன் ரோல்டுகோல்டு முகப்புடன் ஸ்டீல் பின் பக்கமுள்ள வாடர் ப்ரூப் கேஸுடன் கூடியது...ரூ. 214.

9473...7-3/4—11" நேர்த்தியாக மெருகூட்டி வளைந்த நீண்ட சதுர ஸ்டீல் கேஸ்...ரூ. 198.

இதர மாடல்களைப் பற்றிய எங்கள் விசேஷ அட்டவணைத்தாளுக்கு எழுதுங்கள்

9523

9052

9473







பேவர் லூபா & கோ., லிட்., பம்பாய் - கல்கத்தா

## வரவேற்பு!














மலர் 10 இதழ் 10 | அக்டோபர் 8 | விக்ருதி புரட்டாசி 22




*"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள் ; சம்பவங்களும் கற்பனையே.*

## தசரா விசேஷ விற்பனை

# R. S. E.

★

வழக்கம்போல் இதுவரை தங்களுக்குத் திருப்திகரமான தசரா பட்டுச் சேலைகள், பாவாடைகள் தயார் செய்து அளித்ததுபோல் இந்த தசரா வுக்கும் மிகவும் உயர்ந்த வேலைப்பாடுகள் கூடிய அசல் கொள்ளேகாலம் பட்டுச் சேலைகள், பாவாடைகள் தயார் செய்து தருவித்துள்ளோம்.

- ★ அழகான பார்டர்கள்
- ★ நவீன டிஸைன்கள்
- ★ கண்ணைக் கவரும் கலர்கள்
- ★ அற்புதமான வேலைப்பாடு
- ★ உத்திரவாதமான சரக்கு

இன்றே விஜயம் செய்து தங்களுக்குத் தேவையானதை பொறுக்கி எடுத்துச் செல்லக் கேட்டுக் கொள்ளுகிறோம்.

★

## — ராதா —

## ஸில்க் எம்போரியம்

போன்: 84188

14, சன்னதி தெரு, மயிலாப்பூர், சென்னை

★

## ருக்மணி ஸில்க் எம்போரியம்

போன்: 58

48-49, பெரிய தெரு, கும்பகோணம்

## மதுரை சௌராஷ்டிர ஹைஸ்கூல் நிதிக்காக



ஸ்ரீமதி

## எம். எஸ். சுப்புலக்ஷ்மி

உதவும் சங்கீதக் கச்சேரி

★

12 - 11 - 50 ஞாயிற்றுக்கிழமை

மாலை 5 - 30 மணிக்கு

★

மதுரை மா நகரில்
ராமனுஜபுரம் ரஸ்தாவிலுள்ள
மோஹன் ராம் கம்பெனி
காம்பவுண்டில் நடைபெறும்

★

டிக்கட்டுகள்:

ரூ. 250, 100, 50, 25, 10 & ரூ. 5



மலர் 10 கல்கி இதழ் 10

# என்ன சேதி ?

## வாயடைத்துப் போனார்கள்

அந்தக் காலத்திலே, அதாவது பாரத நாட்டின் சுதந்திரப் போர் உச்ச நிலையில் இருந்த காலத்திலே, சிலர் அடிக்கடி மாபெரும் தலைவர்களைப் பற்றிச் சரடு விடுவது உண்டு. காந்திஜிக்கும் பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கும் அபிப்பிராய பேதம் ஏற்பட்டு முற்றி வருவதாக அடிக்கடி ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமான பத்திரிகைகளில் செய்தி வெளியாகி வந்தது. காந்திஜியின் ஸ்தானத்தை ஜவாஹர்லால்ஜி ஆக்கிரமித்துக் கொள்ள விரும்புகிறார் என்று கூடச் சில பத்திரிகைகள் கூசாமல் கயிறு திரித்தன. அந்த வதந்திகளால் ஜனங்கள் கலக்கம் அடைந்தார்கள். எனவே, அந்த ஆதாரமற்ற கூற்றுகளை லட்சியம் செய்து மறுப்பு விடுக்கும்படியான அவசியம் தலைவர்களுக்கு ஏற்பட்டது.

"ஜவாஹர்லால்ஜிக்கும் எனக்கும் அபிப்பிராய பேதமா? வேடிக்கையாக இருக்கிறதே! ஜவாஹரைத் திருப்தி செய்வதற்காக நான் என் அபிப்பிராயத்தையே மாற்றிக் கொள்ளத் தயாராக இருக்கும்போது எங்களுக்குள் அபிப்பிராய பேதம் எப்படி ஏற்பட முடியும்?" என்று காந்தி மகான் கூறி வதந்திப் பிரியர்கள் வாயடைத்துப் போகும்படி செய்தார்.

"என்ன அக்கிரமம்? காந்திஜியின் ஸ்தானத்தை நான் ஆக்கிரமித்துக் கொள்வதா? அந்த ஸ்தானத்தை காந்திஜி உதறித் தள்ளி விடாமல் இருப்பதற்காக நாங்கள் படாதபாடு பட்டு வருகையில், அவரது ஸ்தானத்தை மற்றொருவர் ஆக்கிரமித்துக் கொள்வது என்ற பிரச்னையே எழ இடம் ஏது?" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு சொல்லிக் கயிறு திரித்தவர்களைப் பார்த்து எல்லோரும் வயிறு குலுங்கச் சிரிக்கும்படி செய்தார்.

## "நான் துரோகியல்ல"

அது போலவே சென்ற சில மாதங்களாக ஒரு வதந்தி உலாவி வந்தது. பண்டித ஜவாஹர்லால் நேருவுக்கும் சர்தார் பட்டேலுக்கும் அபிப்பிராய பேதம் முற்றி வருகிறது என்பதுதான் அந்த வதந்தி. இடைவிடாது அந்தப் பிரஸ்தாபம் இருந்து வந்ததால், அதில் ஏதாவது உண்மை இருக்கக் கூடுமோ என்று பலரும் எண்ணுவது இயல்புதானே! ஆனால் அத்தகைய வதந்திக்கு எள்ளளவும் ஆதாரம் இல்லை என்பது இப்போது ஐயந்திரிபுக்கு இடமின்றித் தெளிவாகி விட்டது.

இந்தூரில் கஸ்தூரிபாய் கிராமத்தின் அஸ்திவார விழாவை நடத்தி வைத்துச் சர்தார் பட்டேல் பேசியபோது மேற்படி வதந்தி வெறும் பொய் என்று வியக்தமாகக் குறிப்பிட்டார்.

"நாங்கள் எல்லோரும் காந்திஜியினால் நிறுவப்பட்ட சுதந்திர இராணுவத்தைச் சேர்ந்த சிப்பாய்கள். அரசியலில் பிரதம மந்திரி நேருதான் யாரும் மறுக்க முடியாத தலைவர் ஆவார். பாபு அவருடைய ஆயுள் காலத்திலேயே பண்டித நேருவைத் தமது வாரிசாகத் தேர்ந்தெடுத்தார். தம்முடைய பொறுப்புகளையெல்லாம் தமக்குப் பின் பண்டித நேரு தான் வகிக்க வேண்டும் என்று காந்திஜி அடிக்கடி பிரகடனம் செய்து வந்தார். எனவே மகாத்மா காந்தியின் அந்த அபிலாஷைக்கு மரியாதை கொடுக்க வேண்டியது நம்முடைய முழுமுதற் கடமையாகும். காந்திஜியின் மேற்படி அபிலாஷையை நான் எப்படி மறக்க முடியும்? காந்திஜியினுடைய இராணுவத்தைச் சேர்ந்த சிப்பாய்களில் நான் துரோகியல்ல."

இவ்வாறு சர்தார் பட்டேல் கூறியிருக்கும் உருக்க மொழிகள் பாரத நாட்டு மக்களுக்கு மிகுந்த நம்பிக்கையையும் மகிழ்ச்சியையும் கொடுக்கும் அல்லவா?

## அபஸ்வரம் கேட்கிறது!

ஜனங்களுக்கு உற்சாகமும் ஊக்கமும் ஏற்படும்படியாக நமது தலைவர்கள் பேசி வரும் இச் சமயத்தில் காங்கிரஸ் அக்கிராசனர் ஸ்ரீ புருஷோத்தமதாஸ் தாண்டன் கல்கத்தாவில் நிகழ்த்தியுள்ள பிரசங்கம்

# நம்பிக்கை....


ஜெனரல் மெக் ஆர்தர் வெற்றி
பெற்று முன்னேறுகிறார்....


.... பிரிட்டிஷ்
இராணுவமும் துணை
செல்கின்றது ....


.... ஆஸ்திரேலியத்
துருப்புகள் கொரியாவில்
இறங்கியிருக்கின்றன...


...இராணுவ உதவி புரிய
முன் வராத ஐரோப்பிய நாடுகள்
வாய் உதவி புரிகின்றன....
நான் அப்போதே
சொல்லவில்லியா?
ஹாலந்து
ப்ரான்ஸ்


...ட்ருமன் சந்தோஷத்-
திலை பூரித்துப்
போகிறார்....


நம் கவலே
தீர்ந்து விடவில்லே.
தேர்தல் வருகிறது,
ஞாபகம் இருக்
கட்டும்.
அக்கீஸன்

# ....நிறைவேறுமா?



... ஆனால் உலக அமைதிக்காகப் பாடுபடும் ஐ.நா. சபைக்குள் அமைதி ஏற்படுமா?....
ஐ.நா. சபை
... அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் சமரசம் ஏற்படுமா?....
.... வெகு உயரத்தில் ஏறி உட்கார்ந்திருக்கும் விலைகள் கீழே இறங்குமா?.
விலைகள்




தெற்கு கொரியா யுத்தம் முடிந்து விட்டது. இன்னும் கீழே இறங்க மனம் இல்லையா?
SHASTRI

அபஸ்வரம் போல் ஒலிப்பது வருந்தத்தக்க விஷயம் ஆகும். பாகிஸ்தானிலிருந்து சொத்து சுதந்திரத்தையும் உற்ருர் உறவினரையும் விட்டு விட்டு இந்தியாவில் அடைக்கலம் புகுந்துள்ள அகதிகளுக்காகக் கண்ணீர் வடிக்காதவர் இந் நாட்டில் இல்லை. அவர்கள் மறுபடியும் நல்வாழ்வு நடத்துவதற்காக இந்திய சர்க்காரும் மாகாண சர்க்கார்களும் தங்களால் இயன்றதை யெல்லாம் செய்து வருகிறர்கள். அவர்களுக்காக இதுவரையில் சர்க்கார் கோடிக் கணக்காகச் செலவழித்திருக்கிறர்கள். இன்னும் கோடிக் கணக்கில் செலவு செய்யத் தயாராக இருக்கிறர்கள். அந்த அகதிகளுக்காகப் புதிய நகரங்களையும் நிர்மாணிக்கத் திட்டம் போட்டிருக்கிறர்கள். இனி யாருக்கும் அத்தகைய பரிதாப நிலைமை ஏற்படாமல் இருப்பதற்காகப் பாகிஸ்தான் சர்க்காருடன் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கிறர்கள். அப்படியிருக்க, மேற்படி அகதிகளுக்கு ஆறுதலாக ஏதாவது சொல்லி அவர்களுடைய மனப்புண் குணம் அடைவதற்கு வழி செய்வதுதான் தலைவர்களின் கடமை. அவ்விதமின்றி அவர்கள் விஷயத்தில் சர்க்கார் போதிய சிரத்தை எடுத்துக் கொள்ளவில்லை என்று அகதிகளின் கூட்டத்திலேயே கூறுவது அவர்களுடைய மனப் புண்ணில் கோலிடுவதாகும்; அகதிகள் அடைக்கலம் புகுவதற்குக் காரணமான பிரிவினையை, 'நான் அப்போதே சொன்னேனே' என்ற தோரணையில் கண்டிப்பது பழைய குப்பை கூளங்களைக் கிளறுவதாகும்.

# 38-வது அக்ஷரேகை!

பூமத்ய ரேகை:—தம்பி, 38! பேசவே மாட்டேன் என்கிறயே! உன்னைத்தான் அப்பா! காதில் விழவில்லை!

38-வது ரேகை.—ஓ, அண்ணவா! ஏதோ யோசனையாக இருந்து விட்டேன்.

பூமத்ய ரேகை:—காதில் விழாது தம்பி! நீ என்ன சாமான்யமான ஆசாமியா! ட்ரூமன் என்ன, டீன் அகிஸன் என்ன, பெவின் என்ன, பண்டித நேரு என்ன, எல்லோரும் தினம் 38 தடவையாவது உன்னை ஸ்மரிக்கிறர்கள். பத்திரிகைகளைப் பிரித்தால் உன் பெயர்தான் அடிபடுகிறது. சர்வதேச சபைகளிலும், பார்லிமெண்டுகளிலும், தெருவிலும், வீடுகளிலும் முப்பத்தி எட்டு அக்ஷரேகை! உன்னைப் பற்றிய பேச்சுத்தான். அமெரிக்கப் படைகள் 38-வது ரேகையைத் தாண்டி, வடக்கே போகுமா, போகாதா! இதுதான் உலகத்தின் கவலை. நல்ல யோகம் அப்பா உனக்கு!

38-வது ரேகை:—உன்னை விடவா நான் யோகசாலி என்கிறய்!

பூமத்ய ரேகை:—உலகம் முற்றிலுமுள்ள பூகோள உபாத்தியாயர்களும் மாணவர்களும் என்னை ஸ்மரிப்பதைவிட, இந்த இரண்டு மாதங்களில் உலக மக்கள் உன்னை ஸ்மரித்து விட்டார்கள். அப்படியிருக்கும் உனக்குக் கர்வம் வந்ததில் என்ன ஆச்சரியம்!

38-வது ரேகை:—உன் மாதிரி எல்லாரையும் நினைக்காதே. பண்டிதநேரு டெல்லிக் கப்பலில் ஏறி உன்னைத் தாண்டும்போது, உன் பெயர் பத்திரிகைகளில் அடிபட்டது. அப்பொழுது டெல்லிக் கப்பலில் நடந்த சமுத்திர ராஜன் தர்பார், பண்டிதநேரு விசாரணை எல்லாவற்றையும்விட உன் பெயர்தான் பிரமாதப் படுத்தப்பட்டது. அப்பொழுது உனக்குத்தான் தலைகால் தெரியவில்லை. என்னையும் அம்மாதிரி நினைத்து விடாதே!

பூமத்ய ரேகை:—தம்பி! ஏன் கண்ணில் ஜலம்! எதற்காக வருத்தப்படுகிறய்!

38-வது ரேகை:—அண்ணு! யோசித்துப்பாரு. எனக்கு இதைவிடக் கேவலமான நிலைமை ஏற்பட முடியுமா! அமெரிக்கா, ருஷியா இரண்டும்தான் என் பெற்ருேர்கள். நான் உதயமானதற்கே அவர்கள்தான் காரணம். இப்பொழுது அவர்களே என்னை ஒழிக்கப் பார்க்கிறர்கள். வளர்த்த கையே ஒழிக்கும் கையாக மாறுவதைப் பார்த்திருக்கிறயா! "38-வது ரேகை என்பதாக ஒன்றுமே இல்லை" என்று பெவின் சொன்னதைக் கேட்டாயா! இப்பொழுதே என்னை அவர் ரேழியில் போட்டு விட்டார்.

பூமத்ய ரேகை:—வருத்தப்படாதே தம்பி!

38-வது ரேகை:—நான் ஒழிந்து போவதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. ஆனல் என்றென்றைக்கும் அழிவில்லாத அபகீர்த்தியை அமெரிக்காவும் ருஷியாவும் எனக்கு உண்டாக்கி விடுவார்கள் போலல்லவா இருக்கிறது!

பூமத்ய ரேகை:—எப்படி!

38-வது ரேகை:—என்னைத் தாண்டி அமெரிக்கப் படை வடக்கே பிரவேசித்தால் சீனவும் ருஷியாவும் சும்மா இருக்குமா! சீன பிரதம மந்திரி சௌ என் லே பேசியதைக் கேட்டாயா! மூன்றுவது உலக மகாயுத்தம் ஆரம்பமானல் அதற்கு யார் காரணம் என்பார்கள்! 38-வது அக்ஷ ரேகையை உலகம் உள்ளளவும் வெறுப்புடன்தானே பேசுவார்கள்!

பூமத்ய ரேகை:—பயப்படாதே, தம்பி! இந்தியப் பிரதம மந்திரி பண்டித நேரு இருக்கிறர். 38-வது ரேகையை அமெரிக்கப் படைகள் தாண்டி வடக்கே போகக் கூடாதென்று அவர் அமெரிக்காவைக் கேட்டுக் கொண்டிருக்கிறர்.

38-வது ரேகை:—(கண்களில் பிரகாசத்துடன்) அவர் சொல்லை உலகம் ஏற்குமா!

பூமத்ய ரேகை:—ஏற்காவிட்டால் அவருக்கும் நஷ்டமில்லை, உனக்கும் நஷ்டமில்லை. யுத்தம் ஏற்பட்டு உலகமே அழியும்போது, உன்னைக் கேவலமாகப் பேச யார் தம்பி இந்த உலகத்தில் மீதி இருக்கப் போகிறர்கள்!

# கொண்டாட்டமும் திண்டாட்டமும்!

அதிகார வெறி, ஆதிக்க வெறி, மத வெறி, மது வெறி, மண் வெறி இவை போன்ற ஒரு சில வெறிகள் உலகத்தையே அல்லோல கல்லோலப் படுத்துகின்றன; மானிட வர்க்கத்தை ஆட்டி அலைக்கழிக்கின்றன.

இவை எல்லாவற்றையும் காட்டிலும் மிகக் கொடூரமான ஒரு வெறியும் இருக்கத்தான் செய்கிறது.

அதைத்தான் வெற்றி வெறி என்று சொல்லுகிறார்கள்.

நெப்போலியன் சக்கரவர்த்தி காலத்திலும் அதற்கு முன்னும் பின்னும் மேற்படி கொடிய வெறிக்கு எத்தனையோ இராஜ்யங்களும் மனிதர்களும் இரையாகி யிருக்கிறார்கள்.

"வீரனுக்கு வெற்றிதான் முக்கியம்; மிருகங்களுக்கோ வெளில் வெற்றி முக்கியம் அல்ல, இரைதான் முக்கியம்" என்கிறார் ஒரு பிரமுகர்.

வீரனுக்கு வெற்றி புகழையும் பெருமையையும் கொடுக்கிறது. எனினும் வெற்றி உணர்ச்சி எல்லை கடந்து போகும்போது வெறியாகவும் வஞ்சமாகவும் மாறி விடுகிறது.

"வெற்றியடைந்த பின் வஞ்சம் தீர்ப்பது வீரனின் இயல்பு அல்ல" என்று மகாகவி ஷேக்ஸ்பியர் வீரனின் இலட்சணத்தை வர்ணித்திருக்கிறார்.

வெற்றி வெறியும் வஞ்ச புத்தியும் எதிர்காலத்தில் பற்பல கஷ்டங்களுக்கு விதையாக அமைகின்றன.

முதலாவது மகா யுத்தத்திலும் இரண்டாவது மகா யுத்தத்திலும் வெற்றி பெற்ற வல்லரசுகள் வஞ்ச புத்தியை விட்டிருந்தால், இன்று உலகத்திலுள்ள பல நாடுகளிலும் ஏற்பட்டுவரும் கொந்தளிப்புகளும் குமுறல்களும் குட்டி யுத்தங்களும் ஓரளவாவது தவிர்க்கப் பட்டிருக்கலாம்.

* * *

தென்கொரியாமீது படையெடுத்த வட கொரியர்கள் ஒரு சில வாரங்களில் மளமளவென்று முன்னேறித் தென் கொரியாவில் முக்கால் பாகத்தை ஆக்கிரமித்துக் கொண்டார்கள். அவர்களுடைய திடீர் வெற்றிகள் எல்லோருக்கும் ஆச்சரியத்தைக் கொடுத்தன.

ஆனால் சக்கரம் ஒரு தடவை சுழன்று இப்போது நிலைமை மாறிவிட்டது!

அமெரிக்கர்களே பெரும்பாலோராக உள்ள ஐ. நா. துருப்புகள் பின்புறமாக இறங்கித் தென் கொரியாவின் தலைநகரைக் கைப்பற்றிய உடனே, வடகொரியர்களின் எதிர்ப்பு மறைந்து மாயமாகப் புகைந்து விட்டது என்று செய்திகள் கூறுகின்றன.

எனினும் தலைநகரில் தெருத் தெருவாகப் போர் நடந்தது என்றும், பெண்களும் போரில் ஈடுபட்டார்கள் என்றும் வெளியாகியுள்ள செய்திகளிலிருந்து அந்நகர மக்களும் கட்டிடங்களும் என்ன பாடு பட்டிருக்க வேண்டும் என்பதை ஊகித்துக் கொள்ளலாம். ஆயினும் என்ன? யுத்த ஆரம்பத்தில் ஓடிப்போன தென் கொரியா தலைவர் ஸிங்மென் ரீ, தலைநகரான ஸியோலை அமெரிக்கத் துருப்புகள் கைப்பற்றியதும் மறுபடியும் திரும்பி வந்தார். ஜெனரல் மெக் ஆர்தர் அவரை ஆசிர்வதித்து அவர் கையிலே மீண்டும் நிர்வாகத்தை ஒப்புவித்தார்.

அவ்வாறாக, கொரியா மக்கள் இண்டாடுகையில் வெற்றி விழா ஆடம்பரமாகக் கொண்டாடப்பட்டதாம்!

வெற்றி பெற்றிருக்கும் அமெரிக்கத் துருப்புகள் தென் கொரியா எல்லையைத் தாண்டி வட கொரியாவுக்குள் பிரவேசித்திருக்கின்றன.

இதை எழுதும்போது கிடைத்துள்ள செய்திகளிலிருந்து அமெரிக்கத் துருப்புகள் வட கொரியாவில் அதிவேகமாகச் சில மைல்கள் முன்னேறிச் சென்று ஒன்றிரண்டு நகரங்களைக் கைப்பற்றி யிருப்பதாகவும் தெரிகிறது.

தெற்கு கொரியாமீது வடக்கு கொரியா படையெடுத்தபோது அந்தச் செய்கை அக்கிரமமானது என்று ஐக்கிய நாடுகள் சபை கண்டித்தது. வடக்கு கொரியா துருப்புகள் தெற்கு கொரியா எல்லையிலிருந்து பின் வாங்கி விட வேண்டும் என்றும் கண்டிப்பாகக் கட்டளை யிட்டது.

அந்தக் கட்டளைக்கு வட கொரியா இணங்கியிருந்தால், கொரியா தேசத்தின் நிலைமை இவ்வளவு படுமோசமாகப் போயிராது.

வடக்கு கொரியாத் துருப்புகள் தென் கொரியாப் பிரதேசங்களை அழித்து வருகையில், அமெரிக்க வெடி குண்டு விமானங்கள் வட கொரியா நகரங்களை நாசமாக்கும் கைங்கர்யத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்தன.

அதனால் நிரபராதிகளான வட கொரியா மக்கள் ஈசல்களைப் போல மடிந்ததாக ருஷ்யப் பிரதிநிதி ஐ. நா. சபையில் கண்ணீர் வடித்தார்.

ருஷ்யப் பிரதிநிதியின் கூற்று, குழந்தையையும் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுகிற கதையாக இருக்கிறது.

ருஷ்யாவின் பக்க பலம் இராவிடில் வடக்கு கொரியா தெற்கு கொரியா மீது துணிந்து படை யெடுக்க முற்பட்டிராது. தென் கொரியாவும் அமெரிக்கர்களுடைய பக்க பலம் இராவிடில் கடுமையான போர் ஏற்படும் படியான நிலைமைக்கு இடம் கொடுத்திராது.

ருஷ்யாவும் அமெரிக்காவும் கொரியாப் பிரச்னையில் தலை யிட்டிராவிட்டால், கொரியா யுத்தமே ஏற்பட்டிராது எனலாம். ஒருவேளை உள் நாட்டு யுத்தம் ஏற்பட்டிருந்தாலும் அதனால் கொரியா மக்களுக்கு இப்போது நேர்ந்ததைப் போல அவ்வளவு அதிகக் கஷ்டநஷ்டங்கள் நேர்ந்திராது.

இப்போது கொரியாவுக்கு ஏற்பட்டிருக்கும் நஷ்டத்துக்கும் கொரியா மக்களுக்கு நேர்ந்துள்ள உயிர்ச்சேதத்துக்கும் யார் பொறுப்பாளி?

கொரியாவுக்காகப் பரிந்து பேசும் ருஷ்யாவும் அமெரிக்காவும்தான்!

கொரியாவில் "உண்மையான" குடியரசு ஏற்பட வேண்டும் என்பதற்காக ருஷ்யா வடக்கு கொரியாவைப் போருக்குத் தூண்டியது.

கொரியா வட கொரியா என்றும் தென் கொரியா என்றும் பிரிந்து இருக்கக் கூடாது; இரண்டும் ஐக்கியம் அடைந்து ஒரே கொரியாவாக விளங்க வேண்டும் என்பதற்காக இப்போது வெற்றி அடைந்துள்ள அமெரிக்கத் துருப்புகள் வடக்கு கொரியாவுக்குள் பிரவேசித்திருக்கின்றன.

இவ்வாறாக, எல்லாம் கொரியா மக்களின் 'நன்மை'க்காகவே நடைபெற்றிருக்கின்றன!

* *

கொரியா யுத்தம் மற்ற இடங்களில் பரவி உலக மகாயுத்தம் ஆகிவிடாமல் இருக்க வேண்டுமாயின் சீனாவிலிருந்தோ, ருஷ்யாவிலிருந்தோ கொரியாவுக்குத் துருப்புகள் வரக்கூடாது என்று சில தினங்களுக்கு முன் அமெரிக்க ஜனாதிபதி ட்ருமன் ஒரு நிபந்தனை விதித்தது ஞாபகம் இருக்கலாம்.

தென் கொரியாவில் வெற்றி பெற்றுள்ள அமெரிக்கா இப்போது அதே நிபந்தனையைத் தனக்குத்தானே விதித்துக் கொள்ளுமாயின் கொரியா யுத்தம் உலக யுத்தமாக மாறாமல் தடுப்பதற்கு உதவி புரிவதாக இருக்கும்.

ஆனால், வடகொரியாவில் தற்போது அமெரிக்கத் துருப்புகள் பிரவேசித்திருப்பதிலிருந்து மேற்படி நிபந்தனைக்கு அமெரிக்கா கட்டுப்படப் போவதில்லை என்பது தெரிந்து விட்டது.

அமெரிக்கத் துருப்புகள் தெற்கு கொரியா எல்லையைத் தாண்டலாமா என்பது பற்றிச் சர்வ தேச ராஜதந்திரிகள் மும்முரமான சர்ச்சையில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

தற்போதுள்ள நிலைமையில் வடக்கு கொரியாவில் அமெரிக்கத் துருப்புகள் பிரவேசிப்பது நியாயமாயின், அங்கு தங்களுடைய துருப்புகளும் பிரவேசிப்பது நியாயம் என்று சீனாவும் ருஷ்யாவும் கூற முன் வரலாம் அல்லவா?

கொரியா யுத்தம் உலக யுத்தமாக மாறாது என்று சமீப காலம் வரையில் கூறி வந்தவர்கள், இப்போது நம்பிக்கை இழந்து தங்களுடைய அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ளும்படியான நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

"அமெரிக்கத் துருப்புகளால் ஏற்பட்டுள்ள புதிய நிலைமை, யுத்தம் மற்ற இடங்களுக்கும் பரவலாம் என்ற பீதியை மறுபடியும் உண்டுபண்ணியிருக்கிறது. கொரியா யுத்தத்தைச் சீக்கிரமாக ஒரு முடிவுக்குக் கொண்டு வரா விட்டால், அந்த நாடு அடியோடு அழிந்துவிடும். பின்னர், கொரியாவின் சவத்தை வைத்துக்கொண்டுதான் சமாதானப் பேச்சு வார்த்தைகளை நடத்தும்படி நேரும்!" என்று பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியிருக்கிறார்.

"வெற்றி பெற்றுள்ள அமெரிக்கத் துருப்புகள் தென் கொரியாவின் எல்லையைக் கடந்து செல்லப் போவதில்லை; சமாதான முறையிலேயே கொரியாப் பிரச்னையைத் தீர்க்கப் போகிறது" என்று ட்ருமன் அறிவித்திருந்தால் எவ்வளவு பெருந்தன்மையாக இருக்கும்!

அவ்வாறு அமெரிக்க ஜனாதிபதி உலகத்துக்கு அறிவிப்பாராயின் அமெரிக்காவின் அந்தரங்க சுத்தியை யாரும் ஆட்சேபிக்க முடியாது. உலக சமாதானத்தில் அமெரிக்கா உண்மையான நாட்டம் கொண்டிருக்கிறது என்ற நம்பிக்கையும் உலக மக்களுக்கு ஏற்படும். அதன் காரணமாகக் கொரியா மக்கள் பெருமகிழ்ச்சி அடைவதுடன், கொரியா தேசம் சீக்கிரமாக ஐக்கியம் அடைவதற்கான சூழ் நிலையும் உருவாகும்.

# பொழுது போக்கு

**" தும்பி "**

இந்த உணவுக் கவலையை விட்டு விட்டு 'அப்பாடா!' என்று ஒரு வாரமாவது இருக்கலாமென்றால், உணவுக் கவலை ஒரு பிரச்னை ரூபம் எடுத்துக் கொண்டு என்னை நிம்மதியாயிருக்கவிட மாட்டேனென்கிறது. அதே போல, டில்லி பிரம்மாக்களின் கண்களில் படாமல் ஒளிந்து கொள்ளலாமென்று நினைத்தால், அதை அவர்கள் பிடித்து வைத்துக்கொண்டு, 'உண்டு, இல்லை' என்று செய்து விடுகிறார்கள்.

தேசத்தின் உணவுப் பிரச்னையைத் தீர்க்கக் கனம் முன்ஷி முதல் மெலிந்த முனுசாமி வரையில் கூறியுள்ள யோசனைகளை யெல்லாம் நான் பத்திரிகைகளில் படித்திருக்கிறேன். அப்பயங்கர அரக்கனைக் கொன்று ஒழிக்க அவர்கள் கூறும் பலவித உபாயங்களை நான் படிக்கும் போது என் வயிறு நிரம்பி விடுவது போலிருக்கிறது. ஆனால் படித்து முடிந்தவுடன் உணவுப் பிரச்னை என்ற அரக்கன் உயிர் பெற்றுப் பசி ரூபத்தில் வந்து பயமுறுத்துகிறான்.

உலகத்தை யொழிக்க இப்போது அமெரிக்காவில் ஜலவாயுக் குண்டு கண்டு பிடித்திருப்பது போல நம் நாட்டு உணவுப் பிரச்னையை ஒரே யடியாக ஒழிக்கக் கடைசியாக ஒரு ஆயுதத்தைக் கண்டு பிடித்தே விட்டார்கள் புது டில்லி பிரம்மாக்கள்.

கூடிய சீக்கிரம் அந்தப் 'புது ஆயுத'த்தை ஒரு பெரிய இயக்க ரூபமாகப் பலப்படுத்தி உணவுப் பிரச்னையைக் குத்திக் கொன்றுக் கிழித்துவிடப் போகிறார்கள் இவர்கள். Miss A Meal A Week இயக்கத்தைத்தான் சொல்லுகிறேன். அதாவது வாரத்திற்கு ஒரு வேளைச் சாப்பாட்டைத் தேசத்து ஜனங்கள் விட்டொழித்து விட வேண்டுமென்பது இந்த இயக்கத்தின் மாபெரும் நோக்கம்.

வெகு சீக்கிரத்தில் இந்த இயக்கம் ஆரம்பித்து வைக்கப்படப் போகிறதாம். இந்த ஜனன விழாவை யொட்டி இந்த 'வாரம் ஒரு வேளைச் சாப்பாட்டை விட்டொழி' இயக்கத்தைப் பற்றிய எழுபது பக்கங்கள் கொண்ட ஒரு சிறு புத்தகம் வெளியிடப் போகிறார்களாம். பத்து லக்ஷம் பிரதிகள் இந்த இயக்கத்தின் நோக்கத்தை இலவசமாகப் பரப்பப் போகின்றனவாம். எழுபது பக்கங்களுள்ள இப்புத்தகத்தில் முப்பது பக்கங்கள் ஆசிச் செய்திகளையே அடைத்துக் கொள்ளுமென்றால் இவ்வியக்கத்தின் பெருமையை அதிகமாகச் சொல்ல வேண்டாம்.

உணவுப் பிரச்னையைத் தீர்த்துக் கட்டக் கையாளப்பட்ட மற்ற வழிகளையும் போல் இதுவும் கட்டாயம் வெற்றியே பெறும் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. ஆனால் சந்தேகப் பேர்வழியான எனக்கு இதைப் பற்றிப் பல சந்தேகங்களில்லா விட்டாலும் இரண்டே இரண்டு சந்தேகங்களிருக்கின்றன. ஒன்று முப்பத்தைந்து கோடி ஜனத்தொகையுள்ள நம் நாட்டிற்குப் பத்து லட்சம் பிரதிகள் போதுமா! இரண்டாவது, இப்புத்தகத்தின் ஒரு பிரதியின் எடை எவ்வளவு! ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத இக்கேள்விகளைக் கண்டு நீங்கள் திகைக்கிறீர்கள் அல்லவா! சற்று ஆழ்ந்து கவனித்தால் ஆழம் தெரியும்.

இரண்டாவது கேள்வியை முதலில் எடுத்துக் கொள்வோம். எழுபது பக்கங்கள் கொண்ட ஒரு பிரதி குறைந்தது மூன்று அவுன்ஸ் இருக்கும். அதாவது நமக்குக் கொடுக்கப்படும் ஆறு அவுன்ஸ் ரேஷனில் பாதி. பத்து லக்ஷம் பிரதிகளுக்குப் பதிலாக முப்பத்தைந்து கோடி பிரதிகள் அச்சிட்டு விநியோகித்தால் தேசத்தில் எல்லாருக்கும் ஆளுக்கொரு புத்தகம் கட்டாயம் கிடைக்கும். ஒவ்வொரு வாரமும் இவ்வளவு பிரதிகள் அச்சடித்தால் இன்னும் சிலாக்கியமாயிருக்கும்.

ஆனால் விநியோகிப்பதை அரிசி ரேஷன் கடைகள் மூலமாகத்தான் செய்ய வேண்டும். அரிசி வாங்கும்போது மூன்று அவுன்ஸுக்குண்டான அரிசியைக் குறைத்துக் கொண்டு அதற்குப் பதிலாக சம எடையுள்ள அப்புத்தகத்தை இலவசமாகக் கொடுக்கச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் தேசத்தில் அரிசி யிருப்பு இரண்டு மடங்காவதோடு ஜனங்களின் கல்வியறிவும் விருத்தி யடையும்!

"வாரத்திற்குப் பதினாலு வேளைகள் சாப்பிடுபவர்கள்தானே இந்த இயக்கத்தில் சேர முடியும்! தினம் ஒரு வேளை கூடச் சாப்பாட்டிற்கு வழியில்லாதவர்கள் என்ன செய்வது!" என்று என்னைக் கேட்காதீர்கள். அப்புத்தகம் வெளிவரும் வரை பொறுத்திருக்கவும்.

* * *

ஐ. நா. சபையின் தீர்மானத்தை யொட்டி தென் கொரியாவுக்கு உதவ ஐ. நா. படைகளில் சேரப் பல தேசங்கள் போர் வீரர்களைத் தென் கொரியாவுக்கு அனுப்பியிருக்கின்றன. போர் வீரர்களை அனுப்ப முடியாத சில தேசங்கள் அனுதாபத்தை நிறைய அனுப்பித் தென் கொரியாவுக்கு உதவி புரிந்து வருகின்றன. ஆனால் பாகிஸ்தான் தென் கொரியாவுக்கு உதவ ஐயாயிரம் டன் கோதுமை அனுப்பியிருக்கிறதாம். போர் வீரர்களையும் அனுப்ப முடியாமல், அனுதாபத்தையும் தெரிவிக்க முடியாமல் இருப்பதால் தான் பாகிஸ்தான் கோதுமை மூட்டைகளைத் தென் கொரியாவுக்கு அனுப்பியிருக்க வேண்டும்.

பண்டமாற்று முறையில் ஒரு நவீனச் சோதனையைக் கையாள எண்ணிப் பாகிஸ்தான் இக்கோதுமை மூட்டைகளைத் தென் கொரியாவுக்கு அனுப்பியிருக்கலாம்.

ஒரு டன் கோதுமையை அறுபது படிக்கு ஒரு மூட்டையாகக் கட்டினால் குறைந்தது பன்னிரண்டு மூட்டைகளாவது தேறும். ஐயாயிரம் டன்களுக்கு இந்தக் கணக்குப்படி அறுபதினாயிரம் மூட்டைகள் தேறும்.

இப்படிச் செய்யும் போது ஒரு கோதுமை மூட்டைக்கு எத்தனைப் போர் வீரர்கள் சமம் என்று எனக்குத் தெரியவில்லை. ஒரு கோதுமை மூட்டைக்கு (அதைத் தூக்கிக் கொண்டு போகும் கனத்தைக் கொண்டு) இரண்டு போர் வீரர்கள் சமம் என்று வைத்துக் கொண்டால் அறுபதினாயிரம் மூட்டைகளுக்கு அதைப்போல் இரண்டு மடங்கு போர் வீரர்கள் கணக்காகும்.

ஒரு கோதுமை மூட்டைக்கு இரண்டு போர் வீரர்கள் சமம் என்றால், ஒரு புளி மூட்டை நாலு யுத்த வீரர்களுக்குச் சமம் என்று வைத்துக் கொண்டு புளி அதிகமாக உற்பத்தியாகும் தேசம் நினைக்கலாம். அதே போல காப்பிக்கொட்டை மூட்டை, பருப்பு மூட்டை, உப்பு மூட்டை, சர்க்கரை மூட்டை முதலியவைகளைப் போர்வீரர்களுக்குப் பதிலாக யுத்த முனைக்கு ஒவ்வொரு தேசமும் அனுப்பினால் சண்டை போடுவது யார்!

* * *

'உப உணவு மந்திரி சென்னை விஜயம்' என்ற செய்தியைப் பத்திரிகையில் படித்ததும் நான் திடுக்கிட்டேன். உணவுக் கொரு மந்திரி தான் முன்னமேயே இருக்கிறாரே, இப்போது உப உணவு என்ற பண்டத்திற்கும் ஒரு மந்திரி வந்து விட்டார் போலிருக்கிறது என்று நினைத்தேன். பிறகு யார் அந்த உப உணவு மந்திரி யென்று பார்த்ததும் விஷயம் புரிந்தது. நம்ம திருமல் ராவ் அவர்களின் சென்னை விஜயத்தைப் பற்றித் தான் அதில் குறித்திருந்தது.

டில்லி பார்லிமெண்டில் சில அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். மத்திய மந்திரிகளைக் கேள்விகள் கேட்டு மடக்கிக் கொண்டிருப்பதே இவர்கள் காரியம். இவர்களுடைய தொந்தரவைப் பொறுக்க மாட்டாமல் அவர்களையே சில சமயம் மந்திரிகளாக மாற்றிப் பழி வாங்குவதுமுண்டு. பிறகு அவர்களுடைய சத்தம் பார்லிமெண்டில் ஓய்ந்துவிடும். தாங்கள் முன்பு கேட்ட கேள்விகளை அங்கத்தினர்கள் இப்போது கேட்டால் புது மந்திரிகள் கேள்விகளை 'அபத்தம்' என்று தள்ளி விடுவார்கள். சில சமயங்களில் பதில் கூட வராது.

ஸ்ரீ திருமல் ராவ் அவர்களும் முன்பு பார்லிமெண்டில் உணவுப் பிரச்னையைப் பற்றிப் பல கேள்விகள் கேட்டுச் சர்க்காரைத் திணற அடித்துக் கொண்டிருந்தார். பிறகு சில நாட்கள் அவர் சந்தடியே காணப்படவில்லை. அவர் உதவி உணவு மந்திரியாக மாறி விட்டார் என்ற செய்தி என் கண்களில் படவில்லை போலிருக்கிறது.

அவர் சென்னையில் பேசியபோது பொது ஜனங்கள் ஒத்துழைத்தால் தான் சர்க்கார் திட்டங்கள் நிறைவேறும் என்று கூறியுள்ளார். எப்படி ஒத்துழைப்பது என்று தான் நமக்குத் தெரியவில்லை!

அவரிடம் உள்ள உப உணவு மூட்டைகளில் இப்படிச் சில மூட்டைகளைத் தள்ளி விடட்டும். நாம் ஒத்துழைக்கிறோமா, இல்லையா என்று பிறகு பார்த்துச் சொல்லட்டும்!

○ ● ○




# பொன்னியின் செல்வன்

'கல்கி'

இராஜராஜ சோழனின் இளம் பிராயத்தில் சோழநாட்டிலும் ஈழ நாட்டிலும் நிகழ்ந்த மகத்தான சரித்திரக் கதை

அக்டோபர் மாதம் 29உ "கல்கி" இதழில் ஆரம்பமாகிறது

# இலங்கையில் ஒரு வாரம்

**கல்கி**

8

**ப**ள்ளிக்கூடத்தில் நான் படித்துக் கொண்டிருந்தபோது,—சில நாள் படித்துத் தொலைத்ததுண்டு என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன்,—இந்தியா தேசத்துக்கு ஒரு பெரிய ஆபத்து வந்தது. "இந்தியா கிணற்றில் விழுந்து விட்டது!" என்ற ஒரு பரிதாபமான கூக்குரல் எழுந்தது. ஆசிரியர்கள், மாணவர்கள்,—எல்லாரும் ஓடிப் போய்ப் பார்த்தோம். கிணற்றில் இந்தியா தேசம் விழுந்து தானிருந்தது. இதற்கு ஒரு பையனுடைய அஜாக்கிரதை தான் காரணம் என்றும் தெரிந்தது. ஆனால் அந்த நெருக்கடியான நிலைமையில் என்ன செய்வது என்று தெரியாமல் எல்லாரும் விழித்துக்கொண்டு நின்றார்கள். நான் அந்த நாளில் கேட்ட சில தேசியப் பிரசங்கங்களில் "தேசத்துக்காக நீங்கள் ஒரு துரும்பையாவது எடுத்துப் போட்டதுண்டா?" என்று நம் தலைவர்கள் அலறியது என் காதில் விழுந்திருந்தது. அது அச்சமயம் என் ஞாபகத்துக்கு வந்தது. உடனே, "இந்தியாவுக்காகத் துரும்பை எடுத்துப் போடுவது என்ன? ஒரு கல்லைத் தூக்கியே போடலாம்!" என்று முடிவு செய்தேன். கிணற்றில் விழுந்து முழுகாமல் தத்தளித்துக் கொண்டிருந்த இந்தியாவின் பேரில் ஒரு கல்லைத் தூக்கிப் போட்டேன். உடனே இந்தியா தேசம் ஒரு 'கீச்' சத்தம் கூடப் போடாமல் தண்ணீரில் முழுகிப் போய் விட்டது.

இவ்வாறு இந்தியாவுக்குச் சேவை செய்ததினால் நான் அச்சமயம் அடைந்த கஷ்ட நஷ்டங்களைச் சொல்லி முடியாது. அன்று முழுதும் ஆசிரியர் கட்டளைப்படி பெஞ்சியின் மேல் நிற்கும் கஷ்டம் ஏற்பட்டது. அல்லாமலும் ஒரு புதிய இந்தியா தேசப் படம் வாங்கிக்கொண்டு வந்து கொடுக்கவேண்டி இருந்தது. இதன் மூலம் மூன்றரை ரூபாய் நஷ்டமும் ஏற்பட்டது.

இதைப்பற்றி முன்னம் ஒரு தடவை நான் எழுதித்தானிருக்கிறேன். ஆயினும் சமீப காலத்தில் திருவாங்கூர்ப் பகுதியிலிருந்து. "அந்தோ! கடவுளுக்கு ஆபத்து!" "ஆகா கடவுளைக் காணோம்!" என்றும் கூக்குரல்கள் வந்த போது மேற்படி சம்பவம் என் நினைவுக்கு வந்தது. திருவாங்கூர்ப் பகுதியிலுள்ள கோயில்களிலிருந்து திடீர் திடீர் என்று விக்கிரகங்கள் காணாமற் போய் வருகின்றனவாம்! கடவுளின் விரோதிகள் அல்லது ஹிந்து மதத்தின் விரோதிகள் இவ்விதம் செய்கிறார்கள் என்று ஊகிக்கப்படுகிறது. ஆனால் மேற்படியார்கள் கடவுளையோ, ஹிந்து மதத்தையோ தாக்குவதற்கு இம்மாதிரி முறையைக் கையாளுவது பைத்தியக்காரத்தனமே யல்லவா?

இந்தியா தேசப் படம் கிணற்றில் விழுந்து முழுகுவதினால் இந்தியா தேசம் எவ்வித ஹானியும் அடைந்து விடாது. அது போலவே, விக்கிரகங்களுக்கு ஏற்படும் ஆபத்து கடவுளையோ, ஹிந்து மதத்தையோ பாதித்து விடாது. அப்படிப் பாதிக்கும் என்று நினைப்பவர்கள் அறியாதவர்கள்.

நமது முன்னோர்களாகிய மகான்கள் விக்கிரகங்களையே தெய்வம் என்று எண்ணிவிடவில்லை. எங்கும் நிறைந்த கடவுளை, நெஞ்சகத்தில் வீற்றிருக்கும் கடவுளை, நினைத்துத் துதிப்பதற்கு ஒரு சின்னமாகவே கோவில் விக்கிரகங்களைக் கொண்டார்கள். மனம் குவிந்து இறைவனை வழிபடுவதற்கு விக்கிரக ஆராதனையை ஒரு சாதனமாகவே ஏற்படுத்தியிருந்தார்கள். எனவே, இந்தியா தேசத்தின் சரித்திரத்தில் விக்கிரகங்களுக்கு அவ்வப்போது பல ஆபத்துக்கள் நேர்ந்திருந்தபோதிலும் ஹிந்து மதத்துக்குத் தீங்கு ஒன்றும் நேர்ந்திடவில்லை.

வடக்கு இலங்கை போர்ச்சுக்கீயரின் ஆட்சியில் இருந்தபோது ஹிந்து மதத்தின் தெய்வங்களுக்கு, அல்லது விக்கிரகங்களுக்கு, ஆபத்துக்கள் நேர்ந்தன! அதிர்ஷ்டவசமாக, யாழ்ப்பாணப் பகுதியிலுள்ள தமிழர்கள் நமது சமய தத்துவங்களை நன்கு உணர்ந்தவர்கள். ஆகவே, விக்கிரகங்கள் போய் விட்டனவே என்று அழுது கொண்டிருந்து விடவில்லை. விக்கிரகத்துக்குப் பதிலாக வேறு சின்னங்களை வைத்துக் கொண்டார்கள்.

யாழ்ப்பாணத்திலுள்ள நல்லூர் கந்தசாமி கோவில் உற்சவத்தைப்பற்றிச் சென்ற இதழில் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? இந்தக் கோவிலின் மூல ஸ்தானத்தில் முருகன் விக்கிரகம் இல்லை. அதற்குப் பதிலாக,

"சுற்றி நில்லாதே போ! பகையே!
துள்ளி வருகுது வேல்!"

என்று அமரகவி சுப்பிரமணிய பாரதியார் பாடிய வெற்றி வேலாயுதத்தையே பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள்.



காந்தீய சேவா சங்கக் காரியதரிசி
திரு எ. கா. வேலாயுதம் பிள்ளை

பருத்தித்துறைக்குப் போகும் வழியில் ஸ்ரீ வல்லிபுரம் என்னும் விஷ்ணு ஸ்தலத்தைத் தரிசிக்கும் பாக்கியம் எங்களுக்கும் கிடைத்தது. இந்த ஊர் ஆலயத்தின் கர்ப்பக் கிரஹத்திலும் விக்கிரகம் இல்லை. மகா விஷ்ணுவின் சின்னமாக அவருடைய கையில் ஏந்திய சக்கரத்தையே பிரதிஷ்டை செய்து பூஜை நடத்தி வருகிறார்கள். இந்த ஆலயமும் மிகவும் பரிசுத்தமாக வைக்கப் பட்டிருக்கிறது. ஸ்ரீ சக்கர ஸ்வாமியின் சந்நிதிக்கெதிரே விஸ்தாரமான வெண் மணல் பிரதேசம் கண்ணையும் கருத்தையும் கவருமாறு அமைந்திருக்கிறது. இந்த வல்லிபுர ஆலயத்தில் நடைபெறும் உற்சவங்களுக்குத் தமிழகத்திலிருந்து பிரசித்தி பெற்ற நாதஸ்வர வித்வான்களைத் தருவிப்பார்களாம். வெண்ணிலவில் வெண் மணலில் பதினாயிரம் இருபதினாயிரம் மக்கள் திரண்டிருந்து நாதஸ்வரத்தின் இசையைக் கேட்டுப் பரவசமடைவார்களாம். இதையெல்லாம் கேட்டபோது,

"நேற்று முன்னாளில் வந்த உறவன்றடா—இது
நேடும் பண்டைக்கால முதல் நேர்ந்து
வந்ததாம்!"

என்ற பாரதியார் வாக்கு என் நினைவுக்கு வந்தது. தமிழகத்துக்கும் ஈழத்துக்கும் ஏற்பட்ட உறவு நெடும் பண்டைக் கால முதல் நேர்ந்து வந்த உறவு என்பதில் ஐயமில்லை. அந்த உறவின் அழியாத சின்னங்களாக இது போன்ற ஆலயங்கள் விளங்குகின்றன. இராஜ ராஜ சோழன் ஈழத்தை வெற்றி கொண்டு பொலன்னருவா (புலஸ்திய நகர்) என்னும் அப்போதைய தலைநகருக்கு ஜனநாதபுரம் என்று புனர்ப் பெயர் அளித்து அரசு புரிந்த காலத்திய சிவன் கோயில்கள் இன்னமும் அந்தப் புலஸ்திய நகரில் இருக்கின்றன. இராஜராஜன் காலம் 950 வருஷங்களுக்கு முந்தியது. அதற்கும் இரு நூறு வருஷங்களுக்கு முன்னால் ஸ்ரீ சுந்தர மூர்த்தியும் இன்னும் நூறு ஆண்டுக்கு முன் ஸ்ரீ ஞான சம்பந்தரும் இலங்கையில் இருந்த சிவன் கோயில்களைப் பற்றிப் பாடியிருக்கிறார்கள். அப்படி அவர்களால் பாடப்பெற்ற கோயில்களில் ஒன்று மன்னார் தீவில் பாலாவி நதிக்கரையில் மாதோட்டம் என்னும் ஊரில் இருந்தது. இந்தக் கோயிலுக்கு அந்நாளில் திருக்கேதீசுவரம் என்று பெயர். சம்பந்தர்—சுந்தரர் காலத்தில் இந்தக் கோயில் இராமேசுவரம் கோயிலைப்போல் அவ்வளவு பெரிதாயிருந்ததாம். சேதுக் கரையில் நின்று பார்த்தால் கோபுரம் தெரிந்ததாம். எனவே, ஸ்ரீ சம்பந்தரும் சுந்தரரும் இராமேசுவரக் கடற்கரையில் நின்று தரிசித்துத்தான் திருக்கேதீசுவரத்தைப் பற்றிப் பாடினார்கள் என்பது ஒரு சாராரின் கருத்து.

ஆனால் இது தவறான கருத்து என்று நான் எண்ணுகிறேன். ஸ்ரீ ஞானசம்பந்தரும் சுந்தரரும் இலங்கையிலுள்ள சிவஸ்தலங்களுக்குப் போய்த் தரிசித்திருந்தால் தான் அவ்வளவு தத்ரூபமாய்ப் பாடியிருக்க முடியும். கடல் கடந்து செல்வது ஆசாரத்துக்கு விரோதம் என்ற குருட்டுக் கொள்கை பிற்காலத்தில் தமிழகத்தில் தோன்றியது. எனவே சம்பந்தரும் சுந்தரரும் கடல் கடந்து போயிருக்கவே மாட்டார்கள் என்று வைத்துக் கொண்டு இந்தக் கரையிலிருந்தே பாடினார்கள் என்று கற்பனை செய்திருக்க வேண்டும்.

இதன் உண்மை எப்படியானாலும் சம்பந்தர் காலத்திலேயே இலங்கையின் வட பகுதியில் பிரசித்தமான சிவாலயங்கள் இருந்தன என்று ஏற்படுகிற தல்லவா? சம்பந்தருடைய காலம் இன்றைக்கு 1,300 வருஷங்களுக்கு முன்பு என்பது சரித்திரத்தில் முடிவு கண்ட உண்மை. எனவே, அதற்கும் முற்பட்ட மிகப் பழமையான காலத்தில் தமிழர்கள் இலங்கையில் குடியேறிச் சைவ சமயத்தை வளர்த்துச் சிவாலயத் திருப்பணிகளும் செய்திருக்கவேண்டும்.

திருக்கேதீசுவரம் ஆலயம் இப்போது அழிந்து பாழ்பட்டுக் கிடக்கிறது. காலம் என்னும் அரக்கனோ, யுத்தம் என்னும் பூதமோ அல்லது மதத் துவேஷம் என்னும் பிசாசோ அந்த ஆலயத்தை விழுங்கியிருக்க வேண்டும். திருக்கேதீசுவரம் ஆலயம் இருந்த இடத்தில் வேறொரு புதிய ஆலயத்தை நிர்மாணிப்

பதற்குப் பெரும் பிரயத்தனம் ஒன்று இலங்கையில் தொடங்கியிருக்கிறார்கள். இந்த முயற்சிக்குப் பிரபல இலங்கை இந்தியர்களின் ஆதரவு இருக்கிறது. எந்த இடத்தில் புதிய ஆலயத்தை நிர்மாணிக்கலாம் என்றும், எப்படி அதை நிர்மாணிக்கலாம் என்றும் யோசனைகள் நடந்து வருகின்றன. இதற்காகத் தமிழ் நாட்டிலிருந்து ஆலய நிர்மாண ஆராய்ச்சி நிபுணரான ஸ்ரீ வி. எம். நரசிம்மன் யோசனை சொல்ல அழைக்கப்பட்டுப் போயிருக்கிறார் என்று அறிந்து மகிழ்கிறேன். இந்த ஸ்ரீ வி. எம். நரசிம்மன் இக்காலத் தமிழர்கள் கம்பரைப் படித்துத் தெரிந்துகொள்ள உதவுமாறு உரையுடன் கம்பராமாயணத்தைப் பதிப்பித்த ஸ்ரீ வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரியார் அவர்களின் புதல்வர். ஆலயச் சிற்பங்களைப் பற்றி நன்கு ஆராய்ச்சி செய்து பல அரிய கட்டுரைகளை எழுதியிருக்கிறார். கட்டிட நிர்மாணத் துறையில், அவருடைய புலமையைக் குறிக்கும் பல இந்திய—ஆங்கிலப் பட்டங்கள் பெற்றவர்! ஸ்ரீ நரஸிம்மன், B. A., B. E. A.M. I E., M.R. San. I (Lon.) அவர்கள் இலங்கைக்குச் சென்று திருக்கேதீசுவர ஆலயத்தைப் புதுப்பிக்க உதவி புரிவது தமிழ் நாட்டுக்கும் இலங்கைக்கும் உள்ள நீடித்த கலாச்சார உறவை மறுபடியும் புதுப்பித்து நிலைநிறுத்தி உறுதிப்படுத்துவதாகும்.

* * *

தாய் நாட்டில் உள்ளவர்கள் சேய் நாட்டுக்குப் போய்ப் பார்க்கும்போது அங்கே காணும் நல்ல அம்சங்களைக் கவனித்துக் கொண்டு வருவதுதான் நியாயம். நல்லதல்லாத அம்சங்கள் பலவும் இருக்கக் கூடுந்தான். ஆனால் அவற்றை ஆராய்வது ஒரு வாரத்து விருந்தினராகப் போகும் நம்முடைய கடமையன்று. மிஸ் மேயோவின் வேலை செய்கிறவர்கள் வேறு யாராவது இல்லாமலா போகிறார்கள்? ஆகவே மனதிற்கு மகிழ்ச்சி தரக்கூடிய நல்ல அம்சங்களைப் பற்றி மட்டுமே இதுவரை எழுதி வந்திருக்கிறேன். ஆயினும் மிகவும் வருந்தத்தக்க ஒரு நிலைமையைப் பற்றிச் சொல்லித் தீரவேண்டியிருக்கிறது. தமிழ் நாட்டைக் காட்டிலும் பிற்போக்கான நிலைமை ஈழ நாட்டில் ஒரு துறையில் இருந்து வருகிறது. அதுதான் தீண்டாமை ஒழிக்கும் துறை. ஹரிஜனங்கள் என்ற மகாத்மாவினால் புது நாமகரணம் செய்யப்பட்ட நம் இன சகோதரர்களுக்குத் தமிழ் நாட்டிலுள்ள ஆலயங்களையெல்லாம் மேளதாளத்துடன் திறந்து விட்டுவிட்டோம். நமது தார்மீக வாழ்க்கையின் கேந்திர



திரு க. நவரத்தினம்

ஸ்தலங்களாகிய ஆலயங்களைப் பொறுத்த வரையில் இந்தியாவில் தீண்டாமையை ஒழித்துவிட்டோம்; ஆழக் குழி தோண்டிப் புதைத்து விட்டோம். ஆனால் ஈழ நாட்டில், கல்வியறிவில் சிறந்த தமிழ் மக்கள் வாழும் யாழ்ப்பாணப் பகுதியில், இன்னமும் தீண்டாமை அரக்கன் ஆட்சி செலுத்தி வருகிறான்! கோயில்களுக்குள் ஹரிஜனங்கள் புகக்கூடாது என்று வழி மறிக்கிறான். இந்த வெட்கக் கேட்டை என்னவென்று சொல்வது?

யாழ்ப்பாணத் தமிழர் சமூகத்துக்கு இது எவ்வளவு பெரிய அவகேடு என்பது, பருத்தித் துறைக்குப் போகும் வழியில் உள்ள வதிரி என்னுமிடத்தில் எங்களுக்கு நன்கு தெரியலாயிற்று. அந்தக் கிராமத்தில் எங்களை வழிமறித்து நிறுத்தினார்கள். ஒரு பள்ளிக்கூடத்தில் வரவேற்பு உபசாரமும் நிகழ்த்தினார்கள். தூய கதராடை புனைந்த ஒரு நண்பர் இனிய குரலில் அழகாகவும் தெளிவாகவும் தேவாரம் பாடினார். இன்னொரு நண்பர் மிக இனிய செந்தமிழில் வரவேற்புரை நிகழ்த்தினார். சபையோரின் முகங்களில் பண்பட்ட கல்வியறிவின் களை குடிகொண்டிருந்தது. அவர்கள் அத்தனை பேரும் ஹரிஜனங்கள் என்பது கூட்டத்தின் இறுதியில் ஸ்ரீ பேரின்பநாயகம் சொல்லித்தான் நாங்கள் தெரிந்து கொண்டோம்; தெரிந்து அதிசயித்தோம். இவர்களையா ஈழ நாட்டு ஆலயங்களில் விடுவதில்லையென்று ஆத்திரமும் அடைந்தோம். அப்படியானால் திருக்கேதீசுவரம் ஆலயத் திருப்பணி

முதலிய கைங்கரியங்கள் என்னத்திற்கு என்றும் எண்ணமிட்டோம். கடவுள் அருளால் மறுமுறை நான் இலங்கைக்குப் போகநேருமானால், அப்போது ஈழநாட்டில் தீண்டாமை ஒழிந்துவிட்டது என்ற நல்ல செய்தியைக் கேள்விப்பட விரும்புகிறேன்.

வதிரி பள்ளிக்கூடத்தில் நிகழ்ந்த வரவேற்பு நிகழ்ச்சியின் முடிவில், அந்தப் பள்ளிக்கூடத்தின் நன்கொடையாளரான திரு கா. சூரன் எப்பவரை எங்களுக்கு அறிமுகப் படுத்தினார்கள். இப்பெரியார் கந்தன் சரித்திரத்தில் வரும் பெரிய கிழவனாரை எனக்கு ஞாபகப்படுத்தினர். ஆனால் அந்தப் பெரிய கிழவனாருக்கும் இந்தச் சூரனாருக்கும் வேற்றுமை மிக அதிகம். இவர் காந்திமகான் மறைந்ததும் இயற்றி அச்சிட்ட ஒரு பாடல் புத்தகத்தை எனக்கு அளித்தார். அந்தப் புத்தகத்தை ஒரு பொக்கிஷமாக நான் போற்றி எடுத்துக் கொண்டு வந்தேன்.

பாடல் ஒரு புறம் இருக்கட்டும். முகவுரையில் இவர் எழுதியிருக்கும் வசன நடைக்கு ஒரு உதாரணம் பாருங்கள்:—

"மகாத்மா மறைந்த மறு தினம் 31-1-48 சனிக்கிழமை சுமார் 7 மணிக்கு மகாத்மா அவர்களை யாரோ சுட்டதால் அவர் இறந்ததாகக் கேள்விப்பட்டேன். நான் நம்பவில்லை. சில நிமிஷங்கழித்து விஷயம் உண்மைதான் என்றும், இரவு நேருஜி அழுதழுது பேசியதாகவும் அறிந்தேன்......(மகாத்மா) மனிதனால் சகிக்க முடியாத கஷ்டங்களை யெல்லாம் மேற்கொண்டு ஜெய மடைந்த நிகழ்ச்சிகளெல்லாம் என் மனக்கண் முன் ஒன்றன் பின் ஒன்றாகக் காட்சி அளித்தன. மகாத்மா யாருக்காக மேற்படி கஷ்டங்களை அநுபவித்தாரோ அவர்களில் ஒருவனே அவருக்கு இறுதிக் காலனும் ஆனான். ஒரு புண்ணிய ஊசியானது பெரிய சேலைகளை யெல்லாம் தைத்து உடுப்பாக்கியது போலவும் ஒரு தீக்குச்சியானது எல்லையற்ற நீரைப் பரப்புவது போலவும் மகாத்மா ஆகிய சிறிய உருவம் தனது உடல் பொருள் ஆவி மூன்றையும் உலக சேவைக்கு ஒப்படைத்ததா லன்றோ இன்று எல்லா உலகமும் அவருடைய தத்துவங்களைப் பின்பற்றும்படி பிரசாரஞ் செய்து வருகின்றன!......"

எப்பேர்ப்பட்ட தமிழ் வசன நடை! அதில் என்ன உணர்ச்சி! என்ன சக்தி! 'நான் நம்பவில்லை' என்ற சின்னஞ்சிறு வாக்கியம் எவ்வளவு பொருள் பொதிந்து உணர்ச்சி ததும்பி நிற்கிறது?

இதை எழுதியவர் ஒரு ஹரிஜனர்; அதிலும் வயது முதிர்ந்த கிழவர். இத்தகைய உத்தமர்களினால்தான் உலகில் மழை பெய்கிறது. இலங்கையை அடியோடு கடல் கொண்டு போய் விடாமல் கொஞ்சம் கொஞ்சம் கரையை இடிப்பதுடன் திருப்தி யடைந்து நிற்கிறது. வாழ்க திரு சூரனார்! வாழ்க அவருடைய திருக்குலம்!—இப்படிப்பட்டவர்களை ஆலயங்களில் விட மறுக்கும் யாழ்ப்பாணத் தமிழ் மக்கள் மேற்படி அநீதியை நிவர்த்தி செய்கிற வரையில் தலையைத் தொங்கப்போட்டுக் கொண்டுதான் வாழ வேண்டும்! சிங்களவரிடம் போராடத்தான் அவர்களுக்கு வலிமை ஏற்படுமா?

## 9

நம்முடைய தமிழ் நாட்டு முன்னோர்களின் வழியைப் பின்பற்றி எங்கேயாவது ஒரு நாட்டுக்குப் படை யெடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆசை என் மனதில் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்தது. ஆனால், படை யெடுத்துச் செல்வதற்கு படையல்லவா தேவை? என்னிடம் படையில்லை. படையிருந்தாலும் தான் என்ன? ஏதோ ஈழ மக்கள் நம்மவர்களாயிற்றே என்ற உரிமையுடன் படை எடுத்துச் சென்றால் யு. என். ஓ. சங்கம் குறுக்கே வந்து தொலைக்கும். தன் மனிதர், வேற்று மனிதர் என்று பாராமல் குண்டு போட்டுக் கொல்லும்! படை யெடுப்பை அநியாயமாக வாபஸ் வாங்கவேண்டி வரும்.

படைதான் இல்லையே, பதிலுக்கு ஒரு குடையாவது எடுத்துப்போவோமென்றால் குடையும் சமயத்தில் சிக்கவில்லை. ஆகவே வெறுங் கையுடனேயே புறப்பட்டோம். வெய்யிலை வெய்யில் என்று நினையாமல், நிலாக் கதிர் என்று நினைத்துக்கொண்டு ஊர் காவற்றுறை, காங்கேயன் துறை, வல்வெட்டித் துறை முதலிய கடலோரப் பகுதிகள் வழியாகச் சென்றோம். இங்கேயெல்லாம் சமுத்திர ராஜன் சாந்த வடிவு கொண்டு இலங்குகிறான். மலைபோன்ற அலைகளும் கடலின் கொந்தளிப்பும் இல்லை. மிக அடக்கமாயிருக்கிறது நீர்ப்பரப்பு. மிருதுவான சிறு அலைகள் இலங்கா தேவியின் பாதங்களை மென்ன மென்னத் தொட்டு விட்டுத் திரும்பி விடுகின்றன. சோழ நாட்டில் உள்ள கோடிக்கரைக்கும் யாழ்ப்பாணக் கடற்கரைக்கும் ஏறக்குறைய முப்பது மைல் தூரந்தான். கோடிக்கரையில் காலையில் படகில் ஏறினால் மாலையில் இங்கு வந்துவிடலாம். முன்னாளில் பராந்தகன், இராஜராஜன், இராஜேந்திரன் முதலிய சோழ மன்னர்கள் தங்கள் மாபெரும் படைகளுடன் இந்தத் துறையிலே வந்து இறங்கியிருக்கலாம். நாவாய்கள், கப்பல்கள், தோணிகள், படகுகள், ஓடங்கள், கட்டுமரங்கள் ஆயிரக்கணக்கில் சேகரித்துப் படைகளை ஏற்றி வந்திருக்க வேண்டும். ஆனால் நாடு பிடிக்கும் ஆசையுடன் மட்

டும் அவர்கள் வரவில்லை. ஈழநாட்டு அரச குலத்தினரில் சண்டை மூண்டு, யாராவது உதவிக்கு அழைத்தபோதுதான் வந்தார்கள். வந்த இடத்தில் நல்ல அரசாட்சியை நிலைநாட்டி ஆண்டார்கள்.

அது ஒரு காலம். இப்போது என்ன நடக்கிறது தெரியுமா? கோடிக் கரைப் பக்கங்களிலிருந்து பிழைப்புக்குக் கஷ்டப்படுகிறவர்கள் கள்ளப் படகுகளில் ஏறித் திருட்டுத்தனமாக வந்து இந்தக் கரைகளில் இறங்குகிறார்களாம். இவர்கள் சிலராயிருந்தாலும் இதைப்பற்றிச் சிங்கள மந்திரிகள் பிரமாதப் படுத்துகிறார்கள்.

சில வருஷங்களுக்கு முன்னால், இந்தியாவில் அரிசிக் கட்டுப்பாடு அமுலுக்கு வந்த பிறகு, இலங்கையில் உணவு நிலைமை நெருக்கடியடைந்திருந்த போது, கோடிக் கரைப் பகுதியிலிருந்து கள்ளப் படகுகளில் இலங்கைக்கு அரிசி போய்க் கொண்டிருந்தது. கள்ளப் படகுக்காரர்கள் நல்ல விலை பெற்று லாபமடைந்து வந்தார்கள். இப்போதோ இலங்கையின் உணவு நிலைமை திருப்திகரமாகி விட்டதால் அங்கே தஞ்சை ஜில்லா அரிசிக்குக் கிராக்கி கிடையாது. இலங்கை சர்க்கார் தான் நமக்கு அரிசி கடன் தருகிறார்களே? அது ஒரு காலம்! இது ஒரு காலம்!

இப்படியாக எண்ணமிட்டுக் கொண்டும் விவாதித்துக் கொண்டும் பருத்தித் துறை போய்ச் சேர்ந்தோம். பருத்தித் துறை அன்பர்கள் எங்களுக்குக் காரசாரமான விருந்து அளித்தார்கள். பிறகு பாரமான வரவேற்பும் அளித்தார்கள். ஆம், வரவேற்பு மிகமிகப் பாரமாகவே இருந்தது. இலங்கையையே தூக்கிக் கையில் கொடுத்து விட்டார்கள்! நல்ல வேளையாக, இலங்கையை நாலு சட்டத்துக்குள் புகுத்திக் கண்ணாடியும் போட்டிருந்தபடியால் என்னால் தாங்க முடிந்தது! கனம் சேனநாயகா, பண்டார நாயகா, குணசிங்கா முதலியவர்களுடைய கண்ணில் படாமல் இந்தியாவுக்கு எடுத்துக் கொண்டு வரவும் முடிந்தது! இலங்கை தேசப் பட வடிவமாக அமைந்த அழகிய சித்திரப் பத்திரத்தில் அன்பையும் இன்பத் தமிழையும் குழைத்து இனிய கவிதையாக எழுதிக் கொடுத்தார்கள். அந்தக் கவிதையில் 'கள்வனின் காதலி' யான கல்யாணி முதல் பல கதாநாயகிகளும் கதாநாயகர்களும் பவனிவந்தார்கள். இதிலிருந்து தாய் நாட்டிலிருந்து போகும் பத்திரிகைகள்— புத்தகங்களைப் பருத்தித் துறைத் தமிழ் அன்பர்கள் எவ்வளவு ஆர்வத்துடன் படித்து மகிழ்ந்தார்கள் என்பது தெரிய வந்தது. வரவேற்பு முடிந்ததும் திரு ஏரம்பமூர்த்தி எங்கள் அருகில் வந்து, "நீங்கள் பேசவேண்டியதில்லை!" என்ற பல்லவியைப் பாடினார். "நாங்கள் ஏதாவது பேசாவிட்டால் இந்த ஊர் ரஸிகர்கள் எங்களை ஊமையென்று நினைத்துக் கொள்ள மாட்டார்களா?" என்றேன்.

"அதனால் பாதகமில்லை. இந்த நேரத்தில் இவ்வளவு பேர் வந்து கூடியதே பெரிய காரியம். மேலும் இவர்களைச் சோதிக்கக் கூடாது!" என்றார்.

"இந்த நேரத்தில் இந்த ஊர்க்காரர்கள் சாதாரணமாக என்ன செய்வது வழக்கம்?" என்று கேட்டேன்.

"மத்தியான உணவுக்குப் பிறகு சற்றுக் கண்ணயருவார்கள்!" என்றார்.

"அப்படியானால், இங்கேயே கண்ணயரட்டும்! நாங்கள் பேசியே தீருவோம்!" என்று சொல்லிவிட்டு, ஸ்ரீ தாரனும் நானும் ஒரு மணி நேரத்துக்கு மேலே வெளுத்துக் கட்டினோம். பருத்தித்துறை வாசிகளின் உச்சிப்பகல் உறக்கத்தை அன்று குட்டிச்சுவராக்கி விட்டோம்!

மறு நாள் மாலை யாழ்ப்பாணத்தில் நாங்கள் விமானமேறியபோது திரு ஏரம்பமூர்த்தியும் அவருடைய நண்பர்களும் வந்திருந்தார்கள். திரு ஏரம்பமூர்த்தி என்னிடம் அந்தரங்கமாக "ஊருக்குப் போன பிறகு தங்கள் உடல்நலத்தைக் கவனித்துக் கொள்ளுங்கள்!" என்றார்.

"அவசியம் கவனித்துக் கொள்ளுகிறேன். ஆனால் மறுமுறை இலங்கை வரும்போது பருத்தித் துறைக்கு வந்து பேசட்டுமா, வேண்டாமா? இப்பொழுதே சொல்லிவிடுங்கள்" என்றுகேட்டேன்.

"பேசுங்கள்; பேசுங்கள்! விரிவான சொற்பொழிவும் ஆற்றுங்கள்!" என்று திரு ஏரம்பமூர்த்தி அலறினார்.

இப்படிச் சொன்னால் நான் பேசாமலிருப்பேன் என்று அவருக்கு எண்ணம் போலிருக்கிறது! பார்க்கலாம் ஒரு கை!

## 10

இந்த இலங்கைக் கட்டுரைகளுக்கு மங்களம்பாடவேண்டிய கட்டம் நெருங்கி விட்டது. இவை உலகெங்கும் பெருங் கிளர்ச்சியை உண்டாக்கியிருக்கின்றன. கொரியா யுத்தம் குறுக்கிட்டிரா விட்டால், யு. என். ஓ. சபையில்கூட இக் கட்டுரைகளை நிறுத்துவது பற்றி விவாதித்திருப்பார்கள்! புது டில்லியிலுள்ள ஒரு தமிழன்பருக்கு இக் கட்டுரைகள், கவி பாட வேண்டிய அவசியத்தைக்கூட உண்டாக்கி விட்டன. 'அறு சீர்க் கெழில் நெடில் ஆசிரியக் கலித்தொகை வெண்பா விருத்தம்' தன்னில் ஐந்து விருத்தங்கள் அவர் பாடி அனுப்பியிருக்கிறார். அவ்விருத்தங்களில் மாதிரிக்கு இரண்டு வரிகளைக் கேளுங்கள்:—

"இடறி விழும் விஷயம் பற்றி இரண்டு பக்கம் வரைந்துவிட்டீர்கள்
இடறி விழுந்தால் இவ்வூரில்
இதைப் பற்றி எங்கும் பேச்சு!"

கட்டுரைகளை முடித்தே தீர வேண்டிய அவசியம் இப்போது தெளிவாய்ப் புலனாகிறதல்லவா? முடிப்பதற்கு முன்னால் யாழ்ப்பாணத்தில் நாங்கள் கலந்து கொண்ட கடைசி நிகழ்ச்சியைப் பற்றிச் சொல்லி விடுகிறேன்.

இலங்கையில் உள்ள தமிழ்ப் பிரமுகர்களுக்குள் ஸ்ரீ க. கனகரத்தினம் என்று ஒருவர் உண்டு. இவர் இலங்கை அரசாங்கத்தில் பெரிய உத்தியோகம் வகித்தவர். சில காலத்துக்கு முன்பு உத்தியோகத்தை விட்டு விலகி அரசியலில் பிரவேசித்தார். இலங்கைப் பார்லிமெண்டில் அங்கத்தினர் ஆனார். தற்சமயம் இலங்கை சர்க்கார் கல்வி இலாகாவின் பார்லிமெண்டரி காரியதரிசியாக இருந்து வருகிறார்.

தமிழிலும் தமிழிசையிலும் ஸ்ரீ கனகரத்தினம் கொண்டுள்ள பேரபிமானம் இவருக்கும் தமிழ் நாட்டுக்குமுள்ள தொடர்பை வளர்த்து வந்தது. சென்னையில் நடந்த முதலாவது தமிழிசை மகாநாட்டுக்கு வந்திருந்து கலந்து கொண்டார். பிறகு அநேகமாக ஒவ்வொரு ஆண்டின் இறுதியிலும் இவரை ஸெண்ட் மேரீஸ் மண்டபத்தில் நடைபெறும் தமிழிசைக் கச்சேரிகளில் கண்டிருக்கிறேன். இவருடன் இவருடைய புதல்வியும் மருமகரும் கூடத் தவறாமல் வருவார்கள்.



ஜனாப் ஏ. எம். ஏ. அஸீஸ்

இவ்வருஷம் மே மாதத்தில் கோவையில் நடைபெற்ற தமிழ் வளர்ச்சிக் கழக விழாவிற்கு இவர் விஜயம் செய்து, அடுத்த தமிழ் விழாவை இலங்கையில் நடத்துமாறு அழைத்தார். "கஞ்சி வரதப்பா!" என்று கேட்டதும் "எங்கே வரதப்பா!" என்று விழுந்தோடிய பக்தனைப் போல் தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரும் ஸ்ரீ கனகரத்தினத்தின் அழைப்பை ஒப்புக் கொள்ளத் தீர்மானித்தார்கள்.

இந்தச் செய்தி அறிந்ததும் ஸ்ரீ கனகரத்தினம் குதூகலம் அடைந்தார். இலங்கையில் உள்ள தமிழன்பர்கள் எல்லாருடைய கூட்டுறவையும் பெற்றுத் தமிழ் விழாவைப் பிரமாதமாக நடத்துவதென்று முடிவு செய்தார். ஸ்ரீ தூரனும் நானும் போயிருந்த சமயத்தில் யாழ்ப்பாணத்தில் ஒரு பூர்வாங்கக் கூட்டம் கூட்டினார். ஸ்ரீ கனகரத்தினத்தின் அழைப்பை ஏற்றுப் பல அரசியல் கட்சிகளைச் சேர்ந்த பிரமுகர்களும், அரசியலில் அவ்வளவாகக் கலந்து கொள்ளாத தமிழன்பர்களும் கலை அன்பர்களும் விஜயம் செய்திருந்தார்கள். ஆனாலும் இக்கூட்டத்தில் என்ன நடக்கப் போகிறதோ என்ற கவலை எல்லாருடைய மனதிலும் குடி கொண்டிருந்தது.

கூட்டத்தின் ஆரம்பத்தில், இந்தப் பூர்வாங்கக் கூட்டத்துக்கு ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களை ஸ்ரீ கனகரத்தினம் தலைவராகப் பிரேரேபித்ததும் மேற்கூறிய கவலை அநேகமாக விட்டு விட்டது. அனைவருடைய முகங்களும் மலர்ந்தன.

விஷயம் என்னவென்றால், ஸ்ரீ கனகரத்தினம் அரசியல் துறையில் ஸ்ரீ பொன்னம்பலம் கட்சியைச் சேர்ந்தவர். ஸ்ரீ எஸ். நடேசன் அவர்கள் அக்கட்சிக்கு மாறுபட்டவர். சென்ற தேர்தலில் நின்று தோற்றுப் போனவர்தான். ஆயினும் யாழ்ப்பாணத் தமிழர் சமூகத்தில் ஸ்ரீ எஸ். நடேசனுக்கு விசேஷ மரியாதை உண்டு.

இலங்கையின் முடிசூடா மன்னராக விளங்கிய ஸர் பொன்னம்பலம் ராமநாதனின் மருகர் ஸ்ரீ எஸ். நடேசன்; பரமேசுவரக் கல்லூரியின் தலைவர். தாய் நாடாகிய தமிழ் நாட்டுக்கும் சேய் நாடாகிய வடக்கு இலங்கைக்கும் நீடித்துள்ள தொடர்பிலிருந்து விளைந்த பண் பாட்டின் கனிந்த பழம் என்று ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களைச் சொல்லுவது பொருந்தும். ஆங்கிலத்திலும் தமிழிலும் நல்ல பாண்டித்யம் வாய்ந்தவர். தமிழ் நாட்டு ஈழ நாட்டுப் பழைய சரித்திரங்களை ஒப்பிட்டுச் சிறந்த ஆராய்ச்சி செய்து



ஆகாய விமான நிலையத்தில் வழி அனுப்ப வந்த நண்பர்கள்: வலப்புறமிருந்து இரண்டாவதாக நிற்பவர் திரு ஏரம்பமூர்த்தி. படத்தில் நடுநாயகமாகக் கையில் தடியுடன் நிற்பவர் திரு ஜாண்டி பேரின்பநாயகம்.

பல உண்மைகளைக் கண்டு வைத்திருப்பவர். தமிழிலக்கியம், தமிழ்க் கலைகள் சம்பந்தமாக இலங்கையில் நடைபெறும் எல்லா முயற்சிகளிலும் ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களுக்கு முக்கியமான பங்கு உண்டு. இந்த இதழ் "கல்கி" அட்டையில் ஸ்ரீ நடேசன் அவர்கள் கம்பீரத் தோற்றம் அளிப்பதை நேயர்கள் கவனித்திருக்கலாம்.

அரசியல் துறையிலாகட்டும், மற்ற எந்தத் துறையிலாகட்டும், தமிழ் மக்களிடையே ஏற்படும் வேற்றுமைகளைக் கடந்து தமிழ் மக்களை ஒன்று சேர்த்து ஒருமைப் பாட்டை நிலை நாட்டக்கூடிய சக்தி தமிழுக்கு உண்டு என்பது என்னுடைய தீர்க்க கருத்து. இதற்கு ஒரு அத்தாட்சி யாழ்ப்பாணத்திலும் கிடைத்தது பற்றி நானும் குதூகலமடைந்தேன்.

ஆனால் எங்களுடைய குதூகலத்தைக் கொஞ்சம் குறைப்பது என்று கங்கணங் கட்டிக்கொண்டு நண்பர் திரு அம்பிகை பாகன் எழுந்து நின்றார். அவர் திருவாரூரில் நடந்த தமிழ் விழாவுக்கு வந்திருந்தவர். எனவே, அவர் ஓர் எச்சரிக்கை விடுத்தார். "தமிழ் விழா நடத்துவது என்றால் எளிதில்லை. அதற்குப் பணம் வேண்டும், பிரயத்தனம் வேண்டும், பலருடைய கூட்டுறவு வேண்டும்; ஊக்கம், உற்சாகம், ஆள்கட்டு வேண்டும். இருபது, முப்பதினாயிரம் ரூபாய் வரையில் செலவு ஆகும். இதெல்லாம் நம்மால் ஆகக்கூடிய காரியமா? யோசித்து முடிவு செய்யுங்கள்!" என்றார்.

இதற்குத் தகுந்த பதில் கூறினார் ஸ்ரீ காரான சிங்கம் என்னும் அன்பர். "இந்த ஈழ நாட்டில் பெண்களுக்கு வரதட்சிணை கொடுத்துக் கல்யாணம் செய்து கொடுப்பதற்குச் சில தமிழர்கள் ஒரு லட்சம் ரூபாயும் அதற்கு மேலும் செலவு செய்கிறார்கள்! அப்படியிருக்கும்போது, நமது தமிழ்த் தாயை இங்கு அழைத்து உபசரிப்பதற்கு எல்லாத் தமிழர்களும் சேர்ந்து ஒரு முப்பதினாயிரம் ரூபாய் கொடுக்க முடியாதா? கட்டாயம் முடியும். இப்படிப்பட்ட சிறந்த திருப்பணிக்கு இந் நாட்டில் பணம் சேராது என்று சந்தேகிப்பதே அவமானமான காரியம்! விழாவை நடத்தியே யாகவேண்டும்!" என்று ஸ்ரீ காரான சிங்கம் கர்ஜித்தார்.

இதைத் தழுவியே மற்றும் சில நண்பர்களும் பேசினார்கள். கடைசியாக, தமிழ் விழாவை யாழ்ப்பாணத்தில் வருகிற 1951 மார்ச்சு அல்லது ஏப்ரல் மாதத்தில் நடத்துவதென்று ஏக மனதாகத் தீர்மானிக்கப்பட்டது. பெரிய வரவேற்புக் கழகம் நியமிக்கும் வரையில் பூர்வாங்க முயற்சிகளைச் செய்வதற்கென்று அங்கு வந்திருந்தவர்கள் எல்லாரையும் கொண்ட ஒரு குழு நியமிக்கப் பட்டது. இதற்கு ஸ்ரீ எஸ். நடேசன் அவர்களே தலைவராக நியமிக்கப்பட்டார். திரு முதலி

யார் சின்னத்தம்பி அவர்களும் திரு க. நவரத்தினம் அவர்களும் காரியதரிசிகளாக நியமனம் பெற்றார்கள்.

திரு க. நவரத்தினம் யாழ்ப்பாணத்திலுள்ள தலை சிறந்த கலை அன்பர்களில் ஒருவர். தமிழ் நாட்டுச் சிற்பக் கலையைக் குறித்து ஒரு பெரிய நூல் இயற்றியவர். இவர் காரியதரிசி என்று ஏற்பட்டதும் எழுந்து நின்று, ''இங்குள்ள அன்பர்கள் எல்லாரும் தலைக்குப் பத்து ரூபாய் அங்கத்தினர் சந்தா கொடுத்து விட்டுப் போக வேணும். அப்போதுதான் வேலை துவங்கலாம்!'' என்று சொல்லி, அவ்விதமே வசூலிக்கவும் தொடங்கி விட்டார். ''சரியான காரியதரிசிதான்; தமிழ் விழா யாழ்ப்பாணத்தில் சிறப்பாக நடக்கும் என்பதில் சந்தேகமில்லை'' என்று நானும் முடிவு செய்து கொண்டேன்.

யாழ்ப்பாணத்தில் வரும் ஆண்டில் நடக்கப் போகும் தமிழ் விழாவின் மூலம் தமிழகத்திலுள்ள இரண்டரைக் கோடித் தமிழர்களுக்கும் ஈழத்திலுள்ள இருபத்திரண்டரை லட்சம் தமிழர்களுக்கும் தொன்று தொட்டுள்ள அண்ணன்—தம்பி உறவு மேலும் வலுவடைந்து ஓங்கும் என்று நம்புகிறேன்.

''என்ன, ஐயா, இது? சென்ற இதழ்களில் பதினைந்து லட்சம் தமிழர் என்று சொல்லிக் கொண்டிருந்தீரே! அதற்குள் எப்படி இருபத்திரண்டரை லட்சம் ஆயிற்று?'' என்று நேயர்கள் கேட்பது என் காதில் விழுகிறது. பதினைந்து லட்சம் என்பது இலங்கை சர்க்கார் கொடுக்கும் கணக்கு. இப்படி வேண்டுமென்றே குறைத்துச் சொல்வதாகச் சிலர் கருதுகிறார்கள். இருபத்திரண்டரை லட்சம் என்பது தமிழரசுக் கட்சித் தலைவர் ஸ்ரீ செல்வநாயகம் கொடுத்திருக்கும் கணக்கு. இந்த இருபத்திரண்டரை லட்சத்தில் இலங்கையில் வாழும் முஸ்லிம் தமிழர்களையும் ஸ்ரீ செல்வநாயகம் சேர்த்துக் கொண்டிருக்கிறார். இப்படிச் சேர்த்திருப்பது மிகவும் நியாயமானது என்பதில் சந்தேகமில்லை. தமிழர்கள் முஸ்லிம்களானாலும் தமிழர்கள்தானே? அவர்களுடைய தாய் மொழி அரபு மொழியாகப் போய்விடாதே! தமிழ் மொழி ஒரு அற்புதமான அரவணைக்கும் மொழி. தன் நீண்ட கருணைக் கரங்களை நீட்டித் தமிழ்த் தாய் தன் எல்லாக் குழந்தைகளையும் அணைத்து ஆசீர்வதிக்கிறாள். பழைய காலத்தில் பௌத்த மதத்தைத் தழுவிய தமிழர்கள் தமிழில் சில சிறந்த இலக்கியங்களை இயற்றித் தந்தார்கள். அவ்விதமே சமண மதத்தைச் சேர்ந்த தமிழர்களும் தமிழ்க் காவியங்களை இயற்றினார்கள். சைவர்களும் வைஷ்ணவர்களும் தமிழில் அழகொழுகும் பாடல்களை அளித்தார்கள். ஏன்? கிறிஸ்துவர்கள் மட்டும் பின் வாங்கினார்களா? இல்லை! அழகிய தமிழில் ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை பல சாகித்தியங்களை இயற்றினார். ''ரக்ஷண்ய யாத்ரீகம்'' என்னும் மொழி பெயர்ப்புக் காவியமும் தமிழில் வெளியாகியிருக்கிறது. முஸ்லிம்களில் எத்தனை சிறந்த தமிழ்ப் புலவர்களும் கவிஞர்களும் இருந்திருக்கிறார்கள்? வள்ளல் சீதக்காதியைப் பற்றியும், சீறா புராணத்தைப் பற்றியும் அறியாதார் யார்?

தமிழ்த்தாயின் புதல்வர்கள் எந்த மதத்தினராயிருந்தாலும் எந்த நாட்டில் வசித்தாலும் அவர்கள் 100க்கு 100 பங்கு அசல் தமிழர்களேயாவர். அவர்களுக்குத் தமிழ் மொழியில் பூரண உரிமை உண்டு. இதை இலங்கையிலுள்ள தமிழ் முஸ்லிம்கள் பலர் உணர்ந்திருக்கிறார்கள். இல்லாவிடில் ஸாஹிராக் கல்லூரித் தலைவர் ஜனாப் ஏ.எம்.ஏ. அஸீஸ் அவர்களும் தமிழாசிரியர் ஜனாப் கமாலுதின் அவர்களும் அவ்வளவு லாகவமாகத் தமிழ் மொழி கையாண்டு எவ்விதம் சரமாரியாகப் பொழிந்திருக்க முடியும்?

இம்முறை இலங்கையில் இலங்கைத் தமிழர்கள் பலர் சொற்பொழிவு ஆற்றியதைக் கேட்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. ஸ்ரீ எஸ். நடேச பிள்ளை, டாக்டர் கணபதிப் பிள்ளை, பேராசிரியர் அருள்நந்தி, வித்வான் கனக சுந்தரம், வித்வான் க. வேந்தனார், மட்டக்களப்பு திரு சின்னத்தம்பிப் புலவர், திரு சிவநாயகம் முதலியவர்கள் ஆற்றல் வாய்ந்த தெய்வத் தமிழ் நடையைக் கையாண்டு சொற்பொழிவு ஆற்றினார்கள். இந்த நண்பர்களுடைய பேச்சுக்களைக் கேட்டுக் கொண்டிருந்தபோதெல்லாம் எனக்குத் தோன்றியது இதுதான் :—தமிழகத்தில் இப்போதெல்லாம் தமிழ் விழாக்கள் பல நடைபெறுகின்றன. இந்த விழாக்களுக்கு இலங்கையில் உள்ள தமிழ்ப்பெருமக்கள் சிலரையாவது அழைத்துக் கலந்து கொள்ளும்படி செய்ய வேண்டியது அவசியம். அப்போதுதான் நாம் நடத்தும் தமிழ் விழாக்கள் பூர்த்தியடைந்ததாகும்.

ஆம்; தமிழ் விழாவை வரும் ஆண்டில் இலங்கையில் நடத்துவதினால் மட்டும் நம்முடைய நோக்கம் ஈடேறி விடாது. நம் நாட்டில் நடைபெறும் தமிழ் விழாக்களுக்கு நம் இலங்கைச் சகோதரர்கள் சிலரையும் அழைக்க வேண்டும்.

இதன் மூலம் தமிழகத்துக்கும் இலங்கைக்கும் உள்ள நீண்டகால நட்புக்கு எவ்வளவோ நன்மை உண்டு. தமிழ்மொழியின் வளர்ச்சிக்கு அது உறுதுணையாயிருக்கும் என்பதிலும் ஐயமில்லை. (முற்றும்)

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 9. நம்பமாட்டீர்கள்!

நோயற்ற வாழ்வே சுக வாழ்வு என்று தெரியாமலா பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்? ஒரு குடும்பத்தில் யாருக்காவது சுகமில்லையானால் அக்குடும்பத்தார்கள் எவ்வளவு கஷ்டப்படுகிறார்கள்! தலைச் சுமையாக இருந்தால், பாவம் நீ இவ்வளவு நேரம் தூக்கிக் கஷ்டப் பட்டாயே, என்னிடம் கொஞ்சம் கொடு என்று மாற்றிக் கொள்ளலாம். வியாதி வந்தால் அப்படி மாற்றிக் கொள்ள முடியுமா? அவரவர் அனுபவித்துத்தான் தீரவேண்டும். நண்பர்கள் வந்து ஆறுதல் சொல்லலாம். சுற்றத்தார்கள் நோய் தீர்வதற்காக உதவி செய்யலாம். அதைத் தவிர அவர்களால் வேறு ஒன்றும் செய்ய முடியாது.

எவ்வளவு தான் செல்வந்தராக இருந்தாலும், அறிவாளியாக இருந்தாலும் நோய் வந்தால் அனுபவித்துத்தான் தீர வேண்டும். பணத்தால் பத்தும் செய்யலாம், பணத்தால் ஆகாத காரியம் ஒன்றும் இல்லை எனலாம். அப்படியானால் இன்று பணக்காரக் குடும்பங்களெல்லாம் சொர்க்கமாக வல்லவா விளங்கவேண்டும்? அங்குதான் புதுப்புது நோய்களைக் காணலாம். யமபுரி தர்பார்களை அங்கேதான் பார்க்கமுடிகிறது. யமகிங்கரர்களைப்போல ஊசிகளைக் குத்துவதும், அறுத்து ஆபரேஷன் செய்வதும், வெந்நீரில் கால்களை அமுக்குவதும், ஐஸ் போட்டு உடலைத் தேய்ப்பதும் வாயின் வழியாக ஆகாரம் போகாமல் வேறு வழிகளில் ஆகாரத்தைச் செலுத்துவதும் அப்பப்பா! போதும், நரகம் என்று ஒன்று இருக்கிறதோ என்னமோ, நேரில் பார்த்ததில்லை. ஆனால் இந்த உலகத்திலேயே நரக வேதனைகள் எல்லாம் நடந்து விடுகின்றன.



இவைகளெல்லாம் பணம் படைத்தவர்களுக்குத்தான். பணம் இல்லாத ஏழைக்கு, இவைகளெல்லாம் எங்கே கிடைக்கப் போகின்றன. இயற்கையாய் சுகமானால் உண்டு. இல்லையானால் வேறு உலகத்துக்குப் பிரயாணம் செய்யவேண்டியதுதான்.

சாதாரணமாக ஒரு சிறு செடியை எடுத்துக்கொள்வோம். அதற்குப் பல விரோதிகள் உண்டு. அவைகளில் பூச்சிகளும் அடங்கும். பூச்சிகளால் தாக்கப்பட்ட செடி, பெரிதானாலும் நன்றாய்ப் பலன் தராது. இலைகள் செழிப்பாய் வளராது. தழும்பு தழும்பாய்த் தெரியும். அப்படிப் பலன் தந்தாலும் அதன் கனி ருசியாய் இருக்காது. அந்தப் பழமும் தோல் சுருங்கி, வெம்பி, நலிந்து பார்ப்பதற்குக் கூட நன்றாய் இருக்காது.

ஒரு செடிக்கே இந்தக் கதியென்றால், மானிட வர்க்கத்தின் கதி என்ன? வியாதிகள் வந்தால் மருந்தால் போக்கிக் கொள்ளலாமே என்று சொல்லும் சோம்பேறி வாதம் எதுவரை செல்லும்? ஒரு வியாதி வந்து போனால் அல்லவா தெரியும் அதன் கஷ்டங்கள்.

செடிக்குத் தழும்பு உண்டாவது போல் ஒரு அடையாளம் உண்டாகிறது. கண்ணுக்குச் சில தென்படலாம். சில கண்ணுக்குத் தென்படாது. ஏன்? நம் எதிர்காலப் பிரஜைகளாகிய குழந்தைகளை எடுத்துக் கொள்ளுங்கள். அடிக்கடி வியாதிகள் வந்து நலியும் குழந்தையின் வளர்ச்சி எப்படித் தடைப்படுகிறது? நோயில்லாமல் வளரும் குழந்தை எப்படித் தளதள என்று வளர்கிறது? அவை சிறு உருவமாக இருப்பதால் நமக்கு நன்றாய் வித்தியாசம் தெரிகிறது. பெரியவர்களுக்கு அப்படித் தெரியா விட்டாலும் உள்ளுக்குள் ஒரு தழும்பு ஏற்படத்தான் செய்யும். எத்தனையோ தாய், தகப்பனார் உயரமாக இருந்தாலும், அவர்களின் சந்ததிகள் உயரம் குன்றி இருக்கிறார்கள். காரணம் வியாதித் தழும்புகள் ஏறி, ஏறி அவைகளை வளர விடாமல் குட்டையாக்கி விடுகின்றன.

இம்மாதிரி தழும் பேறிய உடலையும், நலிந்த தேகத்தையும், மறுபடியும் சீர்திருத்துவதற்கு இந்த யோக ஆசனமே சிறந்த வழி.

உடல் உழைப்புக் குறைவாலும், அபூர்வ



முதல்வர்:—என்ன ஸார்! பத்திரிகைகளிலே இந்தக் கண்ட்ரோலை எடுக்கலாமா, கூடாதா என்பதைப் பற்றிப் பிரமாதப்படுகிறதே! உங்கள் அபிப்பிராயமென்ன?

இரண்டாமவர்:—என் அபிப்பிராயம், கட்டாயமாகக் கண்ட்ரோலை எடுக்கக் கூடாது என்பதுதான்!

முதல்வர் (ஆச்சரியத்துடன்):-என்ன ஸார்! எல்லோரும் கண்ட்ரோலை எடுக்க வேண்டும் என்கிறார்கள்; நீங்கள் மாத்திரம் எடுக்கக் கூடாது என்கிறீர்களே?

இரண்டாமவர்:—என் பையனுக்குக் கண்ட்ரோல் ஆபீஸிலே இப்பொழுதுதான் வேலை கிடைத்திருக்கிறது. கண்ட்ரோலை எடுத்து விட்டால் அவன் வேலை என்ன ஆகிறது?



குடியிருப்பவர்:—என்ன ஸார்! உங்கள் வீட்டில் பொழுது போனால் எலிகள் வந்து நடனம் ஆடுகின்றன!......

வீட்டின் சொந்தக்காரர்:— இல்லாவிட்டால் நீங்கள் கொடுக்கும் பிரமாத வாடகைக்கு லலிதா - பத்மினி வந்து ஆடுவார்களா?

சதைக் கோளங்களின் கோளாறினாலும் சிலர் பெருத்துக் கணபதி வடிவமாய்த் திகழுவார்கள். இவர்கள் எடை குறைய, சதை கரைய, தொந்தி இளைக்க என்னென்னவோ செய்கிறார்கள். பட்டினி இருந்து பார்ப்பார்கள். பட்டினி இருக்கும் வரை கொழுப்புகள் கரைந்து, காற்று எடுத்து விட்ட பலூன் போல் சற்றே சதைகள் தளர்ந்து கொடுக்கும். எடையும் குறையும். எத்தனை நாள் பட்டினி இருக்க முடியும்? பிறகு மறுபடியும் சாப்பிட ஆரம்பித்ததும் முன்னைவிட அதிகம் பெருத்து விடுவார்கள் அதிகமும் சாப்பிட ஆரம்பித்து விடுவார்கள். தினம் ஒரு வேளை பட்டினி இருப்பவர்களையும் பார்த்தாய் விட்டது. அவர்களுக்குக் கால் அங்குலச் சதை கூடக் கரைவதில்லை.

சுத்த ஜலத்தையே அதிகம் சாப்பிட வேண்டும் என்று ஒருவர் ஆலோசனை சொல்லுவார். ஜலமே கூடாது என்று மற்றொருவர் ஆலோசனை சொல்லுவார். சர்க்கரை, மாவு பண்டங்களை குறைக்க வேண்டுமென்பார். ஊசி போட வேண்டும் என்று சொல்லுவார். மாத்திரைகளை விழுங்க வேண்டும் என்பார். ஆனால் எதற்கும் தளர்ந்து கொடுக்காமல் அவர்கள் உடல், முன்னைவிடத் தளதளப்பாய் மிளிர்ந்து கொண்டிருக்கும்.

இவர்களெல்லாம் இம்மாதிரி சோம்பேறிச் சாதனைகளுக்கு இடம் கொடுத்து உடலைச் சித்திரவதை செய்வதைவிட இந்த யோக ஆசனங்களை மேற் கொண்டால் மூன்று மாதங்களில் அவர்களின் உடலில் அவர்களே நம்ப முடியாதபடிச் சதை குறைந்து விடும். சட்டைகளை எல்லாம் பிறகு சிறிய அளவாய்த் தைத்துத்தான் போட்டுக்கொள்ள வேண்டியிருக்கும்.

மானிட வர்க்கத்தில் எத்தனையோ வித ஜாதியார்கள் இருக்கிறார்கள். நம்முடைய சமூகத்தில் புரையோடிக் கிடக்கும் ஐயர், நாயுடு, முதலியார் என்ற இந்த ஜாதிகளைச் சொல்லவில்லை.

குள்ளர்கள், நெட்டையர்கள், இடகாத்திரமானவர்கள், மெலிந்தவர்கள், கனத்தவர்கள் என்று பல பிரிவுகள் இருக்கின்றன. வெகு குள்ளமாக இருக்கும் பிக்மியர்களையும், ஆஸ்திரேலியாவில் சில பாகங்களில் இருக்கும் மிக உயரமான ஜாதியார்களைப் பற்றியும் பேசப் போவதில்லை. நம் நாட்டிலேயே அதுவும் நமது தமிழ் நாட்டிலேயே இம்மாதிரிப் பல உருவங்களில் இருக்கிறார்கள்.

குள்ளமான தம்பதிகளுக்கு, குள்ளமான சந்ததியும், உயரமானவர்களுக்கு, உயரமான சந்ததியும், மெலிந்தவர்களுக்கு மெலிந்த சந்ததியும், கனத்தவர்களுக்குக்



ஸ்ரீலஸ்ரீ வித்துவான் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில் சென்னை வந்திருந்த தருமபுரம் ஆதீனப் பிரசார கோஷ்டியினருக்கு கோடம்பாக்கம் ஸ்ரீ வடபழநி ஆண்டவர் கோவிலில் ஒரு உபசாரம் நடத்தப்பட்டது. அவ்வமயம் திருப்புகழ்மணி ஸ்ரீ டி. எம். கிருஷ்ணஸ்வாமி ஐயர் தலைமையில் நடந்த கூட்டத்தில் கோஷ்டியினர் பேசினர்.

---

கனத்த சந்ததியும் உண்டாக வேண்டியது இயற்கை முறை. ஆனால் அப்படி அநேகமாய் உண்டாவதில்லை. தாயும் தகப்பனும் குள்ளமாய் இருக்க, அவர்கள் மகன் உயரமாய் வளருகிறான். அவ்வாறே எல்லோருக்கும் மாறுபாடு உண்டாவதுண்டு. காரணம் அந்தச் சிசு வயிற்றில் இருக்கும்போது தாய் உட்கொண்ட ஆகாரப் பழக்கங்களினால் அந்தக் குழந்தை மாறுதல் அடைகிறது. தாய் ஆரோக்கியமாய் இருந்து நல்ல குணமான ஆகாரங்களை உட்கொண்டால் குழந்தையும் அவ்வாறே இருக்கும். தகப்பனாரும் ஆரோக்கியமாய் இருந்து நல்ல வீரியமுடனிருந்தால் தான் குழந்தையும் ஆரோக்கியமாகவும் வீரியமாகவும் இருக்கும்.

தாயும், தகப்பனும் குள்ளமாக இருந்து அவர்கள் ஆசனங்களைச் செய்து வந்தார்களானால் அவர்களுக்குப் பிறக்கும் குழந்தை நல்ல ஆரோக்யமாக வளர்வதுடன் வாழ்க்கையில் நோய் என்னும் தழும்புகள் படாமல் தாய், தந்தையர்களை விட உயரத்திலும், புத்தியிலும், சிறந்து விளங்கும் என்பதில் ஐயமில்லை.

'யோகாசனம் பழகுவதால் கனத்தவர்கள் மெலிவார்கள் என்றால் மெலிந்தவர்கள் இன்னமும் எலும்பும் தோலுமாக அல்லவா போய்விடுவார்கள்?' என்று சிலர் சந்தேகப்படலாம்.

கனத்தவர்கள் எப்படி மெலிய என்னென்னவோ செய்கிறார்களோ அதைப் போலவே மெலிந்தவர்களும் கனமாக என்னென்னவோ செய்கிறார்கள். பாலும், பாதாம் ஹல்வாவும், பிஸ்தாவுமாகச் சாப்பிட்டாலும் கனக்க மாட்டார்கள். அவர்கள் சாப்பிடும் வஸ்துக்களில், ஒரு ரூபாயில் ஒரு அணாகூட உடம்பில் ஒட்டாது. லேசியினாலும், டானிக்கினாலும் முடியாது. சாப்பிட்ட ஆகாரம், டானிக்கை ஜீரணித்துக் கொள்ள குடல்களுக்குப் பலம் இருந்தால்தானே? குடல் சுவர்கள் மழுங்கிக் கிடக்கும்போது எங்கு சத்தை இழுத்து ரத்தத்துடன் கலக்கப்போகிறது? சத்திழந்த குடல்களுக்குப் புத்துயிர் கொடுப்பது இந்த யோக ஆசனங்களைத் தவிர வேறு முறையால் முடியாது என்பது திண்ணம். ஆகையால் மெலிந்தவர் ஆசனம் செய்து நடுத்தரமான கனமுடன் இருக்கலாம். கனத்தவர்கள் கொழுப்பு கரைந்து சீர்பட்டு அவர்களும் நடுத்தரமான கனமுடன் இருக்கலாம். பொதுவாகச் சொன்னால் ஒவ்வொருவரும் தங்களைத் தாங்களே பார்த்து வியக்கும்படிச் செய்துவிடும் ஆசனங்கள். (தொடரும்)


ஸ்ரீகிருஷ்ணா
புரொடக்ஷன்
சந்திரிகா
தமிழ் • மலையாளம்





தகப்பனற்ற ஏழையான கோபி என்ற வாலிபனை ஜே. பி. மில்லின் சொந்தக்காரரின் மகள் சந்திரிகா காதலிக்கிறாள். கோபி அவளைச் சகோதரி போலக் கருதுகிறான். சந்திரிகா கல்யாணம் செய்து கொண்டு சந்தோஷமாக வாழுவதற்காக அவன் திருடனாகிச் சிறைப்படுகிறான். சந்திரிகா மீது சந்தேகம் கொண்டு அவளைக் கொடுமைப்படுத்துகிறான் அவள் கணவன் என்பதறிந்து, கோபி சிறையிலிருந்து தப்பி வந்து அவள் கணவனின் சந்தேகத்தைப்போக்குகிறான். எதிரிகள் சிறைப்படுகின்றனர். கோபி புதுக் குற்றம் சாட்டப்பட்டு மீண்டும் சிறைப்படுகிறான். அவனுடைய அன்புக்கும் தியாகத்துக்கும் சந்திரிகா அஞ்சலி செய்கிறாள்.

இந்தக் கதையில் ஸ்ரீ டி.எஸ். பாலையா வில்லனாகவும், காமெடியன் ஸ்ரீ கே. சாரங்கபாணி புரொபஸராகவும் அருமையாக நடித்து ரஸிகர்களின் அபிமானத்தைக் கொள்ளை கொள்ளுகின்றனர். லலிதா—பத்மினி கோஷ்டியின் நடனங்களும் இருக்கின்றன.

இந்தச் ''சந்திரிகா'' படத்தை ஸ்ரீ கிருஷ்ணா புரொடக்ஷன் கம்பெனியார் தமிழ், மலையாளம் ஆகிய இரு மொழிகளிலும் தயாரித்து வெளியிட்டிருக்கின்றனர். இப்பொழுது படம் மலையாளத்திலும் தமிழ் நாட்டிலும் ஓடிக்கொண்டிருக்கிறது.

# மைனாக் குருவி

மா. கிருஷ்ணன்



சமீபத்தில் நான் மைசூருக்குப் போயிருந்தேன். அங்கே, அரண்மனையை அடுத்த முக்கிய கடைத் தெருவுக்கு ஏதோ வாங்குவதற்காகச் சென்றேன். அப்போது சாயங்காலம் — சூரியன் கடைக் கட்டடங்களின் பின் ஒளிந்து மறையும் வேளை. வீதியின் இரு பக்கங்களிலும் ஜனத்திரள் நெருங்கி, வண்டிகளின் போக்கு வரவு மிகுந்திருந்தது. அந்த நெருக்கடியில்வழிவேண்டி வண்டிகள் எச்சரிக்கும் சத்தமும், விலை விசாரித்துப் பொருள் கொள்வோரின் சத்தமும், கடை வீதிக் கூட்டத்தில் தமக்குத் தெரிந்தவரைக் கண்டு குதூகலமாகப் பேசவோரின் சத்தமும், தினப் படிப்பையும் ஆட்டத்தையும் முடித்துக் கொண்டு அவ்வழியாக வீடு செல்லும் மாணவர்களின் அவசரச் சம்பாஷணையும், ஒரு குழந்தையின் அழுகுரலும் கலந்து, கன்னடமும் ஆங்கிலமும் பாஷையற்ற ஓசையுமாக எங்கும் ஒலித்தது. ஆனால், இவைகளைக் கடந்து, விடாது தணியாது கடலோசை போலொரு முழக்கம் எல்லாவற்றிற்கும் மேலாக தொனித்தது. நூற்றுக் கணக்கான மைனாக் குருவிகள் அக்கம் பக்கங்களிலிருந்து அங்கு வந்து, கட்டடங்கள் மீதும் தெரு நடு மரங்களிலும் கூடி, அடையு முன் அன்று நடந்ததையெல்லாம் ஒன்றுக்கொன்று ஆத்திரத்துடன் இரைந்து சொல்லிக் கொண்டிருந்தன. இருட்டினதும் அவைகளின் ஆரவாரம் அடங்கி விட்டது.

முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும் காலத்தைத் தவிர, மற்ற வேளைகளில், ஓரிடத்து மைனாக்கள் சகஜமாக ஒன்று கூடியே இராக் கழிக்கும். நாளெல்லாம் ஜதைகளாகவும் சிறு மந்தைகளாகவும் இரை தேடி மேய்ந்து, பொழுது சாய்ந்ததும் அடைமரங்களில் கூடி, சுற்றுமுற்றுமுள்ள சீமை முழங்க இரைச்சலிட்டுப் பின் தூங்கும். இந்தப் பறவைகளுக்கு மிருதுவான இனிய சாரீரம் கிடையாது. ஒரு மைனா கூவுவதை வெகு தூரத்திலிருந்தே கேட்கலாம்—அடையும்போது நூற்றுக் கணக்காக அவை சேர்ந்து இடும் பேரிரைச்சலை ஒரு மைலுக் கப்பாலிருந்து கேட்கலாம். ஆனால், சாதாரணமாக மனித சமூகத்தின் அருகில் மைனாக்கள் அடைவதில்லை. மைசூரில் நான் கண்டதும் கேட்டதும் சற்று அசாதாரணமானதே. பம்பாயிலும் கடைத்தெருவில் மைனாக் குருவிகளைப் பார்க்கலாம்.

புல்லாந்தரையில் தத்துக்கிளிகளையும் புழுக்களையும் தேடி மைனாக்கள் நீண்டு நடமாடுவதை எல்லாரும் பார்த்திருப்பார்கள். மேயும் மாடுகளைத் தொடர்ந்து அவைகளின் குளம்புகள் கிளப்பும் பூச்சிகளைப் பிடிக்க மைனாக்கள் செல்லும் — உழவு காலத்தில் ஏரைப் பின்பற்றியும் செல்லும். புது மழையில் வெளிவரும் ஈசல் படைகளைப் பிடித்துப் புசிக்கும் பல பிராணிகளுடன் மைனாக்களும் சேர்ந்து கொள்ளும். பூச்சிகள் மட்டுமின்றிச் சில பழங்களையும் தின்னும் — ஆலமரம் பழுக்கும்போது நிறைய மைனாக்களை அதன் கிளைகளில் பார்க்கலாம். மனிதர்கள் பிரியமாகக் கூட்டில் அடைத்து வளர்க்கும் மைனாக்கள் நீர் கலந்த கடலை மாப் பசையையும் தின்னும். எனக்குத் தெரிந்த வொரு கூட்டு மைனா பலவித பக்ஷணங்களையும் ஆவலுடன் புசிக்கும்.

மைனாக்களில் பல வகைகளுண்டு. இங்குக் குறித்தது கபில நிற உடலும், கருந்தலையும், மஞ்சள் வர்ண அலகும் கால்களும், வெள்ளை நிற வால்பட்டை இறக்கைப் பட்டைகளும் கொண்ட 'சாதாரண' மைனா.

கோடை காலத்தில், மரப் பொந்துகளிலும் கட்டிடங்களிலுள்ள சந்து இடுக்குகளிலும் மைனாக்கள் கூடு கட்டும். அவைகளின் முட்டைகள் சுத்த பளபளப்பான நீல நிறமாக பார்ப்பதற்கு அழகாக இருக்கும்.

இந்தப் பறவையின் பேசும் திறமை எல்லாரும் அறிந்ததே. சில மைனாக்கள் ஸ்பஷ்டமாக, வார்த்தைகள் புரியும்படி பேசும். இத்தகைய பட்சியை நமது புலவர்கள் எவரும் தூதுக்குத் தகுந்ததென்று கருதவில்லை. 'வண்டுவிடு தூது,' 'கிள்ளைவிடு தூது,' 'நாரைவிடு தூது', 'செருப்புவிடுதூது' முதலிய அநேக முறைகளும் கொண்ட தமிழ் ஏதற்காகத் தானோ 'மைனா விடுதூது' என்ற முறையை மட்டும் மறந்து விட்டது! மைனாக்களின் குரல் பலத்தையும் பேசுந்திறனையும் எண்ணினால் சில சந்தர்ப்பங்களுக்கு அவை மற்ற தூதர்களையும் விட மிகப் பொருத்தமுடையவை என்று தோன்றுகிறது. பிற விவகாரங்களில் ஆழ்ந்து சிறிது அசிரத்தையாகவிருக்கும் தலைவனுக்கோ, சற்று செவி நுட்பம் குன்றிய தலைவனுக்கோ, அவன் மனதில் நன்கு படும்படியாக, அழுத்தமாக, தூது சென்று சொல்ல மைனாவை விட ஏற்றது எது!



# அக்கப் போர்

"ஒரு சாப்பாட்டு விடுதியின் முன் 'புலவ் ரெடி' என்று போர்டு போட்டதால் அந்த இடம் போலீஸ் சோதனைக்கு ஆளாகி அங்கிருந்த அரிசி கைப்பற்றப்பட்டது."

—சென்னைச் செய்தி.

புலவ் என்ற வார்த்தையில் போலீஸார் கண்களுக்கு அரிசி புலனாகி இருக்கிறது !

★

"குழந்தை எழுத்தாளர் சங்கக் காரியதரிசி அழ. வள்ளியப்பா சென்னையில் குழந்தை புத்தகக் காட்சி ஒன்று நடத்துவார்."

—செய்தி.

இந்தப் புத்தகக் காட்சியைக் காண வேண்டுமென்று ஒவ்வொரு குழந்தையும் அழ ஆரம்பிக்கலாம் !

★

"கன்சர்வேடிவ்கள் பதவிக்கு வந்தாலன்றித் தான் தலைமயிரை கிராப் செய்து கொள்ளப் போவதில்லை என்று கிராப்டன் தொகுதிப் பிரதிநிதி சபதம் எடுத்துக் கொண்டிருக்கிறார்."

—லண்டன் செய்தி.

கிராப்டன் தொகுதிக்காரர் 'கிராப்' செய்து கொள்வதில்லை யென்றால், அது ஒரு கடுமையான விரதந்தான் !

★

"பண்டித நேருவுக்கு லியாகத் அலிகான் கடிதம் ஒன்று அனுப்பி இருக்கிறார். கடிதத்தில் உள்ள விஷயம் என்ன என்று தெரியவில்லை."

—கராச்சிச் செய்தி.

கடிதத்தில் விஷயம் ஒன்றுமில்லாவிட்டாலும் விஷம் இல்லாவிட்டால் சரிதான் !

★

"அக்டோபர் மாத நடுவிற்குள் காரியக் கமிட்டி மெம்பர்கள் பெயரைத் தெரிவித்து விடுவேன்" என்று காங்கிரஸ் புது அக்கிராசனர் ஸ்ரீ தாண்டன் தெரிவிக்கிறார்.

காரியக் கமிட்டி அமைக்க ஸ்ரீ தாண்டன் பல இடைஞ்சல்களைத் தாண்ட வேண்டியிருக்கிறதென்பது தெளிவாகிறது.

★

"மனைவியைக் குத்திவிட்டுக் குட்டையில் விழுந்ததற்காக ஒருவனுக்கு இரண்டு வருஷம் கடுங் காவல் விதிக்கப்பட்டது." —செய்தி.

குட்டையில் விழுந்தது குற்றந்தான் ! பெரிய ஏரி அல்லது கடலில் விழுவதற்கென்ன ?

★

"பகல்பூரில் ஏற்பட்ட வகுப்புச் சண்டையின் காரணமாக ஏழு பேர் கொல்லப்பட்டனர்."

—பகல்பூர் செய்தி.

வகுப்புத் துவேஷம் எவ்வளவு கொடியது என்பதை இந்தப் பகல்பூர் செய்தி வெட்ட வெளிச்சமாக்கி இருக்கிறது !

"[illegible]யூரில் பாரதியார் பாடசாலைக் கட்டிடத் திறப்பு விழா நடந்தது. பலர் பேசினார்கள்" என்று ஒரு செய்தி கூறுகிறது.

பலர் பேசினாலும் கவியரசர் பாரதியின் பெருமையைத்தான் திருப்பித் திருப்பிச் சொல்லி இருப்பார்கள் !

★

"டர்பனில் லைப்ரெரி."

—ஒரு செய்தித் தலைப்பு.

ஒரு லைப்ரெரி புத்தகங்களையும் மூளைக்குள் வைத்திருக்கும் அந்த மகானுபாவர் யாரோ !

★

"கழுகு ஒன்று ஒரு வீட்டைப் பாதுகாத்து வருகிறது." —லண்டன் செய்தி.

திருடர்கள் தூரத்தில் வரும்போதே இந்தக் கழுகுக்கு மூக்கில் வேர்க்கும் என நம்புகிறோம் !

★

"பைஸா சாய்கோபுரம் மேலும் சாய்ந்து விட்டது. இன்னும் கொஞ்ச காலத்தில் அந்தக் கோபுரம் அடியோடு விழுந்து விடலாம் என்று எதிர்பார்க்கப் படுகிறது." —செய்தி.

விழாமல் சாய்ந்து நிற்கும் வரைதான் அதற்கு உலக அதிசயங்களுள் ஒன்று என்று பெயர். கீழே விழுந்து விட்டால் அதை பைஸாவுக்குக் கூட யாரும் மதிக்க மாட்டார்களே !

★

"பெர்மிட் இல்லாமல் 180 படி அரிசியும் 50 படி கேழ்வரகும் கொண்டு வந்தவருக்கு 3 மாதம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது." —வேலூர் செய்தி.

இவர்களைத் தண்டிப்பதற்குப் பதிலாகக் கொள்முதல் அதிகாரிகளாக உத்தியோகம் தந்து பார்க்கலாமே !

★

"நியூயார்க்கில் உள்ள ஒரு நாய் பாங்கியில் கணக்கு வைத்திருக்கிறதாம்."

—நியூயார்க் செய்தி.

அந்தப் பாங்கியை இரவு பகலாகக் கண் விழித்து அந்த நாய் காவல் புரியும் என்று எதிர்பார்க்கலாம்.

★

பிரும்மபுத்திராவின் நீரோட்ட திசையை வேறு புறமாகத் திருப்பிவிடச் சகல முயற்சிகளும் செய்யப்பட்டு வருகின்றன என்று டிப்ருகார் செய்தி ஒன்று கூறுகிறது.

பிரும்மப் பிரயத்தனம் என்பது இதுதான் என்று சொல்ல வேண்டும்.

★

வெளிநாடுகளில் அமைக்கப்பட்டுள்ள இந்திய ஸ்தானிகாலயங்களுக்கு ஏராளமான பணம் செலவிடப்படுகிறது என்ற தகவலை நிதி இலாகா மறுத்திருக்கிறது. சிக்கனமாக மூன்று கோடியே நாற்பது லட்சம் ரூபாய்தான் செலவாகிக் கொண்டிருக்கிறதாம்.

செலவு சிக்கனமாக இருக்கலாம் ; ஆனால் தொகை ரொம்பக் கனமா யிருக்கிறதே !

# நகர சபையின் தொண்டு

சென்னை நகர சபையின் சார்பாகக் "கம்பெண்டியம் 1950" என்ற ஒரு பிரசுரம் வெளியாகி யிருக்கிறது. இந்த மாதிரி பிரசுரங்கள் இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய தேசங்களிலேதான் வெளியிடுவார்கள். இந்திய தேசத்திற்கே இம்மாதிரி பிரசுரம் இதுதான் முதலாவது என்று சொல்லலாம்.

சென்னை நகரசபை நிர்வாகம் எப்படி நடக்கிறது என்பதையும், எந்தெந்த இனத்தில் எவ்வளவு வருமானம் வருகிறது என்பதையும், எந்தெந்த இனத்தில் எவ்வளவு செலவு ஆகிறது என்பதையும் பல சித்திரப் படங்கள், புகைப் படங்கள், வரிப்படங்கள், கார்ட்டூன் படங்கள் மூலம் இந்தப் பிரசுரம் தெள்ளத் தெளிய எடுத்துச் சொல்லுகிறது. நகரசபை நிர்வாகத்தின் மூலம் பொது ஜனங்களுக்கு இன்றியமையாத இவ்வளவு சேவைகள் நடைபெறுகின்றனவா என்று அறிந்து பிரமிப்பு அடைகிறோம். நகரசபை வருமானம் ஒவ்வொரு ரூபாயிலும் இத்தனை அணா அல்லது பைசா இந்த இந்த வரி இனம் மூலம் வசூலாகிறது என்பது மிக ரசமா யிருக்கிறது. மொத்தம் இரண்டு கோடி ரூபாய் வருமானத்தில் கல்விக்காக 29 லட்சம் ரூபாயும் வீதி கூட்டித் துப்புரவு செய்யும் வேலைக்காக 30 லட்சம் ரூபாயும் சாலைப் பராமரிப்புக்காக 26 லட்சம் ரூபாயும் சாக்கடைத் திட்டத்துக்காக 16 கோடி ரூபாயும் செலவாகிறது என்றும் விவரங்களைப் பல வர்ணங்களினால் பகுதிப் படுத்திக் காட்டியிருக்கிறது. இதைத் தவிர, சென்னை நகரத்தில் வசிக்கும் மக்களில் 100-க்கு 55 பேர் மாதம் முப்பது ரூபாய்க்குள்ளும் 100 க்கு 18 பேர் மாதம் முப்பதுக்குமேல் 50 ரூபாய்க்குள்ளும் வருமானம் உள்ளவர்கள் என்பதைப் பார்த்துத் திடுக்கிடுகிறோம். இந்த 100 க்கு 73 பேரும் எப்படி வாடகை கொடுத்துக் குடியிருந்து நல் வாழ்க்கையும் நடத்த முடியும் என்ற ஒரு கேள்வியை இந்தப் பிரசுரம் கேட்டிருக்கிறது. இந்த நிலையில் டிராம் வண்டியின் மூலம் கிடைக்கும் வருமானத்தில் சர்க்கார் பங்கு பறித்துக்கொண்டு போவதையும் முக்கிய காரியங்களுக்குச் சர்க்கார் கிராண்டுகள் கொடுக்க மறுப்பதையும் விளக்கும் இரண்டு சாதுர்யமான கார்ட்டூன் படங்கள் மனதைக் கவர்கின்றன. பக்கத்துக்குப் பக்கம் படங்களுடனும் உபயோகமான புள்ளி விவரங்களுடனும் அழகாக அச்சிடப்பட்ட இந்தப் பிரசுரத்தை வெளியிட்டதின் பொருட்டு நகர சபைக் கமிஷனர் ஸ்ரீ சி. நரசிம்மம் அவர்களையும், சீப் அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி அவர்களையும் பாராட்டுகிறோம்.




## கல்கி தீபாவளி மலர்

தேசத் தலைவர்கள், பிரமுகர்கள், பிரபல எழுத்தாளர்கள், கவிஞர்கள் முதலியவர்களுடைய அருமையான கதைகளையும், கட்டுரைகளையும், கவிதைகளையும், விதவிதமான வர்ணச் சித்திரங்களையும், ஹாஸ்யச் சித்திரங்களையும் தாங்கி நவம்பர் மீ 8-ந்தேதி தீபாவளித் திருநாளில் மணம் வீசி மலர்கிறது. இருநூறு பக்கங்களுக்கு மேலே கொண்ட இம் மலர் பூராவும் ஆர்ட் காகிதத்தில் அச்சாகிறது.

**விலை ரூ. 4 - 0 - 0**

○●○

உங்கள் உள்ளூர் ஏஜண்டுகளிடம் தேவைக்கு முன் கூட்டியே பதிவு செய்து கொள்ளக் கோருகிறோம்.

தபால் மூலம் பெற்றுக்கொள்ள விரும்புவோர் ரிஜிஸ்தர் சார்ஜ் உள்படக் கீழ்கண்டபடி அனுப்ப வேண்டுகிறோம்.

| | |
|---|---|
| உள்நாடு, சிலோன் - - | ரூ. 4 - 7 - 0 |
| பர்மா, மலேயா மற்றும் வெளிநாடுகள் | ரூ. 4 - 12 - 0 |

இலங்கையிலுள்ள கல்கி சந்தாதாரர்கள் மலர் பிரதி தேவைக்கு எழுதினால் வி. பி. பி. மூலம் அனுப்பப்படும்

○●○

மானேஜர் : கல்கி காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை

# ராமகிருஷ்ண உபநிஷதம்

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

## 30. நந்தா விளக்கு

பொய்யும் புனைசுருட்டுமே பலன் தரும் என்று எண்ணி எண்ணி அதுவே வழக்கப்பட்டுப் போயிருக்கிறபடியால் தருமோபதேசங்களை, 'இதுவெல்லாம் என்ன பிரயோசனம்' என்று தள்ளி விடுவது உலகத்தார் வழக்கம். ஆயினும் உய்யும் வழி இது அல்ல. தருமமே சுகம், தருமமே சந்தோஷம், தருமமே சாதுரியம், தருமமே செல்வம். தருமம் கெட்டால் நாடு செழிக்காது. எல்லோரும் தரித்திர நிலை அடைவார்கள். மோசமும் பித்தலாட்டமும் சமுதாயத்தை நாசம் செய்து விடும். சமுதாயம் கெட்டால் அனைவரும் கெடுவோம்.

சில வலைச்சிகள் சந்தைக்குப் போய் மீன் விற்றுவிட்டு ஊருக்குத் திரும்பினார்கள். அன்று சந்தையில் அதிக நேரம் இருக்க நேரிட்ட படியாலும் வழியில் மழை பிடித்துக் கொண்ட படியாலும் இருட்டுவதற்கு முன் ஊர் போய்ச் சேர முடியவில்லை. வழியில் ஒரு கிராமத்தில் பூந்தோட்டக்காரன் ஒருவன் குடிசையண்டை நின்றார்கள். தோட்டக்காரன் நல்லவன். "இரவு இங்கே தங்கி, விடிந்ததும் போங்கள்" என்றான். வலைச்சிகள் "அப்படியே, சரி" என்று தங்கினார்கள்.

இராத்திரி வலைச்சிகளுக்கு அங்கே தூக்கமே பிடிக்கவில்லை. புரண்டு புரண்டு தூங்கப் பார்த்தார்கள்.

அவர்கள் இருந்த அறையில் தோட்டக்காரன் மல்லிகைப் பூவைப் பறித்து ஒரு கூடையில் வைத்திருந்தான். மறு நாள் காலை தன்னிடம் வாடிக்கையாகப் புஷ்பம் வாங்குபவர்கள் வீட்டுக்குக் கொண்டு போவதற்காக வைத்திருந்தான். அந்த வாசனை வலைச்சிகளுக்குப் பிடிக்கவில்லை. தூங்க முடியவில்லை. கொஞ்ச நேரம் கழித்து அவர்களில் ஒருத்தி எழுந்து உட்கார்ந்து, "இந்த நாற்றம் நிற்கவே மாட்டேன் என்கிறது. வர வர அதிகமாகிறது. இதற்கு என்ன செய்ய?" என்றாள்.

பிறகு கொஞ்சம் தண்ணீர் எடுத்துத் தங்கள் மீன் கூடைகளின் மேல் தெளித்து விட்டுக் கூடைகளைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு படுத்தார்கள். வலை நாற்றம் மிஞ்சி மல்லிகை வாசனையை அடக்கி விட்டது. வலைச்சிகள் குறட்டை விட்டுத் தூங்கிப் போனார்கள்.

அவரவர்கள் வழக்கம் அவரவர்களுக்குச் சுவர்க்கம். நல்ல சகவாசமும் நல்ல பழக்க வழக்கங்களும் இல்லாமற் போனால் துன்மார்க்கமே மேன்மையாகத் தோன்றும். அதுதான் லௌகிக வாழ்க்கைக்கு வேண்டிய கெட்டிக்காரத்தனம் என்றும் தோன்றும்.

இந்தக் கலியுகத்தில் நாம் செய்ய வேண்டிய தவம் ஒன்றே: உண்மை பேசுவது. அதைக் கூடச் செய்ய மாட்டோம் என்கிறோம். வியாபாரம் செய்பவர்கள், கச்சேரியில் வேலையில் இருப்பவர்கள் அனைவரும் உண்மை பேச வேண்டும். சத்தியமே கெட்டிக்காரத்தனம். அதுவே கடவுளை அடையும் வழியும் லௌகிக சாதுரியமும் ஆகும்.

வீட்டில் பண்டிகை நாட்களில் நந்தா விளக்கு ஏற்றுகிறோம். அது எரிந்து கொண்டே இருக்க வேண்டும். அணைந்து விட்டால் குடும்பத்துக்கு ஏதாவது கஷ்டம் நேரிடும். அப்படியே கடவுள் நினைவும் ஒரு நந்தா விளக்கு. இதய கமலத்தில் ஏற்றி வைத்த அந்த விளக்கு அணைந்து போகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். எந்த லௌகிக காரியத்தில் ஈடுபட்டிருந்தாலும் அவ்வப்போது அந்த விளக்கில் எண்ணெய் ஊற்றியும் திரியைத் தூண்டிக் கொண்டும் இருக்க வேண்டும். அதனால் எந்த வேலையும் தடைப்படாது. வெற்றி ஏற்படும்.






## 14. மனம் மாறியது!

மறு நாள் ஷம்லார்க்கின் சிப்பாய்கள் தன் தேசத்தின் வழக்கப்படி தலையில் அக்கினிக் கொப்பறை ஏந்தி சீபா நகரத்தின் கோட்டை வாசலில் வந்து நின்றனர். நீக்ரோவர்கள் தலையில் அக்கினிக் கொப்பறையுடன் வந்தால், அவர்கள் சமாதான உடன்படிக்கைக்காக வந்திருக்கிறார்கள் என்பது ஐதிகம். நீக்ரோ சிப்பாய்கள் சமாதானம் செய்து கொள்ளுவதற்காகத்தான் வந்திருக்கிறார்கள் என்ற விஷயத்தில் பூரண நம்பிக்கை ஏற்பட்டதும் கோட்டைக் காவலர்கள் கோட்டைக் கதவைத் திறந்து அவர்களை உள்ளே வர அநுமதித்தார்கள். அக்கினிக் கொப்பறையுடன் வந்த நீக்ரோ சிப்பாய்கள் சீபா நகரத்துக் கோட்டைக்குள்ளே நுழைந்தனர்.

மயூர மாளிகையின் வாசலிலே, பருனின் பிரதான மந்திரியும் பிரதான புரோகிதனும் ஷம்லார்க்கின் தூதர்களை வரவேற்று உபசரித்தார்கள். எதிரே இருந்த திறந்த வெளியிலே நகர மக்கள் ஏகமாகக் குழுமியிருந்தனர். நீக்ரோவர்களின் மன்னன் சமாதான உடன்படிக்கைக்கு என்னென்ன நிபந்தனைகள் விதித்திருக்கிறான் என்பதை அறிய வேண்டும் என்ற ஆவல் அவர்களுடைய உள்ளத்தில் கட்டுத் தெறித்துக் கொண்டு நின்றது.

முதல் முதலாக எகிப்து நாட்டின் தேசிய கீதமும் அதற்கு அடுத்தபடியாக நீக்ரோவர்களின் தேசிய கீதமும் பாடப்பட்டன. பிறகு எல்லோரும் ஒருமுறை எழுந்து நின்று யுத்தத்தில் வீர மரணம் எய்திய வீரர்களின் தாய் தந்தையர்களுக்குத் தங்கள் வணக்கத்தையும் மரியாதையையும் செலுத்தினர். அதற்கப்புறம் வீரர்களின் ஆத்மா சாந்தியடையும் பொருட்டு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்தித்தனர். எல்லாவிதமான முறைச் சடங்குகளும் முடிந்ததும், ஷம்லார்க்கின் பிரதான தூதன் எழுந்து நின்று அக்கினிக் கொப்பறையின் புகையைத் தன் கைகளால் எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான்; முகத்தில் பூசிக் கொண்டான். பிறகு தன்னுடைய உரத்த கம்பீரமான குரலில், "பருன் அப்னஸ் இறந்து விட்டான். ஆகவே, இனி எகிப்து நாட்டவர்களுடன் எங்களுக்கு எவ்விதமான விரோத பாவமோ, சண்டையோ கிடையாது. ஆனால் இந்த யுத்தத்துக்கு முக்கியமான மூல காரணம் இன்னும் எகிப்து நாட்டிலேயே தான் இருக்கிறது. அதை வேருடன் களைந்து எறியாத வரையில் நம்மிடையே மூண்டிருக்கும் இந்தச் சண்டை நிற்பதற்கில்லை. அதன் மூல காரணம் என்னவென்பது எகிப்து நாட்டு வாசிகளான உங்களுக்குத் தெரிந்ததே. நியூனஸ் என்னும் அடிமைப் பெண்தான் இவ்வளவு சண்டைக்கும் மூல காரணம் என்பதை நாங்கள் உங்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டிய அவசியம் இராது என்று எண்ணுகிறோம். எங்கள் பலம் பொருந்திய பாதுஷா உடனே நீங்கள் நியூனனைத் தம்மிடம் ஒப்படைத்து விட வேண்டும் என்று விரும்புகிறார். நீங்கள் அவளை எங்களிடம் ஒப்படைத்தவுடனேயே போர் நிறுத்தப்படும்; எங்கள் படைகள் முற்றுகையை அகற்றி விடும்.

எகிப்து நாடு. இது சம்பந்தமாக என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதாக உத்தேசித்திருக்கிறது என்பதைச் சீக்கிரமாகத் தீர்மானித்துக் கூறட்டும்!" என்றான்.

பிரதான தூதன் இதைச் சொல்லி முடித்ததும் தன் ஆசனத்தில் அமர்ந்தான். பதிலுக்குச் சிறிது நேரம் அங்கே அமைதி நிலவியிருந்தது. அதற்குப் பிறகு பிரதான மந்திரி, யுத்த மந்திரி, அரசாங்கப் புரோகிதன் மூவரும் கூடிக் கலந்து தங்களுக்குள் ஏதோ மந்திராலோசனை செய்தார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் அரசாங்கப் புரோகிதன் எழுந்து அரண்மனைக்குள்ளே சென்று விட்டான். மக்கள் மூச்சு விடக் கூட மறந்து நின்றனர். அவர்களுடைய சிந்தனை வெகு வேகத்தில் வேலை செய்தது. என்ன நடக்கிறது, பார்ப்போம்! அரசாங்கப் புரோகிதன் நியூனஸைக் கூப்பிட்டு வருவதற்காகப் போயிருப்பானோ? தேசத்தின் நலனை உத்தேசித்து அவன் ஒருவேளை நியூனஸை நீக்ரோவர்களிடமே ஒப்படைக்கச் சம்மதித்திருப்பானோ? — இவ்வாறு மக்களின் மூளை பற்பல விதமாக வேலை செய்யத் தொடங்கியது.

உள்ளே சென்றிருந்த அரசாங்கப் புரோகிதன் சிறிது நேரத்துக்கெல்லாம் வெளியே வந்தான். பிரதான மந்திரியும் பிரதான புரோகிதனும் 'கசமுச' வென்று தங்களுக்குள் சிறிது நேரம் ஏதோ ரகசியம் பேசினர். பிறகு பிரதான மந்திரி எழுந்து நின்று, "இது சம்பந்தமாக எகிப்து நாட்டு மகாராணியே வந்து தன் அபிப்பிராயத்தை வெளியிடுவார்கள்!" என்றான். அதைச் சொல்லி முடித்ததும் அவன் தன் ஆசனத்தில் அமர்ந்தான்.

பிரதான மந்திரி கூறிய வார்த்தைகள் காற்றில் மிதந்து காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கும் பொழுதே, மயூர மாளிகையின் கதவு மறுபடியும் திறந்தது. நியூனஸ் சிறிது நேரத்துக்கெல்லாம் தன்னுடைய மிகச் சிறந்த ஆடை ஆபரணங்களை அணிந்து கொண்டு வெளியே வந்தான். அப்பொழுது அவளுடைய முகம் மலர் போல மலர்ந்திருந்தது. அவளுடைய அந்த மலர் முகத்துடன் இளவேனிற் காலத்தின் இன்பம் கொஞ்சிக் குலாவி விளையாடிக் கொண்டிருந்தது. அவள் வருத்தமே உருவாகக் காட்சி அளிப்பாள் என்று மக்கள் மனதில் கற்பனை செய்து கொண்டிருந்தனர். அவர்களுடைய அந்தக் கற்பனை பொய்த்து விட்டது. அளவற்ற மகிழ்ச்சியுடன் அவள் காட்சியளிப்பதைக் கண்டதும் மக்களின் மூளை ஒரேயடியாகக் குழம்பிப் போய்விட்டது.

இருள் கவிந்த இரவிலே பூரண சந்திரன் பவனி வருவதுபோல, கவிஞனின் கற்பனையிலே அமைப்பான அணி அமைந்து வருவது போல, இலையுதிர் காலத்திலே இன்ப போதை யூட்டும் இளவேனிற் காலம் பிரவேசிப்பது போல நியூனஸ் வெளியே வந்து மிக்க ஒயிலுடன் நின்றாள். நீக்ரோவர்களின் கல்தானுடைய நீக்ரோ தூதர்கள் அவளுடைய அந்த மனமோகன எழில் உருவத்தையும் யௌவனப் பருவத்தின் இன்னொளியையும் கண்டு காமுற்றனர். அவர்களுடைய உள்ளம் 'படக், படக்' என்று அடித்துக் கொண்டது. அவர்கள் மட்டும் என்ன? எகிப்து நாட்டின் யுத்த மந்திரிக்கும், பிரதான மந்திரிக்கும் கூட தங்கள் காரியங்களைச் சரிவரச் செய்து முடிப்பது மிகவும் கடினமான காரியமாகத் தோன்றியது.

ஆனால் மக்களின் கூட்டத்தினிடையே நியூனஸின் அந்த எழில் உருவம் எவ்விதமான பரபரப்பையோ அல்லது கலகலப்பையோ உண்டாக்கவில்லை. அகன்று நீண்ட சமவெளியிலே கவிந்திருக்கும் காரிருளை ஒரு சின்னஞ்சிறு வெளிச்சத்தினால் போக்க முடியுமா? அவர்களில் சிலர் தங்களுடைய உடல், உள்ளம் இவற்றின் முழுச் சக்தியையும் பிரயோகித்து உரத்த குரலில், "மகாராணி! எங்கள் குழந்தை குட்டிகளை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்! எங்கள் பெண்டு பிள்ளைகளை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்! தங்களுக்குக் கோடிப் புண்ணியமுண்டு!" என்று கூச்சலிட்டனர்.

வேறு சிலர், "மகாராணி! எங்களை நிம்மதியாக உயிர்வாழ விடுங்கள்!" என்று இரைச்சல் போட்டனர்.

இன்னும் சிலர், "மகாராணி! உங்கள் ஒருத்திக்காக நாட்டையே கஷ்டத்துக்குள்ளாக்காதீர்கள்!" என்றனர்.

மற்றும் சிலர், "மகாராணி! சொல்லுவதைத் திர யோசித்துச் சொல்லுங்கள்!" என்று உபதேசித்தனர்.

"நீ எங்கிருந்து வந்தாயோ, அங்கேயே போய்விடு. அந்த வாழ்வுதான் உனக்கு உகந்தது. அரண்மனை வாழ்வு உனக்கு உகந்ததல்ல!" என்று இரண்டொரு குரல்கள் ஆத்திரத்துடன் வந்தன.

இம்மாதிரி மூலை முடுக்குகளிலிருந்து ஏகமாகக் குரல்கள் கிளம்பிக் குழப்பத்தை உண்டுபண்ணி விட்டன. குழப்பம் அதிகரிப்பதைக் கண்ட யுத்த மந்திரி எழுந்து நின்று தன் கைகளை உயரத் தூக்கி மக்களைப் பேசாமல் இருக்குமாறு ஜாடை காட்டினான்.

அதற்குள் நியூனஸ் முன்னே வந்து மிகவும் மெதுவான குரலில் ரகசிய

மாகப் பிரதான மந்திரியுடன் ஏதோ கலந்து ஆலோசித்துக் கொண்டிருந்தான். கூட்டத்தினிடையே குழப்பம் குறைந்து அமைதி நிலவ வெகு நேரம் பிடித்தது. ஜனங்களின் பேச்சு அடங்கி மென்மையே உருவெடுத்த ஒரு பெண்ணின் குரல் கூட்டத்தின் கடைசி கோடி வரை கேட்கும் நிலையை அடைந்தபின், தியூனஸ் இளமையின் எழில் வாய்ந்த தன் கழுத்தை வெகு லாகவமாக நிமிர்த்திக் கம்பீரமாக நின்றாள். பிறகு தன்னுடைய மனமோகன மந்திர சக்தி வாய்ந்த விழிகளால் கூட்டத்தை ஒருமுறை சுற்றி முற்றிப் பார்த்தாள். "இந்த யுத்தம் நடக்கவேண்டும் என்று நான் விரும்பவேயில்லை. ஆனால் நான் என்ன சொல்லியும் பரூன் என் சொல்லைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. அதற்கு நான் என்ன செய்வது? அவர் பிடிவாதமாகத் தன் மனம் போன போக்குப்படி யுத்தத்தை ஆரம்பித்து வைத்துவிட்டார். இந்த யுத்தம் தொடர்ந்து நடந்துகொண்டே யிருப்பதை நான் அன்றும் விரும்பவில்லை; இன்றும் விரும்பவில்லை; என்றைக்குமே விரும்பியதும் இல்லை. இதற்குத் தீர்ப்புக் கூற வேண்டிய பரூன் இப்பொழுது நம்மிடையே இல்லையாதலால், இதற்குத் தீர்ப்புக் கூறவேண்டிய பொறுப்பு என் தலையிலே சுமந்திருக்கிறது. ஆகவே, நான் தீர்ப்புக் கூறுவது யாதெனில், இந்த வீண் கொலையும் கொள்ளையும் இனி நடக்கக் கூடாது. நாம் ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு சாகவேண்டிய நிலை ஏற்படக் கூடாது. நாட்டுக்கு அதன் அமைதியும் இன்பமும் இரும்பவும் கிடைக்க வேண்டும். அதற்காக நான் என்னால் இயன்ற ஏற்பாடு செய்யச் சித்தமாயிருக்கிறேன்" என்றாள்.

அதைக் கேட்டதும் மக்கள் மனம் பூரித்தனர். "தியூனஸ் தெய்வம் என்றால் தெய்வம் தான். தியூனஸைப் போல நல்லவர்கள் இந்த உலகத்திலேயே கிடையாது. தியூனஸ் மகாராஜியாக நூறு ஆயுசு வாழவேண்டும். எங்களுக்கு உயிர்ப்பிச்சை கொடுத்த தியூனஸுக்கு நாங்கள் என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறோம்!" என்று உரக்கக் கத்திச் சந்தோஷ ஆரவாரம் செய்தனர்.

பிரதான மந்திரி மறுபடியும் கையைத் தூக்கி ஜாடை காட்டினான். அதைக் கண்டதும் ஜனங்கள் பேச்சை நிறுத்தினர். சந்தோஷ ஆரவாரம் சமுத்திரம் போலப் பேரிரைச்சல் புரிந்து கொண்டிருந்த அந்த இடத்திலே 'கப் சிப்' என்று அமைதி நிலவியது. மக்கள் மேலே என்ன நடக்கப் போகிறது என்பதைக் காது கொடுத்துக் கேட்கலாயினர்.

தியூனஸ் வாய் திறந்து, "நான் என்னை நீக்ரோவர்களின் சுல்தானான ஷம்லார்க்கின் கையிலே மிகவும் மகிழ்ச்சியுடன் ஒப்படைக்கத் தயாராயிருக்கிறேன். ஏன் தெரியுமா? எகிப்து நாட்டின் மீது எனக்கு உள்ள பற்றுதலும் பக்தி சிரத்தையும்தான் அதற்கு முக்கிய காரணம். என்னைப் பற்றி நானே சொல்லிக் கொண்டால் அது அவ்வளவு நன்றாயிராது. இருந்தாலும் நாட்டின்மீதுள்ள பற்றுதல் காரணமாகத்தான் நான் என்னை மரணத்தின் கையில் ஒப்படைக்கத் தயாரானேன் என்பதை என் தாய்நாட்டுக் குழந்தைகளான நீங்கள் நன்கு உணர வேண்டும். உணர்வது மட்டும் போதாது. தாய்நாட்டின்பால் என்னைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான பக்தியையும் சிரத்தையையும் கொள்ள வேண்டும். இதுவே என் அந்தரங்க அவா. எனது இந்த அவா பூர்த்தியுறுமானால்தான் என் நெஞ்சு வேகும். என்னுடைய மனமும் திருப்தி அடையும்" என்றாள்.



அதைக் கூறும்பொழுது தியூனஸின் கண்களில் தேசிய வெறி தாண்டவமாடியது. அவளுக்கு உடல் சிலிர்த்தது; உள்ளமும் சிலிர்த்தது. அவள் வாயிலிருந்து மேற்கொண்டு வார்த்தைகள் வெளிவரவில்லை. அவள் இன்னும் சொல்ல நினைத்த விஷயங்கள் எல்லாம் தொண்டையிலேயே சிக்கிக்

கொண்டன. அவன் தன்னுடைய குனிந்த தலையை நிமிர்த்தச் சிறிது நேரம் பிடித்தது. அவன் தலையை நிமிர்த்தியதும் மெதுவாகப் பின்புறம் திரும்பினான். அவனுக்குப் பின்னால்தான் ஷம்லார்க்கின் தூதர்கள் நின்று கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்து அவன் கம்பீரமாகவும் கனமிடுக்காகவும் நின்றான். அவன் நின்ற விதம், எவ்வித யோசனையும் இன்றி இப்பொழுதே அவர்களுடன் வரத் தயார் என்பதைத் தெரிவிப்பது போலிருந்தது.

யுத்த மந்திரி, பிரதான மந்திரி, அரசாங்கப் புரோகிதன்-இம் மூவருடைய கண்களிலும் நீர் கோத்து நின்றது. ஷம்லார்க்கின் சிறைச் சாலையிலே நியூனஸுக்குக் கிட்டப்போகும் கடுந் தண்டனையை நினைத்த மாத்திரத்திலேயே அவர்களுக்குக் குலை நடுக்கம் எடுத்தது. மயிர் சிலிர்க்கும் மாபெரும் தண்டனையை நினைத்தால் யாருக்குத்தான் மனம் பதறாது?

இதற்குள்ளாக ஒருவன் அங்கே கூடியிருந்த கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு வெகு வேகமாக முன்னேறி வந்தான். 'விடு விடு' என்று நேரே ஷம்லார்க்கின் தூதர்களும் நியூனஸும் நிற்கும் இடத்துக்கு ஓடினான். ஓடிவந்த வேகத்தில் அவனுக்கு மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. அவனுடைய கண்கள் அனலைக் கக்கிக் கொண்டிருந்தன. அதிலிருந்தே அவனுக்குக் கோபம் எல்லை மீறி ஏற்பட்டிருந்தது என்பது தெளிவாகத் தெரிந்தது. அவன் யார், தெரியுமா? வேறு யாரும் இல்லை. எகிப்து நாட்டின் இணையற்ற வீரன் ரேம்பஸ்தான்! யுத்தத்திலே அசாத்திய துணிச்சலுடனும் நெஞ்சு உறுதியுடனும், உயிரைச் சிறிதும் பொருட்படுத்தாமல் போர் புரிந்த வீரன் ரேம்பஸ்தான்! தன் புஜபல பராக்கிரமத்தின் பலத்தைக் கொண்டு எதிரிகளைத் திக்குமுக்காட வைத்து நம்பிக்கை இழக்கும்படி செய்து கதிகலங்க வைத்துவிட்ட வீரன் ரேம்பஸ்தான்! அவனைக் கண்டதும் ஜனங்கள் கண் கொட்டாமல் அவனையே பார்க்கலாயினர். பிரதான மந்திரிக்கும் ராஜப் புரோகிதனுக்கும் கன்னங்கரிய காரிருளிலே நம்பிக்கை சுடர் விட்டு ஒளிர்ந்து கொண்டிருப்பதாகத் தோன்றியது. நியூனஸுக்குக்கூடத் தன் உள்ளத்தில் உண்டாகியிருந்த உறுதி குலையத் தொடங்கியது போன்ற பிரமை ஏற்பட்டது. தன்னெதிரே தன் உயிர்க்கு உயிரான காதலனைக் கண்டதும் யாருக்கும் அவ்வாறு நிகழ்வது இயல்புதானே? என்ன இருந்தாலும் அவள் நெஞ்சு அபலையின் நெஞ்சுதானே? அவளுடைய உள்ளத்தை இல்லாத கற்பனைகளும் எட்டாத கனவுகளும் எழுந்து குழப்பத் தொடங்கின. மக்களோ ஆவ

## வேண்டாம், போ!



ளுடன் காதைத் தீட்டிக்கொண்டு, மேலும் விஷயங்களைக் கேட்கத் தங்களைத் தயார் செய்து கொண்டனர்.

ரேம்பஸ் தன் தொண்டையின் பூரண சக்தியையும் உபயோகித்து மிகவும் உரத்த குரலில், "எகிப்து நாட்டு வாசிகளான என் அன்பர்களே! நண்பர்களே! நம்நாட்டில் தற்சமயம் நடந்து கொண்டிருக்கும் காரியம் எத்தகையது என்பதைச் சற்று சாவதானமாகத் தெளிந்த மனத்துடன் சிந்தித்துப் பாருங்கள்! நீங்களும் முன்பின் யோசியாமல் என்ன காரியம் செய்யத் துணிந்து விட்டீர்கள்?' என்பதை நினைவு கூருங்கள்! இந்தக் காரியம் செய்வது நியாயம்தானா? உங்களுடைய வருங்காலத்துச் சந்ததிகள் உங்களை என்ன சொல்லுவார்கள்? என்ன என்ன பெயர் எல்லாம் வைத்து அழைப்பார்கள்? இவற்றைப் பற்றியெல்லாம் உங்களுக்குச் சிறிதும் சிந்தனையோ கவலையோ கிடையாதா? இதோ நம்முன் நிற்கும் இந்தப் பெண்மணி நேற்றுவரை அடிமைப் பெண்ணாக இருந்திருக்கலாம். ஆனால் இன்று இவள்தான் உங்களுடைய மகாராணி; உங்கள் பாதுஷாவினால் கை பிடிக்கப் பட்ட பட்டமகிஷி. இவளுக்கு ஏதாவது அவமானம் ஏற்பட்டால், அது உங்களுக்கு அவமானம்! உங்கள் நாட்டுக்கு அவமானம்; உங்கள் பாதுஷாவுக்கே அவமானம். இவளுடைய கௌரவத்துக்குக் கடுகளவு கூடப் பங்கம் ஏற்படும்படியான காரியத்தில் நீங்கள் இறங்கக் கூடாது. இறங்கினால் அது உங்கள் சொந்த கௌரவத்துக்கே ஹானி தேடிக் கொள்ளுவதாக ஆகும்; உங்கள் பாதுஷாவுக்கே துரோகம் இழைத்ததாக முடியும். இதை நீங்கள் யாரும் மறக்கக் கூடாது; மறுக்கக் கூடாது. மறுக்கவே நினைத்தாலும் மறுக்க முடியாது. உங்கள் இச் செய்கையைக் காண, என் நெஞ்சு பொறுக்கவில்லை. வரப்போகும் அவமானத்தை எண்ணினால் என் தலை தானாக வெட்கிக் குனிகிறது. குனிந்த தலையை நிமிர்த்தலாம் என்றாலோ வெட்கம் என்னைப் பிடுங்கித் தின்கிறது. உலகத்துக்கே ஒரு எடுத்துக் காட்டாக விளங்கும் எகிப்து நாட்டின் கதி இப்படியா ஆகவேண்டும்? எகிப்து நாடு இவ்வளவு அவல நிலையை அடைய வேண்டுமா? உங்கள் வீட்டு வாசலிலே வந்து நின்று கொண்டு அவமானம் கதவு இடிக்கிறது. அதைப் பார்த்து நீங்கள் வாய்திறவாமல் சிரித்துக்கொண்டு நிற்கிறீர்கள். உள்ளூற உவகை கொண்டு வேடிக்கை பார்க்கிறீர்கள். உங்களுடைய உள் உணர்ச்சியும் தேசப்பற்றும் இப்படித் தரைமட்டமாகச் சரிந்து வீழ்ந்து விட்டதைக்காண என் உள்ளம் பற்றி எரிகிறது; உடல் பதைக்கிறது; வயிற்றை என்னவோ செய்கிறது. வீரத்தாய் தந்தையர்களுக்குப் பிறந்த பயங்கொள்ளிப் பிள்ளைகளே! உங்களுடைய உள்ளத்திலே அணுவளவாவது வெட்கம் மானம், சூடு சொரணை என்று ஏதாவது இருந்தால், இப்பெண்மணியின் அவமானத்தை உங்கள் சொந்த அவமானமாக உங்களைப் பெற்று எடுத்து வளர்த்த தாய்க்கு ஏற்பட்ட அவமானமாக-கருதுங்கள்! இவள் உங்களுடைய மகாராணி என்பதை மறந்து விடாதீர்கள்! காட்டு மிராண்டி அரசனின் இந்தக் காட்டுமிராண்டித் தூதர்களைப் பார்த்து, 'இந்தக் கணமே இங்கிருந்து வெளியேறுங்கள்! நாங்கள் யுத்தகளத்துக்கு வந்து உங்கள் கோரிக்கைக்குப் பதில் வாளினால் அளிக்கிறோம்!' என்று சொல்லி உடனே விடை கொடுத்து அனுப்புங்கள். 'உங்கள் அசுத்தமான கைகளால் எங்கள் மகாராணியின் பரிசுத்தமான தேகத்தை அலங்கரிக்கும் இந்தத் துணியின் தலைப்பைக் கூடத் தொடவிடமாட்டோம். எகிப்து நாட்டு மண்ணிலே பிறந்து வளர்ந்த ஒரு வீரன் உயிருடன் இருந்தாலும் போதும், உங்கள் ஜபம் சாயாது. என்றைக்கு எங்கள் புனித பூமியான எகிப்து நாட்டிலே ஒரு வீரன் கூட உயிருடன் எஞ்சியிருக்க மாட்டானோ, அன்றைக்குத்தான் உங்களால் ஒருவேளை எங்கள் மகாராணியைத் தொட முடியும்' என்று சொல்லி இப்பொழுதே இங்கிருந்து இவர்களை வெளியேற்றுங்கள். எழுந்திருங்கள்! உங்கள் அமைதியையும், நிம்மதியையும் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். சுகத்தையும் போகத்தையும் சில நாட்களுக்கு மூட்டை கட்டி வையுங்கள்; எப்பொழுதுமே இன்ப வாழ்வு வாழலாம் என்று நீங்கள் கட்டிக் கொண்டிருக்கும் நம்பிக்கைக் கோட்டையிலே தீயை வையுங்கள். உங்கள் இன்ப வாழ்வு உங்களைவிட்டு எங்கும் ஓடிப் போய் விடாது. அது உங்களுக்குக் கட்டாயம் கிடைக்கும். உங்கள் உடலில் ஓடிக்கொண்டிருக்கும் உஷ்ண ரத்தத்திலே இன்னும் சூடு ஏற்றுங்கள்! உங்களுடைய அஸ்திரங்களையும் ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு, இந்தக் காட்டுமிராண்டி நீக்ரோவர்களை எகிப்து நாட்டின் எல்லைக்கு அப்பால் ஓட ஓட விரட்டி விட்டு மறு காரியம் பாருங்கள்! உலகத்துச் சரித்திரம் உங்கள் தைரியத்தைப் பாராட்டிப் புகழ்மாலை சூட்டும்; பூமாலை சூட்டும்; பாமாலையும் சூட்டும்!" என்று ஒரு நீண்ட பிரசங்கமே செய்து விட்டான்.

அதைக் கேட்டதுதான் தாமதம்; மக்களிடையே 'மள மள'வென்று பர

பரப்பு அதிகரித்தது. அவன் பேசின பேச்சு அவ்வளவும் வெறும் சொல் மாரி அல்லவே! உள்ளத்திலும் உடலிலும் ஒருங்கே உணர்ச்சித் தீயைக் கிளர்ச்சி கொள்ளச் செய்யும் சக்தி வாய்ந்த மின்னல் தாக்குதல் அல்லவா அது! அவனுடைய அந்தப் பேச்சு ஒவ்வொரு உள்ளத்திலும் உணர்ச்சித் தீயை மூட்டி வளர்த்து விட்டது. அந்தக் கூட்டத்திலே அப்பொழுது கோபத்தினால் ஜொலிக்காத ஒரு கண்கூடக் கிடையாது. வியாகுலமும் வேதனையும் படாத ஒரு உள்ளம்கூடக் கிடையாது. உணர்ச்சிப் பெருக்கில் ஆத்திரம் அடையாத ஒரு மூளைகூடக் கிடையாது. தியூனஸுக்கு நேர் எதிராக இருந்த அத்தனை பேரும் இப்பொழுது ஆடு சாய்வது போலத் தியூனஸின் பக்கம் சாய்ந்து விட்டனர். சிறிது நேரத்துக்கு முன்னால் தியூனஸின் கட்சியில் ஒருவன் கூடக் கிடையாது. இப்பொழுதோ வென்றால் தியூனஸின் கட்சியில் இல்லாதவன் ஒருவன் கூடக் கிடையாது! மக்களின் மனத்தை அப்படியே அடியோடு மாற்றி விட ரேம்பஸின் பேச்சில்தான் என்ன மந்திர சக்தி இருந்ததோ! அங்கே கூடியிருந்த மக்கள் அனைவரும் ஏககாலத்தில் சேர்ந்தாற்போல, "எங்கள் மகாராணி எங்கள் அன்னைக்குச் சமானமானவள். மகாராணி வேறு, தாய் வேறு என்று எண்ணுவது மகாபாவம். மகாராணியின் கௌரவம்தான் எங்கள் கௌரவம். மகாராணிதான் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் பெருமை தருபவள். எங்கள் உடலிலே உஷ்ண ரத்தம் ஓடும் வரையில் எங்கள் மகாராணியை எவனும் அவமதிக்க முடியாது. அவமதிக்க நாங்கள் இடமும் கொடோம்!" என்று உணர்ச்சி வெறியில் உரக்கக் கத்தினர்.

பிரதான மந்திரி எழுந்து மக்களை அமைதியாக இருக்கும்படி வேண்டினான். கூட்டத்திலே சற்றுச் சந்தடி ஓய்ந்ததும், உரத்த குரலில், "இப்பொழுது நாட்டு மக்களின் விருப்பம் என்ன என்பதை நான் அறிய விரும்புகிறேன்!" என்றான்.

"நாங்கள் எங்கள் மகாராணியின் மரியாதையையும் மானத்தையும் காக்க விரும்புகிறோம்!" என்று நாற்றிசையிலிருந்தும் பதில் வந்தது.

"ஷம்லார்க்கின் கையில் மகாராணியை ஒப்படைத்து விடலாம் என்று எண்ணுகிறவர்கள் இங்கு யாராவது இருக்கிறார்களா?" என்று மறுபடியும் பிரதான மந்திரி கேட்டான்.

"இல்லை, இங்கு அப்படி யாருமே இல்லை!" என்று பதில்வந்தது. (தொடரும்)


மிகவும் அபூர்வமான

# PEPS

வெந்த தொண்டைக்கு ஆறுதலளித்து இருமல், ஜலதோஷம், இன்ப்ளூயென்ஸாவை ஒழிக்கிறது

பெப்ஸ் மாத்திரை வாயில் கரையும்போதே அதன் மருந்து சத்துக்கள் சுவாசப் பைக்கும் மார்புக்கும் செல்கின்றன. பெப்ஸிலுள்ள அபூர்வ சத்துக்கள் வெகு விரைவில் அபாயகரமான கிருமிகளை அழித்து, தொண்டை கரகரப்பை அகற்றி, நமைச்சலைப் போக்கி, ஓயாத இருமலையும் அடியோடு நிறுத்தி விடுகிறது. சாப்பிட இனிமையானது.





PEPS மார்பு, சுவாசப்பை உபத்திரவங்களுக்கு மிகவும் இன்றியமையாத கிருமிநாசக மாத்திரைகள்



# மகிழபுரி மன்னன்

பி.எஸ்.மணி

## 4. தீரனின் தியாகம்!

சிறிது நேரத்துக்கெல்லாம் தீரன் அதிசயப் பெட்டியைக் கையில் எடுத்துக்கொண்டு அமராவதி இருக்கும் அறைக்கு வந்து சேர்ந்தான். கையில் அதிசயப் பெட்டியுடன் தன்னெதிரே தீரன் நிற்பதைக் கண்ட இளவரசி திகைத்துப் போய் நின்றாள்.

தீரன், "இளவரசி! மந்திரவாதியின் கதியை வந்து பாருங்கள்!" என்று சொல்லி இளவரசியை அழைத்துக்கொண்டு வந்து கற் சிலையாகச் சமைந்திருந்த மந்திரவாதியைக் காட்டினான். அதைக் கண்ட இளவரசிக்கு எல்லையற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. ஆனந்தக் கண்ணீர் சொரியத் தீரனின் கால்களில் விழுந்து, "தாங்கள் உயிரை இலட்சியம் செய்யாமல் என்னைக் காப்பாற்றினீர்களே? அதற்கு நான் உங்களுக்கு என்ன கைம்மாறு செய்வேன்?" என்றாள். தீரன் இளவரசியைப் பார்த்து, "அன்பிற்குரிய அரசகுமாரியே! இனி உங்கள் கஷ்டம் விடிந்தது. புறப்படுங்கள். உங்களை உங்கள் தேசத்தில் கொண்டுபோய் விட்டுவிடுகிறேன்" என்றான்.

அமராவதியும் 'சரி' யென்று ஒப்புக்கொண்டாள். தீரன் உடனே தன் கையிலிருந்த அதிசயப் பெட்டியை உற்றுப் பார்த்து, "இப்பொழுதே நாங்களிருவரும் மிதுனவர்மனின் மாளிகைக்குச் செல்லவேண்டும்" என்றான். அவன் அதைச் சொல்லி முடித்ததுதான் தாமதம்; அவர்கள் இருவரும் மகிழபுரி மன்னன் மிதுனவர்மனின் மாளிகையிலே இருந்தனர்.

வெகு நாளாகக் காணாதிருந்த தன் மகளைக் கண்டதும் மிதுனவர்மன் பெரு மகிழ்ச்சி அடைந்தான். அவளை அணைத்துக் கொண்டு, "கண்ணே! இவ்வளவு நாள் நீ எங்கிருந்தாய்?" என்று ஆவலுடன் கேட்டான். அமராவதி தனக்கு நேர்ந்த கஷ்டங்களையெல்லாம் விஸ்தாரமாகக் கூறினாள். அதைக் கேட்ட அரசன் மிதுனவர்மன் கண்ணீர் வடித்தான்.

பிறகு அரசகுமாரி தீரனைக் காண்பித்து, "அப்பா! இவர்தான் என்னைக் காப்பாற்றினார். இவர் காப்பாற்றாவிட்டால் நான் இங்கு இந்த ஜன்மத்தில் வருவதேது? மந்திரவாதி என்னை இலேசில் விட்டுவிடுவானா?" என்றாள். அரசன் மிதுனவர்மன் தீரனை நன்றியுடன் பார்த்து, "தீர வாலிபனே! உன் வீரத்தை மெச்சினேன். உன் உயிரையும் பொருட்படுத்தாமல் என் மகளைக் காப்பாற்றத் துணிந்தாயே! அதன் பொருட்டு இந்த மகிழபுரி நாட்டையே உனக்குக் கொடுத்தாலும்

தரும். எனக்கு வயதாகிவிட்டது. என் நாட்டை ஆள எனக்குப் பிள்ளையும் இல்லை. ஆகவே, உன்னையே மகிழ்புரி மன்னனாக முடிசூட்டத் தீர்மானித்து விட்டேன். அதோடு அமராவதியையும் உனக்கே மணம் முடித்து வைப்பது என்றும் நிச்சயம் செய்து விட்டேன்" என்றான்.

தீரன் திடுக்கிட்டுப்போய், "அரசே! நான் ஏழை விறகு வெட்டியின் மகன் ஆயிற்றே! எனக்கு இந்தப் பெருமையெல்லாம் எதற்கு?" என்றான்.

"எதற்கா? ஒரு பெரிய வீரச் செயலைச் செய்த உன்னைவிட அரச பதவிக்குத் தகுந்தவர் யார்? நீதான் மகிழ்புரிக்கு மன்னனாக ஆகவேண்டும்" என்று அடித்துச் சொன்னான் மிதுனவர்மன்.

தீரனால் அதற்குமேல் ஒன்றும் பதில் சொல்ல முடியவில்லை. அரசனுடைய வார்த்தைக்கு வேறு சொல்ல முடியுமா?

**ம**றுநாள் காலை பொழுது விடிந்ததும் விடியாததுமாக அரண்மனை திமிலோகப்பட்டது. ஏனென்றால் தீரனை அவனுடைய அறையில் காணோம். அரண்மனை முழுவதும் தேடியும் அவன் அகப்படாமற் போகவே, அவனைத் தேடப் பல திசைகளுக்கும் குதிரை வீரர்கள் பறந்தனர்.

அன்று அதிகாலையில் எழுந்ததும் தீரன் மந்திரவாதியினிடமிருந்து எடுத்து வந்திருந்த அதிசயப் பெட்டியுடன் காட்டை நோக்கிக் கிளம்பினான். எதற்காகத் தெரியுமா? அந்தப் பயங்கர நாக்கினிடம், தான் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி விட்ட விஷயத்தை தெரிவிப்பதற்காகத்தான்!

அந்தப் பயங்கர நாக்கு இருந்த ஆலமரத்தின் அடிக்கு வந்து சேர்ந்ததும் தீரனின் காதுகளில் அதே பழைய ஈனக்குரல் விழுந்தது. தீரன் அதன் அருகில் சென்று, "ஏ மர்மபுரி ராஜகுமாரனே! உனக்கு அளித்த வாக்குறுதியை நான் காப்பாற்றி விட்டேன். அரசகுமாரி அமராவதியையும் மீட்டுவிட்டேன். அந்த மந்திரவாதியையும் நன்றாகத் தண்டித்து விட்டேன். அவன் இப்பொழுது கல்லாகச் சமைந்திருக்கிறான்" என்றான்.

"என்ன நிஜமாகவா? சொன்ன வார்த்தையைக் காப்பாற்றியதற்காக உனக்கு என் மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பொழுதுதான் என் மனம் திருப்தி அடைந்தது" என்றான் பயங்கர நாக்கின் உருவத்திலே இருந்த மர்மபுரி ராஜகுமாரன்.

"அன்று என்னைக் கொல்லாமல் விட்டாயே, அதற்கு நான் என்றென்றும் உனக்குக் கடமைப் பட்டிருக்கிறேன்" என்றான் தீரன். பிறகு தன் கையிலிருந்த அதிசயப் பெட்டியை நோக்கி, "இதோ இருக்கும் இந்தப் பயங்கர நாக்கு பழையபடியே அழகிய அரசகுமாரனாக மாற வேண்டும்" என்றான். கண்மூடிக் கண் திறப்பதற்குள்ளாக அந்தப் பயங்கர நாக்கு மறைந்து விட்டது. எதிரே அழகிய ராஜகுமாரன் காட்சியளித்தான். தனது கோர உருவம் மறைந்து பழைய உருவம் வந்ததைக் கண்டு மர்மபுரி ராஜகுமாரன் பெருமகிழ்ச்சியடைந்தான். அவன் உடனே தீரனின் காலில் விழுந்து, "தாங்கள் செய்த பேருதவியை நான் என் உயிருள்ள வரைக்கும் மறக்கமாட்டேன்" என்றான்.

தீரன் அரச குமாரனைத் தூக்கி நிறுத்தித் தேற்றினான். பிறகு அவனை அழைத்துக் கொண்டு மகிழ்புரி மாளிகைக்கு வந்து சேர்ந்தான்.



தீரன் திரும்பி வந்து விட்டான் என்ற செய்தி அரண்மனை முழுவதும் பரவியது. அனைவரும் ஆனந்தக் கடலில் ஆழ்ந்தார்கள். மிதுனவர்மன் தீரனை அழைத்து, "ஏன் அப்பா! உனக்கு அரண்மனையில் ஏதாவது குறை நேர்ந்து விட்டதா? காலையில் எழுந்ததும் சொல்லாமல் கொள்ளாமல் எங்கேயோ ஓடிப்போய் விட்டாயே!" என்று கேட்டான்.

"இல்லை அரசே! எனக்கு எவ்விதமானக் குறையும் ஏற்படவில்லை. வரப்போகும் மகிழபுரி மன்னனை அழைத்து வருவதற்காகப் போயிருந்தேன். இதோ உங்கள் முன்னால் நிற்கிறானே, இவன் தான் மர்மபுரி தேசத்து அரசகுமாரன். இவனையே எனக்குப் பதிலாகத் தாங்கள் மகிழபுரி மன்னனாக ஏற்றுக் கொள்ள வேண்டும். நான் அரசனாகப் பிறந்தவன் அல்ல" என்றான் தீரன்.

அதைக் கேட்டதும் அரசன் அப்படியே திகைத்துத் திக்பிரமை பிடித்தவன் போலாகிவிட்டான். மர்மபுரி ராஜகுமாரனுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை.

தீரன் மேலும், "அரசே! அதோடு மட்டுமல்ல. அரசகுமாரி அமராவதியையும் இந்த அழகிய அரசகுமாரனுக்கே மணம் செய்து வைக்குமாறு வேண்டுகிறேன். அமராவதியின் பொருட்டு இந்த இளவரசன் பல கொடுமைகளை ஏற்றுக் கொண்டிருக்கிறான். மேலும் நான் அமராவதியை எனது சகோதரியாகவே பாவிக்கிறேன். என் சகோதரிக்கு மர்மபுரி ராஜகுமாரனே தகுந்த வரன்" என்று கூறி முடித்தான்.

இதைக் கேட்டு அங்கு கூடியிருந்த அனைவரும் மிகவும் வியப்படைந்தனர். மிதுனவர்மன் அப்படியே தீரனைக் கட்டிக்கொண்டு, "அப்பா! தீரன் என்ற பெயர் உனக்கு முற்றிலும் பொருந்தும். அன்று உன் உயிரைப் பொருட்படுத்தாது என் பெண்ணைக் காப்பாற்றினாய். இன்று அரச பதவியையும், அழகிய அரசகுமாரியையும் மற்றவனுக்காகத் தியாகம் செய்து விட்டாய்! உன் தியாகத்துக்கு ஈடு இணை இவ்வுலகில் ஒன்றுமில்லை!" என்று புகழ்மாலை சூட்டினதோடு மட்டும் அல்ல; பூமாலையும் சூட்டினான்.

இந்தச் செய்தி நாடு முழுவதும் பரவியதும் தீரனின் புகழ் இன்னும் ஒரு படி உயர்ந்தது. தீரனின் தியாகத்தைப் பாராட்டாதவர் இல்லை.

தீரனே முன் நின்று அரசகுமாரி அமராவதிக்கும், மர்மபுரி அரச குமாரனுக்கும் திருமணத்தை நடத்தி வைத்தான். திருமண வைபவத்தன்றே மர்மபுரி அரசகுமாரனுக்குப் பட்டாபிஷேக வைபவமும் வெகு விமரிசையாக நடந்தேறியது.

சில நாட்கள் ஆனந்தமாகச் சென்றன. ஒரு நாள் தீரன் தனது நண்பனை மகிழபுரி மன்னனிடம் சென்று, "அரசே! என் ஆசை பூர்த்தியாகி விட்டது. இனிமேல் நான் என் கிராமத்துக்குப் போவதென முடிவு செய்து விட்டேன். எனக்கு அரண்மனை வாழ்வு பிடிக்கவில்லை. மறுபடியும் எனது கிராமத்துக்குச் சென்று விறகு வெட்டிப் பிழைப்பதைத்தான் நான் விரும்புகிறேன்" என்றான்.

அரசன் எவ்வளவோ தடுத்துப் பார்த்தும் தீரன் கேட்கவில்லை. கடைசியில் அரசன், "நண்பனே! இந்தப் பொருள்களையாவது எடுத்துச் செல்ல வேண்டும்" என்றான்.

"அரசே! எனக்கு இந்தச் செல்வமெல்லாம் வேண்டாம். இவையனைத்



தையும் என் கிராமத்திலுள்ள பக்கத்து வீட்டுக்காரருக்கு அனுப்பி வையுங்கள்! அன்று அவர் எனக்குக் கோடாலி தந்திராவிட்டால் அரசகுமாரி அமராவதியைக் காப்பாற்றியிருக்க முடியாது. உங்களையும் கொடிய உருவத்திலிருந்து தப்புவித்திருக்க முடியாது!" என்றான் திரன்.

திரனின் வேண்டுகோளின்படியே மகிழ்புரி மன்னன் திரனின் பக்கத்து வீட்டுக்காரனுக்கு ஏராளமான பொருள் அனுப்பி வைத்தான். அது மட்டுமல்ல: திரனின் வார்த்தைகளையும் மீறி அவன் வம்சத்தாருக்கும் நிறைந்த செல்வத்துடன் பல கிராமங்களை மான்யமாக வழங்கினான். நன்றி மறப்பது நியாயம் இல்லை அல்லவா? திரனின் வம்சத்தார் பரம்பரை பரம்பரையாக அந்த மான்யத்தை இன்றும் அனுபவித்து வருவதாகக் கேள்வி. (முற்றும்)

**இரண்டு விடுகதைகள்**

1. சடசட மாங்காய் சங்கிலி ரோடு விழுந்தால் கறுப்பு. தின்றால் தித்திப்பு.
2. அக்காள் வீட்டுக்குத் தங்கை போகலாம் தங்கை வீட்டுக்கு அக்காள் போக முடியாது.

24-9-50 இதழ் விடுகதைகளுக்கு விடை:
1. சல்லடை 2. சந்திரன்

# பகை மூண்டது!

ஆந்தையைக் கண்டால் காக்கைக்கு ஆகாது. காக்கையைக் கண்டால் ஆந்தைக்கு ஆகாது. இரண்டுக்கும் ஜன்மப் பகை. ஏன் தெரியுமா?

ஒரு சமயம் பக்ஷிராஜன் கருடன் மீது பறவைகள் எல்லாம் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்தன.

"கருடனுக்குக் கர்வம் தலைக்கேறி விட்டது. மகாவிஷ்ணுவுக்கு நாம் தான் வாகனம் என்று அது பூரித்துப் போயிருக்கிறது. அது குடிகளாகிய நம்முடைய நலனைக் கவனிப்பதில்லை. ஆகவே அரச பதவியிலிருந்து அதை அகற்றி விடவேண்டும்" என்று ஒரு தீர்மானம் கொண்டு வந்தது கழுகு.

"ஆம், நான் அதை ஆமோதிக்கிறேன். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு நாம் குடியாட்சி ஸ்தாபித்து விட்டால் என்ன?" என்று கேட்டது முற்போக்கில் நாட்டம் கொண்ட ஒரு கிளி.

"அது நியாயம் இல்லை. யாரை யாவது அரசனாக நியமித்துத் தான் ஆகவேண்டும்" என்று அடித்துச் சொல்லியது தூக்கணாங் குருவி. அதற்குப் பழைய பழக்க வழக்கங்களிலே பலத்த நம்பிக்கை. அதை ஆதரித்து மற்ற பறவைகளும் ஆமோதித்தன. அவற்றினிடையே எந்தப் பறவையை அரசனாக ஆக்கலாம் என்ற பிரச்னை எழுந்தது. "ஆந்தை இரவு வேளைகளில் கண் விழிக்கிறது. ஆகவே நமக்கு உற்ற காவலனாக அதைத் தேர்ந்தெடுப்பதில் யாருக்கும் ஆட்சேபனை இருப்பதற்கில்லை" என்று சொல்லிக் கொக்கு அரச பதவிக்கு ஆந்தையின் பெயரைப் பிரஸ்தாபித்தது. எல்லாப் பறவைகளும் அதற்குத் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தன.

ஆந்தைக்கு அந்தச் செய்தி எட்டியது தான் . தாமதம்; அதற்கு ஆனந்தம் தலைகால் புரியவில்லை. அது ஆவலுடன் பறவைகள் தன்னை அழைத்துப் போக எப்பொழுது வருமோ என்று எதிர் பார்த்த வண்ணம் தன் மனைவி சகிதம் கூட்டில் உட்கார்ந்திருந்தது.

அப்பொழுதுதான் வெளியிலிருந்து வந்த காகம், "என்ன அநியாயம் இது? அரச பதவிக்கு ஆந்தை அருகதை உள்ளது தானா? கருடனைக் காட்டிலும் மேலான அரசன் உலகத்திலேயே கிடையாது. கருடனைப் பிடிக்கவில்லையென்றால் அன்னம், மயில் போன்ற வேறு அழகிய எத்தனையோ பட்சிகள் இல்லையா? பகல் வேளையில் பொட்டையாக இருக்கும் ஆந்தைதானா அகப்பட்டது நமக்கு?" என்றது.

பறவைகளுக்கெல்லாம் காக்கை சொல்லுவது நியாயம் என்று பட்டது.

ஆகவே கருடன் மீது கொண்டு வந்த நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை ஒத்திப் போட்டு விட்டு அவை அவ்விடத்தை விட்டு அகன்றன.

தனக்கு வரப் போகும் பதவியைக் காக்கைதான் கெடுத்து விட்டது என்பதை அறிந்த ஆந்தை அன்று முதல் காக்கையிடம் விரோதம் பாராட்டத் தொடங்கியது.

—அக்ஷயம்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

சந்திரா

இராஜ ராஜ சோழனின் இளம்பிராயத்தில் நிகழ்ந்த

மகத்தான சரித்திரத் தொடர் கதை

விரைவில் ஆரம்பமாகிறது

# ஆள் மாறாட்டம்

லக்ஷ்மி ராஜேந்திர சங்கர்

"ஏன் அக்கா, தூங்கி விட்டீர்களா?"

அப்பொழுதுதான் கண்களை மூடிய நான், காமுவின் குரலைக் கேட்டு விழித்துக் கொண்டேன்.

"இப்பொழுதுதான் கண்ணை மூடினேன். வா, உட்காரு. இன்று ஏதாவது விசேஷம் உண்டா? சொல்லு! காதல், கீதல், சாதல் ஒன்றும் இல்லையே?" என்று கேட்டேன்.

காமுவுக்கு அன்றாடம் நடந்த சமாசாரங்களை என்னிடம் சொல்லித் தீராவிட்டால் உறக்கம் வராது. எனக்கும் அவள் சொல்லும் கதையைக் கேட்காவிட்டால் பொழுது போகாது. அவளைப்போல் சுவாரஸ்யமாகக் கதை சொல்ல யாருக்குமே வராது. இன்று ஏதோ மிகவும் ருசிகரமான சம்பவம் நடந்திருக்கவேண்டும், அதனால்தான் அவள் தூங்குகிற என்னை எழுப்பியிருக்கிறாள் என்பதை உணர்ந்துகொண்டு நான் அவளுடைய கதையைக் கேட்கத் தயாரானேன்.

"லட்சணந்தான்! காதலும் கீதலும் காவியத்தில்தான்! அதிலும் நம்மூரில் காதலாவது கத்தரிக்காயாவது! சந்தையில் மாட்டைக் காட்டுவதுபோல், வந்தவர்களுக்கெல்லாம் பெண்களைக் காட்டி, சொஜ்ஜியும் பஜ்ஜியும் காப்பியும் கொடுத்து உபசாரம் செய்வதையும் அவர்களுடைய அசட்டுக் கேள்விகளுக்கெல்லாம் பொறுமையுடன் பதில் சொல்லுவதையும் பார்த்தால் அப்பப்பா! நாக்கைப் பிடுங்கிக்கொண்டு விடலாம் என்று தோன்றுகிறது. இதையும் ஒரு நாகரிக வழக்கமாக வைத்துக் கொண்டிருக்கிறோமே! இதைவிட 'கண்டதும் காதல், கேட்டதும் காதல்' என்கிறார்களே, அது எவ்வளவோ தேவலை என்று தோன்றுகிறது! என்ன, நான் சொல்லுவது?" என்று படபடப்புடன் கேட்டாள் காமு.

"ஏதேது, காமு? இன்று உன் அபிப்பிராயம் முற்றிலும் வேறு பட்டுவிட்டதே! இன்று இவ்வளவு கோபம் எதற்கு? உன்னை ரொம்பப் பேர் பார்க்க வந்துவிட்டார்களோ? அவர்கள் மேலுள்ள கோபத்தையெல்லாம்சேர்த்துக் காட்டுகிறாய் போலிருக்கிறதே!" என்றேன்.

"என்னை அப்படி யாரும் வந்து பார்க்கவுமில்லை, குறை கூறவுமில்லை!"

"அந்த விஷயத்தில் நீ அதிர்ஷ்டசாலிதான். என் தங்கை கமலத்தைப் பார்க்க வந்தவர்களுக்குக் கணக்கே கிடையாது. எங்கள் அப்பாவுக்கு வரும் ஒரு வருஷத்து வரும்படி ஒரு மாதத்தில் பெண் பார்க்க வந்தவர்களுக்கு உபசாரம் செய்யவே சரியாயிருந்ததென்றால் நீயே பார்த்துக் கொள். அதையெல்லாம், பார்த்த கமலம், பாவம்! தனக்குக் கல்யாணமே வேண்டாமென்று சொல்லிவிட்டாள். அது கிடக்கட்டும்! நீ கூற வந்த விஷயத்தைச் சொல்லு!" என்றேன்.

என்னுடைய ஆவலைக் கண்டு காமுவும் விஸ்தாரமாகத் தன் கதையைக் கூறலானாள் :—

"புதுக் கிராமத்தில் வெங்கடேசய்யரைத் தெரியுமோ, இல்லையோ? 'பட்டணத்திலிருந்து பெண் பார்க்க வருகிறார்கள். கூடமாட ஒத்தாசைக்கு வந்தால் சௌகரியமாயிருக்கும்' என்று என்னை நேற்றே வரச் சொல்லி யிருந்தார்!

"ஐயோ, பாவம்! இதோடு அந்தப் பெண்ணுக்குத்தான் எத்தனை வரன்கள் பார்த்தாயிற்று! தை பிறந்தது முதல் ஆனி முடியும் வரை வரன் வேட்டைதான்! இவர்களுக்குப் பிடித்தால் அவர்களுக்குப் பிடிக்காது. அவர்களுக்குப் பிடித்தால் இவர்களுக்குப் பிடிக்காது. 'பெண்ணுக்குச் சமைக்கத் தெரியுமோ?' என்று ஒருவர் கேட்டாராம். இன்னும் கொஞ்சநாள் போனால் 'பெண்ணுக்குச் சாப்பிடத் தெரியுமோ? குளிக்கத் தெரியுமோ?' என்றெல்லாம் கூடக் கேட்பார்கள் போலிருக்கிறது!

"ஆமாம்! பெண்ணுக்கு நாட்டியம் ஆடத் தெரியுமோ என்று ஒருவர் கேட்டாராம். இன்னொருவர், பெண்ணுக்குச் சானி



நடக்கத் தெரியுமோ என்றாராம். இப்படி யெல்லாம் கேட்பதைப் பெரிய பெருமை என்று எண்ணி விட்டார்கள் போலும்! பிள்ளைவீட்டார் என்றால் எது வேண்டுமானாலும் வாய் கூசாமல் பேசலாம் என்று எவன் சட்டம் போட்டானோ, தெரியவில்லை! அவர்களுக்கு ஏற்றபடி பெண்களும் 'பிள்ளைக்கு நாலு பேருடன் பேசத் தெரியுமோ? பால் மோர் கணக்குப் பார்க்கத் தெரியுமோ? துணிகளை வண்ணானுக்குப் போடத் தெரியுமோ?' என்றெல்லாம் நேருக்கு நேர் கேட்டுவிட வேண்டும். வெங்கடேசய்யர் அகத்திலே கூட அப்படித்தான் ஆயிற்று! இந்தப் பெண் பார்க்கும் கொடிய வழக்கம் என்றுதான் ஒழியுமோ?" என்று சொல்லி நிறுத்தினாள் காமு.




"உம், வெங்கடேசய்யரின் பெண்ணுக்கும் வரன் வந்திருக்கிறதாக்கும்! ஏற்பாடுகள் பலமாகத்தானிருக்கும், ஐ.சி.எஸ். இல்லை, இல்லை; குறைந்தபட்சம் ஐ.ஏ.எஸ். இல்லாமல் அவர் வரன் பார்க்க மாட்டாரே!" என்று நான் மீண்டும் விஷயத்தைக் கிளறினேன்.

"ஆமாம்! இதுவரையில் மூன்று ஐ.சி.எஸ்.களுக்குச் சீமைக்குப் போகப் பணம், மோட்டார் வாங்கப் பணம் என்றெல்லாம் கொடுத்துவிட்டுக் கடைசியில் பிள்ளைக்கு 'ஆசாரமில்லை, மரியாதை யில்லை' என்று சொல்லித் தள்ளிவிட்டார். இப்பொழுது பெரிய இடமாகப் பார்த்துப் பிடித்திருக்கிறாராம். கல்யாணச் செலவு திட்டம் ஒரு லட்சம். சர்வ நிச்சயமாக லக்ன பத்திரிகை கூட வைத்தாகி விட்டது. கடைசியில் இப்படி முடியும் என்று யார் எதிர்பார்த்தார்கள்?" என்றாள் காமு.

"இதென்ன, இப்படி ஒரே குண்டாகத் தூக்கிப் போடுகிறாயே! எப்படி முடிந்தது?"

"நேற்று முழுவதும் வீடு அல்லோல கல்லோலப்பட்டது. பெண் கிராமாந்திரம் என்று பிள்ளை வீட்டார் தள்ளிவிடக் கூடாதே என்பதற்காகப் பட்டணத்திலிருந்து கோமதியின் அத்தங்காளை வரவழைத்திருக்கிறார்கள். அவளுடைய மேற்பார்வையில் கோமதிக்கு வேளைக்கொரு உடையும் அலங்காரமும் செய்து பார்த்திருக்கிறார்கள். அன்று ஒரு நாள் என்னைத் தனியாகச் சந்தித்தபொழுது அந்தப் பெண் கோமதி, 'காமு! இதென்ன பிழைப்பு! நாடக வேஷம் மாதிரி! எனக்குத் துளிக் கூடப் பிடிக்கவில்லை!' என்று சொல்லி அழுதுக் கொண்டாள்.

பிள்ளை பெண் பார்க்க வருவதாக இருந்தான். ஆகவே பொழுது விடிந்ததும் முதல் காரியமாக வேலையாட்களும் வெங்கடேசய்யரும் மோட்டாருடன் ஸ்டேஷனுக்குச் சென்றனர். நாங்களும் ஒரு நிலைகொள்ளாமல் அலைந்து கொண்டிருந்தோம். தன் வாழ்நாளில் கண்ணாடியையே கண்டறியாத பாகீரதி மாமி, தலையை வாரி முடிந்து கொள்வதும், முகத்தைத் துடைத்து குங்குமம் இட்டுக் கொள்வதுமாக இருந்தாள்.

"கடைசியில் மோட்டாரும் வந்து சேர்ந்தது. மாப்பிள்ளைப் பையனும் அவன் தோழனும் வந்திருந்தார்கள். அவர்களுக்கு நடந்த ஆசார உபசாரங்களைக் கேட்கவே வேண்டாம். பையனுக்கு நல்ல ராஜ களையான முகம். சங்கோசமோ என்னமோ, பையன் மிகவும் அடக்கமாக இருந்தான். ஆனால் அவன் தோழன் 'கலகல' என்று பேசிக் கொண்டு வெகு கலகலப்பாக இருந்தான்.

"கோமதியும் வழக்கம்போல் தாம்பூலத் தட்டுடன் வந்து அவனுக்கு நமஸ்காரம் செய்தாள். பையனுக்குப் பெண்ணைப் பிடித்ததோ இல்லையோ, கோமதிக்குப் பையனை நன்றாகப் பிடித்துவிட்டது.

"ஆயிற்று! எல்லோரும் ஸ்நானம் செய்து சாப்பாட்டை முடித்துக்கொண்டு படுக்கப் போனார்கள். மாப்பிள்ளைப் பையனுக்குத் தோட்டத்துத் திண்ணையில் கட்டிலும் மெத்தையும் போடப்பட்டிருந்தது.

"சுமார் ஒரு மணிக்குப் பட்டணத்திலிருந்து ஒரு தந்தி வந்தது. தந்தி என்றால்

எல்லோருக்கும் 'காபரா' ஏற்படுவது சகஜம்தானே? வெங்கடேசய்யர் அதைப் பரபரப்புடன் வாங்கி உடைத்தார். அவ்வளவு தான்! மறு பேச்சில்லாமல் 'விடுவிடு' என்று தோட்டத்துத் திண்ணைக்குச் சென்றார். பையன்கள் இருவரும் படுத்துக் கொண்டிருந்தனர். வெங்கடேசய்யரைக் கண்டதும் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தனர். 'என்னவோ, ஏதோ!' என்று பாகீரதி மாமி, நான், கோமதி மூவருமாக அங்கு ஓடினோம்.

"'நாங்கள் எதிர்பார்த்த விருந்தாளிகள் நாளை வருவதாகத் தந்தி அடித்திருக்கிறார்கள். உண்மையைச் சொல்லுங்கள்! நீங்கள் யார்?' என்று கர்ஜனை செய்து கொண்டிருந்தார் வெங்கடேசய்யர்.




"அதற்குள் அந்தப் பையன் மிகவும் சாவதானமாக, 'கோபித்துக் கொள்ளாதீர்கள், ஸார்! தப்பு உங்கள்பேரில்தான். பட்டணத்திலிருந்துவந்த விருந்தினர்கள் நாங்கள் தான் என்று தப்பாக எண்ணி நீங்கள்தானே எங்களை அழைத்து வந்தீர்கள்? நான் சொல்லிவிடலாம் என்றுதான் நினைத்தேன். ஆனால், என் நண்பன்தான் 'பேசாமலிரு! வேடிக்கை பார்ப்போம்!' என்றான். விஷயம் என்னவென்பது இங்கே வந்த பிறகுதான் எங்களுக்குத் தெரிந்தது!' என்றான்.

"'இதென்ன அக்கிரமம்! என் மானம் போவதற்குள் இங்கிருந்து ஓடிப் போய் விடுங்கள்!' என்று இரைந்து கத்தினார் வெங்கடேசய்யர்.

"அதற்குள் பாகீரதி மாமி 'நன்னாயிருக்கு! யாரோ ஊர் பேர் தெரியாத வழிப்போக்கர்களுக்கு இவ்வளவு தடபுடலா? வா, அம்மா கோமதி!' என்று பெண்ணை இழுத்தாள்.

"அப்பொழுது மீண்டும் அந்தப் பையன், 'ஸார்! நாங்களும் நல்ல குடும்பத்தில் பிறந்து வளர்ந்தவர்கள்தான்! காலேஜில் இடம் கிடைக்காமல் ஏதாவது விவசாயமாவது செய்வோம் என்று கிராமத்துக்கு வந்தோம். இங்கே அடுத்த கிராமத்தில் என் அத்தை இருக்கிறாள். நீங்கள் வந்து உபசாரம் செய்ததும் அத்தைதான் உங்களை அனுப்பியிருக்கிறாளாக்கும் என்று முதலில் எண்ணி விட்டேன். 'சோர்ந்து போன மனத்துக்கு ஒரு சிறு தமாஷ் இருக்கட்டும்! பேசாமலிரு!' என்று என் நண்பன் வேறு தூண்டவே, நானும் பேசாமலிருந்து விட்டேன். மற்றபடி நாங்கள் ஒரு மோசமும் செய்ய எண்ண வில்லை. இந்தச் சம்பவத்தை நீங்களும் உங்கள் குடும்பத்தாரும் மறந்து என்னை மன்னித்து விடுங்கள்! நாங்கள் போய் வருகிறோம்!' என்று வினயத்துடன் சொல்லிக் கோமதியிருந்த இடத்தைக் கடைக் கண்ணால் பார்த்தான்.

"அப்பொழுது அங்கே ஒரு பெரிய ஆச்சரியம் நடந்தது. கோமதி இரண்டு அடி முன்னுக்கு வந்து அந்தப் பையனை நன்றாக நிமிர்ந்து நோக்கினாள். பிறகு, 'அப்பா! இவருக்குச் சம்மதமானால் நான் இவரையே கல்யாணம்செய்து கொள்ளுகிறேன். இல்லாவிட்டால் எனக்குக் கல்யாணமே வேண்டாம். இனி நான் யாருக்கு முன்னாலும் வந்து பல்லை இளித்துக்கொண்டு நிற்கப் போவதில்லை! நாளை என்னைப் பார்க்க வரப் போவதாக இருப்பவருக்கு, வரவேண்டாம் என்று தந்தி கொடுத்து விடுங்கள்!' என்றாள்.

"ஒரு விநாடி எங்கும் ஒரே நிசப்தம் நிலவியது. பிறகு வெங்கடேசய்யர் 'கோமதி! உனக்கு ரொம்ப வாய் துளிர்த்து விட்டது! நல்ல யோசனை! காலேஜில் படிக்க இடம் கிடைக்காமல் தோட்டம் துரவைக்கு எடுக்கப் போகிறவனுக்கா உன்னைக் கொடுக்கச் சொல்லுகிறாய்?' என்று கடித்து கொண்டார்.

"'ஸார்! உங்கள் பெண்ணை யாரும் இங்கே கல்யாணம் செய்துகொள்ளக் காத்திருக்கவில்லை. எங்களை இப்படி அவமரியாதையாக நடத்த உங்களுக்கு உரிமை கிடையாது!' என்று அந்தப் பையனின் தோழன் கோபத்துடன் சொன்னான்.

"கோமதி மறுபடியும் ஒருமுறை மாப்பிள்ளைப் பையனைப் பார்த்துவிட்டு மனத்திலே தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, 'அப்பா! இவர்கள் போவதற்குள் என்னைக் கல்யாணம் செய்துகொள்ள இவருக்குச் சம்மதமா, இல்லையா என்று கேட்டு விடுங்கள்!' என்றாள்.



"வெங்கடேசய்யர் பற்களை 'நறநற' வென்று கடித்து, 'இதென்ன வீடா, சினிமாக் கொட்டகையா?' என்று கர்ஜித்துக் கொண்டே பையன்கள் இருவரையும் 'கர கர' வென்று பிடித்து இழுத்துக் கொண்டு வெளியே சென்றார்.

"பாகீரதி மாமி, 'என்னடி இது! மானம் போகும்படி செய்து விட்டாயே! பெண்ணாகப் பிறந்தவள் இப்படி நேருக்கு நேர் கேட்பாளோ? எல்லாம் காலத்தின் கோலம் தான்!' என்று கூறித் தலையில் அடித்துக் கொண்டாள்.

"'ஆமாம்! புருஷர்கள் நூறு பேர் வந்து காதில்லை, மூக்கில்லை என்று ஆராய்ந்து பார்த்துவிட்டு வேண்டாமென்று சொல்வது மட்டும் அவமானம் இல்லைபோலிருக்கிறது! யார் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். கல்யாணம் செய்து கொள்வதாயிருந்தால் நான் அவரைத்தான் செய்து கொள்ளப் போகிறேன்!' என்று கூறிவிட்டு உள்ளே ஓடிவிட்டாள் கோமதி.

"கணவனும் மனைவியுமாகப் பெண்ணுடன் அநேக விதத்தில் வாதாடியும் பயன் படவில்லை. கடைசியில் வெங்கடேசய்யர் அந்தப் பையனைத் தேடிக்கொண்டு அவனுடைய அத்தை வீட்டுக்குச் சென்றார். அங்கே போய் வந்ததில் அவருக்குப் பரிபூரண திருப்தி ஏற்பட்டு விட்டது. 'ரொம்ப நல்ல சம்பந்தம்! பணம் இல்லாவிட்டால் என்ன? நமக்கு இருப்பது எட்டுக் குடும்பத்திற்கு போதுமே!' என்று கூறித் தன்னைச் சமாதானித்துக் கொண்டார். இருந்தாலும் பாவம், பாகீரதி மாமிக்கு மனம் கேட்கவில்லை. தனக்கு வாய்க்கப்போகும் மாப்பிள்ளைக்கு நல்ல படிப்போ உத்தியோகமோ இல்லையே என்று வருத்தமாகத்தானிருந்தது. ஆகவே, அவள் 'சர்க்கார் உத்தியோகம் இல்லாத மாப்பிள்ளை என்ன மாப்பிள்ளை!' என்று அங்கலாய்த்துக் கொண்டாள். வெங்கடேசய்யர் 'இரு! இரு! எப்படியாவது காலேஜில் இடம் கிடைக்கும்படி ஏற்பாடுசெய்கிறேன்!' என்று சமாதானம் செய்தார்.

"அதற்குள் கோமதி, 'காலேஜும் வேண்டாம். கீலேஜும் வேண்டாம். அவருக்குப் பிடித்தமான விவசாயமே செய்யட்டும்!' என்றாள்.

"இப்படியாகக் கடைசியில் எல்லாம் உற்சாகமாக முடிந்தது! முகூர்த்தம் அடுத்த வாரம் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்!" என்று காமு கூறி முடித்தாள்.

"போகட்டும்! ஏதோ பெண் பார்க்க வந்த விஷயம் மங்களகரமாக முடிந்ததே! அதைச் சொல்லு!" என்றேன் நான்.

"எதுவும் மங்களகரமாக முடியாவிட்டால் நமக்கும் நிம்மதி ஏற்படுவதில்லை. நாளை விடியற் காலையிலேயே வந்து விடுகிறேன் என்று பாகீரதி மாமியிடம் சொல்லியிருக்கிறேன். ஆகவே, என்னைச் சற்றுச் சீக்கிரம் எழுப்பி விடுங்கள், அக்கா!" என்று சொல்லிவிட்டுச் சுவாரஸ்யமாகப் படுத்து உறங்க ஆரம்பித்து விட்டாள் காமு.


## கல்கி

(வாரப் பதிப்பு)

### சந்தா விவரம்

| | | ஒரு வருஷம் | ஆறுமாதம் |
|---|---|---|---|
| இந்தியா சிலோன் | ரூ. | 13-0-0 | 6-8-0 |
| பர்மா மலேயா வெளிநாடு | ரூ. | 14-10-0 | 7-5-0 |

குறிப்பு:— வி. பி. பி. மூலம் அனுப்புவது கிடையாது. தயவுசெய்து முன் பணம் அனுப்ப வேண்டும். சிலோன் நேயர்கள் மட்டும் வி. பி. பி. மூலம் சந்தாத் தொகையை செலுத்தலாம்.

சந்தா நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரைக் குறிப்பிடவும்.

மானேஜர் - கல்கி காரியாலயம் - சென்னை

துப்பட்டிகள்
வெண்மையாகச்
சலவை செய்யப்
பட்டுள்ளன...

துப்பட்டிகள்
பிரகாசமாகச்
சலவை செய்யப்
பட்டுள்ளன...

# ஸன்லைட் சோப்பில் தான்




துணிகளை அடித்துத் துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும்
சலவை செய்கிறது !

S. 128-50 TM

# மறந்த விஷயம்

கு. ரா.

மறதி மன்னார்சாமி பள்ளிக்கூட உபாத்தியாயராக இருந்து ஓய்வு பெற்றார். அவர் மாணவனாகவும், உபாத்தியாயராகவும் இருந்த போது ஞாபக சக்திக்குப் பேர் போனவர். வயது ஆக, ஆக அவருடைய ஞாபக சக்தி தடுமாற்றம் கண்டுவிட்டது. பள்ளிக்கூட வகுப்புகளில் அவருடைய ஞாபக சக்தி அமுல் செய்து வந்த நிலைமை மாறி, ஞாபக மறதி குழப்பம் செய்யும் நிலைமைக்கு வந்து விட்டது.

மற்றவர்களுடைய மறதிக்கும் 'மறதி மன்னார்சாமி'யின் மறதிக்கும் ஒரு பெரிய வித்தியாசம் உண்டு. நீங்களும் நானும் பேசிக் கொண்டிருக்கும்போது விஷயத்தை மறந்துவிடுவோம்; விஷயத்தை மறந்தவுடன் நம்முடைய பேச்சும் நின்று விடும். மறதி மன்னார்சாமியோ ஒரு விஷயம் மறந்து போனால் அவரை அறியாமலேயே வேறு விஷயத்துக்குப் பாய்ந்து விடுவார். பூகோள வகுப்பில் தீபகற்பங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தால், தென்னிந்திய தீபகற்பம், அரேபியா தீபகற்பம், அரேபியாவிலிருந்து மகம்மது நபியைப்பற்றி, முக்கியமாக மகமது நபி தன்னைவிட வயது மிக்க கதீஜா பேகத்தை மணம் செய்து கொண்ட வரலாறு, அதிலிருந்து அதே மாதிரி வயதான ஸ்திரீயைக் கல்யாணம் செய்து கொண்ட ஷேக்ஸ்பியரைப் பற்றியும் அவருடைய நாடகங்களைப் பற்றியும் விமரிசனம் —ஆகியவற்றைப் பற்றி அந்தாதி வரிசையில் பாடம் கற்பிப்பார். ஒரு நாள் அவருடைய வகுப்பில் மேற்பார்வை பார்க்க நுழைந்த தலைமை உபாத்தியாயரை, "டேய், ப்யூன்! உன்னை யார் கூப்பிட்டது? ஏன் இங்கு வந்தாய்?" என்று ஏதோ ஞாபகத்தில் அவர் கேட்டு விட்டாராம்; அந்த வகுப்புத் தான் அவருடைய கடைசி வகுப்பு என்று ஆகிவிட்டது!

அவர் என்றைய தினத்திலிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டாரோ, அந்த தினத்திலிருந்து எங்கள் பேட்டை வாசிகளின் ஓய்வும் விடை பெற்றுக் கொண்டு விட்டது. விடியற் காலை, காலை, பகல், நடுப்பகல், மாலை, இரவு, நிசி என்ற பேதா பேதம் இல்லாமல் அவர் எல்லோருடைய வீடுகளுக்கும் வந்து 'பீரியட்' கணக்கில் பேசிக் கொண்டிருப்பார்! பள்ளிக்கூடத்தில் மணியடித்து, அடுத்த பீரியட் உபாத்தியாயர் ஒரு ஐந்து நிமிஷம் காத்துக் கொண்டிருந்த பிறகுதான் மன்னார்சாமி தாம் பேசுவதை நிறுத்தி வெளியே போவாரென்றால், நம்மைப் போன்ற சாதாரண மனிதர்களால் அவர் பேசுவதை நிறுத்த முடியுமா?

ஏதோ ஒரு கதையில் இஷ்டம்போல் கிராமத்தில் நுழைந்து, கண்ணில் பட்ட பேரைப் பிடித்துத் தின்ற ராக்ஷஸனிடம், "ஐயா! நீங்கள் தினம் நாங்கள் எதிர்பாராத வேளையில் ஊரில் நுழைந்து எங்களைக் கதிகலங்க அடிக்க வேண்டாம். நாங்களே நாளுக்கு ஒரு ஆள் வீதம் அனுப்பி வைக்கிறோம்" என்று கிராமவாசிகள் கேட்டுக் கொண்டதுபோல, "ஸார், மன்னார்சாமி அவர்களே, நீங்கள் தினம் திடுதிப்பென்று வந்து எங்களைப் பேச்சுக்குப் பிடித்துக் கொள்வதற்குப் பதில் நாங்களே ஒரு 'டயம் டேபிள்' போட்டுத் தருகிறோம். அதன்படி நீங்கள் நாளொன்றுக்கு ஒரு வீடு வீதம் வந்து பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போங்கள்!" என்று அவரைத் தாழ்மையுடன் கேட்டுக் கொள்ள வேண்டுமென்பது என் யோசனை. ஆனால் மறதி மன்னார்சாமியை மீண்டும் 'டைம் டேபிள்' கட்டத்துக்குள் அடைக்க முடியுமா? காலம் கடந்த பரம்பொருள் அல்லவா அவர்?

'நாம் நினைப்பது ஒன்று, கடவுள் நினைப்பது மற்றொன்று' என்ற பழமொழியை 'நான் நினைத்தது ஒன்று, மறதி மன்னார்சாமி நினைத்தது மற்றொன்று' என்று மாற்றி அமைக்கும்படி நேரிட்டுவிட்டது நேற்று.

சாய்வு நாற்காலியில் சிரமபரிகாரம் செய்து கொண்டிருந்த எனக்குத் தூரத்தில் வாசல் 'கேட்'டைத் தாண்டி உள்ளே வந்து கொண்டிருந்த மன்னார்சாமியின் உருவம் கண்ணில் பட்டதும் 'பகீர்' என்றது. வருவது வரட்டும் என்று மனத்தைச் சமாதானம் செய்து கொண்டு அவரை வரவேற்றேன்.

"இன்று எழு மணிக்கு யாரோ ஒருவர் புளியங் கொட்டையின் உபயோகத்தைப் பற்றி 'அதுவும் உணவுதான்!' என்ற பேச்சு வரிசையில் பேசுகிறாராமே, சற்று ரேடியோவைத் திருப்பி வைக்கிறீர்களா?" என்று கேட்டுக் கொண்டே, எனக்கு எதிரிலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தார் அவர்.

"வேறு யார் பேசுவார்கள்? உணவு மந்திரிதான் பேசுவார்! — இந்தப் பேச்சுக்களையே நான் கேட்கிறதில்லை, ஸார்! உங்

களுக்காக வைக்கிறேன், கேளுங்கள் !" என்று சொல்லி, ரேடியோவை வைத்தேன்.

"புளியங்கொட்டைகளைக் கொண்டு சங்கு ஆடின கைகளினால், புளியங்கொட்டைப் புடவை யணிந்த மனைவி, புளியங் கொட்டை சுண்டல் பரிமாறினால் பிரும்மானந்தமா யிருக்கும்......!" என்று ரேடியோவிலிருந்து ஒரு குரல் கேட்டது.

"மிஸ்டர் ராமு, ரேடியோவை மூடி விடுங்கள். நல்ல இசைத் தட்டு சங்கீதம் கேட்க வேண்டுமென்று உங்கள் வீட்டுக்கு வந்தேன். நீங்கள் என்னவென்றால் புளியங் கொட்டைப் புராணத்தை எவனோ வாசிக்கிறான்; அதைக் கேட்டுக் கொண்டு இருக்கிறீர்களே! நல்ல சினிமாப் பாட்டு இருந்தால் வையுங்கள்; கேட்கலாம்" என்றார் மறதி மன்னார்சாமி.

"ஸார், மதாலக்கேஷ்கர் பாடின சில இசைத் தட்டுகளைக் கேளுங்கள்" என்று சொல்லி, அந்தப் பாடல்களை ஒலி பரப்பிக் கொண்டிருந்த நிலையத்திற்கு ரேடியோவைத் திருப்பினேன்.

பாட்டுகளைச் சுவாரஸ்யமாக ஒரு கால்மணி நேரம் கேட்டவுடன், "ராமு, இந்தப் பாடல்களைத் தமிழில் கேட்டிருக்கிறேன் போலிருக்கிறது; ஞாபகமில்லை!" என்றார் அவர்.

நான் ஒன்றும் சொல்லாமல் இருந்தேன்.

"ராமு, உங்கள் ரேடியோவில் பி. பி. ஸி. வருமா...?" என்று அவர் மீண்டும் கேட்டார்.

"அது என்ன, அப்படிக் கேட்கிறீர்கள்? பேஷாக வரும்!" என்றேன் நான்.

"இன்று இங்கிலாந்துக்கும், மேற்கிந்திய கிரிக்கெட் கோஷ்டிக்கும் 'டெஸ்ட் கிரிக்கெட்' நடக்கிறது. 'ரன்னிங் காமெண்டரி' கேட்க வேண்டும் என்ற நினைப்பில் உங்கள் வீடு தேடி வந்தேன். அதைச் சொல்ல மறந்தே போய்விட்டேன்!" என்றார் மறதி மன்னார்சாமி. பிறகு 'ரன்னிங் காமண்டரி'யைச் சுவாரஸ்யமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

"அப்பா, ஹால் அவுட்டா, ஸ்கோர் என்ன?" என்று இந்தச் சமயத்தில் என்னைக் கேட்டுக்கொண்டே வந்தான் என்னுடைய பத்து வயதுப் பையன்.

"ஹால் ஸெஞ்ச்சரி போட்டு விட்டான்!" என்றார் மன்னார்சாமி.

நான் பையனின் பக்கம் திரும்பி, "போடா, போய் உன் பாடத்தைப் படித்து விட்டுத் தூங்கு; நாழியாகிறது" என்றேன்.

"சிறு பிள்ளைகளுக்கு அப்படித்தான் இருக்கும், ராமு! இங்கிலீஷ்காரர்கள் நெப்போலியனை வாடர்லூ யுத்தகளத்தில் முறியடித்ததற்குக் காரணம் அவர்கள் கிரிக்கெட் மைதானத்தில் கற்றுக்கொண்ட கட்டுப்பாடுதான்!" என்றார் அவர்.

"ஹிஸ்டரி பாடத்தில் படித்தது இன்னும் ஞாபகம் இருக்கிறது, ஸார்!" என்றேன்.

"நெப்போலியன் மகா வீரன். வாடர்லூவில் கூட அவன்தான் ஜயித்திருக்க வேண்டியது. கடும் குளிரில் பனி மூடிய ஆல்ப்ஸ் மலையைச் சைன்யத்தோடு 'தாண்டினவ னில்லையா, அவன்?" என்றார்.

விஷயம் ஓலை விட்டு நெப்போலியனை நோக்கி நகர்வதை அறிந்து ரேடியோவை மூடிவிட்டேன். என் பையனும் குதிப் பறிந்து போய்விட்டான்.

"நெப்போலியனுக்கு முன்பு ஆல்ப்ஸ் மலையைப் படைகளுடன் தாண்டின வீரன் யார் தெரியுமா?" என்றார் மன்னார்சாமி.



ஏழை:—ஐயா, எனக்கு இருக்க வீடு கிடையாது!

வீட்டுக்காரர்:—ரொம்ப நல்லது: வாடகை, வரி, எலெக்ட்ரிக் பில் ஒன்றும் கொடுக்க வேண்டாம்!

ஏழை:—எனக்கு வேலையும் கிடையாது.........!

வீட்டுக்காரர்:—சரிதான்; வேலை போய்விடுமோ என்று பயப்பட வேண்டாம்......!

ஏழை:—கையிலே காசு கூட இல்லை, எஜமான்!

வீட்டுக்காரர்:—பேஷ்! ரொம்ப நல்லதாய்ப் போச்சு! வேலை இல்லாத தடியன்களுக்குப் பிச்சை போட வேண்டிய அவசியம்கூட இல்லை; போய் வா!



"என் பிள்ளையாண்டான் கிண்டி இஞ்சினீயரிங் காலேஜுக்குப் போகணும் என்று சொல்கிறான்; நம்பளைப் போல உள்ளவா அவ்வளவு செலவு செய்ய முடியுமா?"

"அப்படி ஒன்றும் அதற்குச் செலவில்லையே! கிண்டிக்கு இரண்டு அணாத்தானே பஸ் சார்ஜ்?"

"இதெல்லாம் யாருக்கு ஸார், ஞாபகம் இருக்கிறது?" என்றேன் சற்று அலுப்புடன்.

"ஹானிபல் என்பவன்தான் முதன் முதல் அந்த மகத்தான சாதனையைச் செய்தவன்!" என்று ஆரம்பித்து, ஹானிபலின் வீர தீரப் பிரதாபங்களையும் அவனைக் கண்டு ரோமாபுரி ஜனங்கள் நடுநடுங்கியதையும், அவனுடைய அடிச் சுவட்டைப் பின்பற்றிய வீரர்கள்தாம் அலக்ஸாந்தர், ஜூலியஸ் ஸீஸர், நெப்போலியன், ஹிட்லர் என்பவர்கள் என்றும் சுமார் இரண்டாயிரத்தைந்நூறு வருஷ சரித்திரத்தை அவர் அலசி ஆராய்ந்தார்.

மணி எட்டரையாகி விட்டது. நான் மேஜையின்மேல் வைத்திருந்த ஆபீஸ் பைல்களைப் பரிதாபமாகப் பார்த்தேன்.

"ஹோம் ஒர்க் கொண்டு வந்திருக்கிறீர்களா? பள்ளிக்கூடத்தில் படித்தபோது 'ஹோம் ஒர்க்' செய்தீரோ இல்லையோ, நன்றாக வேண்டும், உமக்கு!" என்றார் மன்னார்சாமி சிரித்துக் கொண்டே.

அவர் சிரித்தது எனக்கு நெருப்பாக இருந்தது.

மணி இரவு ஒன்பதுக்கு மேல் ஆகிவிட்டது. எனக்கோ வயிற்றைப் பசித்தது. சமையலறையிலிருந்து வந்த சத்தம், வாசனைகளிலிருந்து மனைவியும் குழந்தைகளும் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்களென அறிந்தேன். — மன்னார்சாமியின் சமாசாரம் எல்லாருக்கும் தெரிந்ததுதானே!

சிறிது நேரம் மௌனமாக அவர் இருந்தார். பிறகு மேஜையின் மேலிருந்த ஒரு பத்திரிகையை எடுத்தார். "நேற்று ஒரு கதையை இதில் பாதியில் விட்டுவிட்டேன்; அதைப் படித்து முடித்து விடுகிறேன்!" என்று சொல்லி, அதைப் படிக்க ஆரம்பித்து விட்டார் அவர்.

மதிப்புக்குரிய மாஜி வாத்தியார் மன்னார்சாமியாக இல்லாவிட்டால், நான் இதுதான் சமயம் என்று வீட்டுக்குள் சென்று சாப்பிட்டுவிட்டு வந்திருப்பேன். ஆனால் இவ்வளவு பெரியவரிடம் எப்படி மரியாதைக் குறைவாக நடந்து கொள்ளுவது?

இம்மாதிரி எண்ணி நான் தவித்துக் கொண்டிருந்த சமயத்தில், அவர் ஆனந்தமாக நாற்காலியில் சாய்ந்து கொண்டே, அதற்கு அடுத்த கதையை ஆழ்ந்து படிக்க ஆரம்பித்தார்.

மணியைப் பார்த்தேன்; கடிகாரத்தின் இரண்டு முட்களும் பத்தில் நின்று கொண்டிருந்தன. சாதாரணமாக ஒன்பது, ஒன்பதரைக்கெல்லாம் விடுதலை அளிக்கும் மன்னார்சாமி ஏன் இன்று மணி பத்தாகியும் நம்மை விடவில்லை என்று புரியவில்லை.

நடுநடுவில் முகத்துக்கு நேரே இருந்த பத்திரிகையைத் தாழ்த்தி அவர் என்னை நோக்கிப் புன்முறுவல் செய்தார். கதையை ரசிக்கிறார் என்று அதற்கு நான் அர்த்தம் செய்து கொள்ளுவதா, அல்லது என்னுடைய பரிபவத்தைக் கண்டு அவரே முதலைக் கண்ணீர் விடுவதுபோல இரக்கம் காட்டுகிறார் என்று கொள்ளுவதா?

கடைசியில் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "ஸார்! மன்னிக்கணும்; மணி பத்தாகி விட்டதே! வீட்டில் உம்மைத் தேடமாட்டார்களா? நானும் சாப்பிடவில்லை; ஆபீஸ் வேலையும் பாக்கியிருக்கிறது!" என்றேன் நான்.

"அடடா, மிஸ்டர் ராமு! நான் உங்கள் வீட்டிலா இருக்கிறேன்? நீங்கள்தான் என் வீட்டில் வந்து பேசிக் கொண்டிருக்கிறீர்களாக்கும் என்றல்லவா நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன்?—வயதாகி விட்டதல்லவா?—சரி, நாளைக்குப் பார்க்கலாம்" என்று சொல்லி விட்டு, அவர் எழுந்து போனார். நான் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டேன்!

# பாலும் பாவையும்

## 11

'இயற்கையின் விந்தையே விந்தை! ஒரு பெண்ணுக்கு என்னதான் நல்ல மனதோடு இன்னொரு ஆண் மகன் உதவி செய்தாலும், அதை விபரீதமாக எடுத்துக் கொண்டு விடுவதற்குப் பாழும் இயற்கை சுலபமாக இடம் கொடுத்து விடுகிறது......!' —கனகலிங்கம்.

பொழுது விடியப் போகும் தருணத்தில், 'தொம் தொம், தொம் தொம்' என்ற மங்கல முரசொலி கீழேயிருந்து வந்து கனகலிங்கத்தின் சிந்தனையைக் கலைத்தது; அதைத் தொடர்ந்து பலர் ஒரே ஆரவாரம் செய்துகொண்டு ஓடும் சத்தமும் அவன் காதில் விழுந்தது. 'என்ன விசேஷமாயிருக்கும்!' என்று ஒன்றும் புரியாமல் அவன் எழுந்து போய்த் தெருவைப் பார்த்தான். அப்பொழுது திருவிழாக் காலமாதலால் அம்மனுக்குத் தெரியாமல் சுவாமி தாசி வீட்டுக்குச் சென்று திரும்பிக் கொண்டிருந்தார். எனவே, மற்ற வாத்தியங்களெல்லாம் நிறுத்தப்பட்டு முரசு மட்டும் ஒலித்துக் கொண்டிருந்தது. பக்தர்கள் சுவாமியின் மானத்தைக் காப்பதற்காக இருபுறங்களிலும் வரிசைக் கிரமமாக எரிந்து கொண்டிருந்த 'காஸ்-லைட்'டுகளை அணைத்திருந்ததோடு, அவருடைய தலையில் முக்காட்டையும் போட்டுத் தொலைத்திருந்தனர்!

இந்தக் கண்ணராவிக் காட்சியைத் தீவட்டி வெளிச்சத்தில் கண்டதும் கனகலிங்கத்துக்கு என்ன தோன்றிற்றோ என்னமோ, அவன் ஓடோடியும் சென்று ராதாமணியை ஓர் உலுக்கு உலுக்கி எழுப்பிக்கொண்டு வந்தான். அவன் தூக்கக் கலக்கத்தில், "என்னடா, உனக்கு என்ன வந்து விட்டது!" என்று எரிச்சலுடன் கேட்டான்.

"எனக்கு ஒன்றும் வரவில்லை. கீழே பார்த்தாயா!—உன்னைப் போன்ற பக்தர்களிடம் கடவுள் அகப்பட்டுக் கொண்டு படும் பாட்டை!" என்றான் கனகலிங்கம்.

"போடா, போ!—இதற்குத்தானா நீ என்னுடைய தூக்கத்தைக் கலைத்தாய்!—இதெல்லாம் ஒரு ஐதிகம்......"

"ஏது ஐதிகம்!—இன்னும் கொஞ்ச நாட்கள் போனால் சுவாமி தாசி வீட்டுக்குச் செல்வது வைதிகம் என்றுகூட நீ சொல்லி விடுவாய்போலிருக்கிறதே!—ரொம்ப அழகாய்த்தான் இருக்கிறது!—இந்த லட்சணத்தில் நீங்கள் என்னடாவென்றால் 'கற்பு, கற்பு' என்று வேறு கதைக்கிறீர்கள்—உங்களுக்கு வெட்கமாயில்லையா!"

"இதெல்லாம் பெரிய தத்துவம்; உனக்கு ஒன்றும் புரியாது......"

"அப்படிப் போடு ஒரு போடு! — இப்பொழுதுதான் எனக்குத் தெரிகிறது, 'தத்துவம்' என்றால் என்ன என்று...!"

"என்ன தெரிகிறது!—சொல்லேன், பார்ப்போம்...!"




"ஏது உனக்கும் எனக்கும் புரியவில்லையோ, அதுதானே தத்துவம்!"

"நாசமாய்ப் போச்சு!— நான் போய்ப் படுத்துக் கொள்கிறேன், போடா!" என்று சொல்லிக் கொண்டே சென்று, ராதாமணி மீண்டும் படுக்கையில் படுத்து, உடனே தூங்கியும் விட்டான்!

அந்தத் 'தூங்கு மூஞ்சி'க்கு மேலும் தொந்தரவு கொடுக்கக் கனகலிங்கம் விரும்பவில்லை. வயிற்றில் எரிச்சலுடன் அவன் சிறிது நேரம் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு, 'மனிதர்களையாவது கடவுள் காப்பாற்றலாம்; கடவுளை யார் காப்பாற்றுவது!—தன்னைத் தானேதான் அவர் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்' என்று அவன் தனக்குள் சொல்லிக் கொண்டே திரும்பினான்.

அதுவரை அவனுக்குத் தெரியாமல் பின்னால் நின்றுகொண்டிருந்த அகல்யா, "இது சட்டப்படி குற்றம்!" என்றாள் சிரித்துக் கொண்டே.

"ஏது......!"

"சுவாமி தாசி வீட்டுக்குச் சென்று வருவதுதான்!" என்று அகல்யா சொன்னாள்.

கனகலிங்கமும் சிரித்தான்.

"ஒருவேளை இதற்காகப் போலீஸார் கடவுளிடம் லஞ்சம் வாங்கியிருப்பார்களோ, என்னமோ!" என்றாள் அகல்யா.

"இருக்காது; பிறரிடம் தாங்கள் வாங்கும் லஞ்சத்துக்காக மன்னிப்புக் கோரி அவர்கள் கடவுளுக்கே லஞ்சம் கொடுப்பவர்களாயிற்றே!" என்றான் கனகலிங்கம்.

"எனக்கு ஒரு சந்தேகம்—எல்லா உயிர்களையும் தன் உயிர் போலப் பாவிப்பவர்களை மகாத்மாக்கள் என்று நீங்கள் அழைக்கிறீர்கள். சாட்சாத் கடவுளையே தங்களைப் போலப் பாவிக்கும் இவர்களை என்னவென்று அழைப்பது!" என்று அகல்யா கேட்டாள்.

"ஏன், துராத்மாக்கள் என்று அழைத்தால் போகிறது!" என்றான் கனகலிங்கம்.

"எல்லோரையும் துராத்மாக்கள் என்று சொல்லிவிட முடியுமா!— உதாரணமாக, இதோ நீங்கள் இருக்கிறீர்கள்—கற்பைக் காப்பாற்றுவதில் கடவுளுக்குக்கூட இல்லாத கவலை உங்களுக்கு இருக்கிறது......" என்று அதுதான் சமயமென்று அவனை வம்புக்கிழுப்பதில் முனைந்தாள் அவள்.

அவன் குறுக்கிட்டு, "இது என்ன வேடிக்கையாயிருக்கிறதே! அந்தக் கவலை இல்லா



"இந்த ஹோட்டல் வைத்து ரொம்ப நாளாயிருக்குமோ?"

"ஆமாம், ஆயிரத்துத் தொளாயிரத்துப் பதினாலாம் வருஷத்திலே வைத்தது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!"

"இந்த மைசூர்ப்பாகு திறப்பு விழாவுக்காகப் பண்ணி வைத்ததாயிருக்கும் போலிருக்கிறது!"

விட்டால் நான் எப்படி என்னுடைய ஆண்மையைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்! இல்லை, நீதான் எப்படி உன்னுடைய பெண்மையைக் காப்பாற்றிக் கொள்ள முடியும்?—மனிதன் ஒழுக்கத்தோடு வாழ்வதற்கு ஆண்மையும் பெண்மையும் மிகமிக அவசியமாச்சே; இல்லையென்றால் மிருகத்துக்கும் மனிதனுக்கும் வித்தியாசமே இருக்காதே!" என்றான்.

"இப்படிப் பேசும் உங்களைப்போன்ற ஆண்கள்தான் பெண்களின் விடுதலையைப் பற்றியும் பேசுகிறார்கள்—இது அதிசயமாயில்லையா!"

"இதில் என்ன அதிசயம் இருக்கிறது!—பெண்கள் அடிமையிலிருந்து விடுதலை பெற வேண்டுமென்றுதான் அவர்கள் சொல்கிறார்களே தவிர, கற்பிலிருந்து விடுதலை பெற வேண்டுமென்று அவர்கள் சொல்லவில்லையே!"

"அதற்கு இந்திரனைப் போன்ற ஆண்கள் குறுக்கே நிற்கிறார்களே, அவர்களைப் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்! அவர்கள் தங்களுடைய கற்பைக் காப்பாற்றிக் கொள்ளாத வரை பெண்கள் தங்களுடைய கற்பை எப்படிக் காப்பாற்றிக் கொள்ள முடியும்!"

"ஏன் முடியாது!—பெண்கள் தங்களுடைய கற்பைக் காப்பாற்றிக் கொண்டால் ஆண்கள் தாங்களாகவே தங்களுடைய கற்பைக் காப்பாற்றிக் கொண்டு விடுகிறார்கள்."

"அதே மாதிரி பெண்களும் சொல்லலாமல்லவா......!"

"பேஷாய்ச் சொல்லலாம்......"

"அப்படியானால் இந்தப் பிரச்னைக்கு ஒரு முடிவு வேண்டாமா!"

"அதைப் பற்றி உன்னைப்போன்ற பெண்களும் இந்திரனைப் போன்ற ஆண்களும்தான் சிந்திக்க வேண்டும்......"

"சிந்திக்கச் சிந்திக்க ஒரு பலனையும் காணுமே! மூளைதான் குழம்புகிறது......!"

"உங்களுடைய மூளை மட்டுமா குழம்புகிறது!—உங்களை எவ்வளவோ கஷ்டங்களுக்கு மத்தியில் கலாசாலைக்குப் படிக்க அனுப்பி வைக்கிறார்களே, உங்களுடைய பெற்றோர்கள்—அவர்களுடைய மூளைகூடக் குழம்புகிறது!"

அகல்யாவுக்கு இது பிடிக்கவில்லை; அவள் அவனை எரித்து விடுபவள் போல் பார்த்தாள்.

"என்மீது கோபப்பட்டுப் பிரயோஜனமில்லை; நான் உள்ளதைத்தான் சொல்கிறேன்!"

"நீங்கள் ஒன்றும் உள்ளதைச் சொல்ல வேண்டாம்......"

"சரி, சும்மா இருக்கிறேன்!"

அகல்யா ஒரு நிமிஷம் அவனை உற்றுப் பார்த்தாள். மறு நிமிஷம், "நீங்கள் வேண்டுமானால் ராமகிருஷ்ண பரமஹம்ஸரைப் போல எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் சும்மா இருக்கலாம்; என்னால் சாரதாமணி அம்மையாரைப் போலச் சும்மா இருக்க முடியவில்லையே!" என்றாள் அவள்.

"உண்மைதான்! — சாரதாமணி அம்மையாருக்குக் கடமை பெரிதாயிருந்தது; உனக்கோ காதல் பெரிதாயிருக்கிறது. ஆனால் கடமையின்றிக் காதல் வளர முடியாது, காதலின்றிக் கடமை வளர முடியாது என்பதை நீ இன்னும் உணரவில்லை. அதைவிட நீ கட்டிக் கொண்டு அழும் காதலுக்கு ஒழுக்கம் உயிரைப் போன்றது என்பதையும் நீ இன்றுவரை உணராமலிருப்பதுதான் எனக்கு ரொம்ப ரொம்ப ஆச்சரியமாயிருக்கிறது!" என்றான் கனகலிங்கம்.

அகல்யா பொறுமை இழந்து, "கடைசியில் என்னுடைய கதிதான் என்ன!—அன்று சொன்னதுபோல் என்னை நீங்கள் காதலிக்காமல் கொல்வதைவிடக் காதலித்தே கொன்றுவிடப் போகிறீர்களா!" என்று அழுதுகொண்டே கேட்டாள்.

கனகலிங்கம் சிரித்துக்கொண்டே, "சரி; நான் இப்பொழுது உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன்—உன்னுடைய காதல் பிழைக்க வேண்டுமா! அல்லது, நீ பிழைக்க வேண்டுமா!" என்று கேட்டான்.

"இது என்ன கேள்வி! — நானும்தான் பிழைக்க வேண்டும்; என்னுடைய காதலும் தான் பிழைக்க வேண்டும்......"

"அது எப்படி முடியும்!—நீ பிழைக்க வேண்டுமானால் உன்னுடைய காதல் செத்துத்தான் தீரவேண்டும்; உன்னுடைய காதல் பிழைக்க வேண்டுமானால் நீ செத்துத்தான் தீரவேண்டும். இதைத் தவிர, நீ இப்பொழுதுள்ள நிலையில் வேறு வழியே கிடையாது!"

இந்தச் சமயத்தில், "அட, பாவி! இது என்னடா, இது! பொழுது விடிந்ததும் விடியாததுமாயிருக்கும்பொழுதே யாருக்கோ சாக வழி சொல்லிக் கொடுத்துக்கொண்டிருக்கிறாயே!" என்று கூறிக்கொண்டே ராதாமணி எழுந்து உட்கார்ந்தாள்.

"ஒன்றுமில்லை; காதல் பிரச்னையைக் கொஞ்சம் அலசிக் கொண்டிருக்கிறேன்.......!"

"அது பொல்லாத பிரச்னையாச்சே! — சாட்சாத் ராமபிரானுக்கும் சீதாதேவிக்கும் இடையே அது இருந்திருக்கிறது; அர்ஜுனனுக்கும் பாஞ்சாலிக்கும் இடையேகூட அது இருந்து தொலைந்திருக்கிறது!— அதைப் பற்றி யாராயிருந்தாலும் ஒரு முடிவுக்கு வருவது அவ்வளவு லேசான காரியமல்லவே!" என்றான் ராதாமணி.

"அது என்னடா, அது! — எது என்று தெளிவாகத்தான் சொல்லித் தொலையேன்!"

"காதல்தான்!" என்று அவன் காதோடு சொல்லிவிட்டு, ராதாமணி அவசர அவசரமாகச் சட்டையை எடுத்து மாட்டிக்கொண்டான்.

"என்ன, வீட்டுக்குக் கிளம்பிவிட்டாயா!" என்று கேட்டான் கனகலிங்கம்.

"ஆமாம்" என்றான் அவன்.

"உன்னிடம் நான் ஒரு சமாசாரம் சொல்ல வேண்டுமே!—மத்தியானம் எனக்குச் சாப்பாடு வேண்டாம்....."

"ஏன்!"

"நான் எங்கேயாவது போய் வேலை தேடலாமென்று இருக்கிறேன்; எப்பொழுது திரும்புவேனோ என்னமோ......!"

"சரி; அவர்களுக்கு......!" என்று அகல்யாவைச் சுட்டிக் காட்டிக் கேட்டான் ராதாமணி.

"எனக்கும் வேண்டாம்; நான் இன்று என் சிநேகிதி வீட்டுக்குப் போய் வரலாமென்று இருக்கிறேன்" என்றாள் அகல்யா.

"எந்தச் சிநேகிதி!—அன்றொருநாள் உனக்கு அழகுச் சாதனங்கள் வாங்கி அனுப்பியிருந்த சிநேகிதியா!" என்று கனகலிங்கம் கேட்டான்.

"ஆமாம்" என்றாள் அகல்யா.

ராதாமணி போய் விட்டான்.

அவன் சென்றதும், "நீ வெளியே போக வேண்டும் என்கிறாயே, வழியில் உன்னுடைய சித்தப்பா உன்னைப் பார்த்துவிட்டால் நீ என்ன செய்வாய்!" என்று கேட்டான் கனகலிங்கம்.

"போகிற உயிர் உங்களால்தானா போகவேண்டும்! — சித்தப்பாவால்தான் போகட்டுமே!" என்று அகல்யா விரக்தியுடன் சொன்னாள்.

"அப்படியானால் சரி!" என்று கனகலிங்கம் அவள் சொன்னதை ஆமோதித்தான்.

அதற்குள் அகல்யா ஏதோ ஒரு நிர்மானத்துக்கு வந்தவளாய், "நான் போனால் போகிறேன் — நீங்களாவது தப்பிப் பிழையுங்கள்!" என்று துக்கம் தொண்டையை அடைக்கச் சொன்னாள்.

"யாரிடமிருந்து!" என்று கனலிங்கம் கேட்டான்.

"யாரோ ஒருவன் அடிக்கடி வந்து உங்களையும் என்னையும் எட்டி எட்டிப் பார்த்துவிட்டுப் போகிறானே, அவனிடமிருந்து..........!"

"உனக்காகவா!"

"இல்லை; உங்களுக்காகத்தான்!"

"எனக்காகத் தப்பிப் பிழைக்க நான் எப்பொழுதுமே விரும்புவதில்லை; ஏனெனில் மரணம் யார் மூலமாக வந்தாலும் நான் இரு கைகளையும் நீட்டி அதை ஆவலுடன் வரவேற்கத் தயாராயிருக்கிறேன்......"

"எதற்கு... ...!"

"வேறெதற்குமில்லை; இன்று வரை நான் எடுத்திருக்கும் 'நல்லவன்' என்ற பெயரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத்தான்!"

"உங்களுடைய புத்தி ஏன்தான் இப்படியெல்லாம் போகிறதோ........!"

"என்னுடைய புத்தி அப்படிப் போகவில்லை; உலகம் அப்படிப் போய்க்கொண்டிருக்கிறது......!"

"என்னமோ, போங்கள்!—உங்களை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை!" என்று சொல்லிவிட்டு, அகல்யா ஒரு கையால் நெற்றியை அழுத்திப் பிடித்துக் கொண்டே மேல் மாடிக்குச் சென்றாள்.

கனகலிங்கம் துண்டை எடுத்துத் தோளின் மேல் போட்டுக்கொண்டு குழாயடியை நோக்கி நடந்தான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு அவன் அறையைப் பூட்டிச் சாவியைக் கொடுப்பதற்காக அகல்யாவிடம் வந்தான். அதை வாங்கிக்கொள்வதற்காக அவள் கையை நீட்டினாள். அதற்குள், 'இன்னொரு முறை நாம் இங்கே திரும்பி வரவேண்டுமா, என்ன! அப்படி வருவதால் யாருக்கு என்ன லாபம்! அதனால் அவருக்கும் தொல்லை; நமக்கும் தொல்லை!—வேண்டாம்; திரும்பி வரவே வேண்டாம்' என்று தோன்றியது அவளுக்கு. உடனே அவள் நீட்டிய



கையை இழுத்துக் கொண்டு, "என்னிடம் சாவி எதற்கு! நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்!" என்றாள்.

"பரவாயில்லை; இதை நீயே வைத்துக் கொள்—என்னிடம் வேறொரு சாவி இருக்கிறது" என்று சொல்லி, அவளிடமும் ஒரு சாவியை வற்புறுத்திக் கொடுத்துவிட்டுக் கனகலிங்கம் சென்றான்.

தெருக்கோடியைக் கடக்கும் வரை அவனையே பார்த்துக் கொண்டிருந்த அகல்யா, 'சட்' டென்று திரும்பி வராந்தாவில் கிடந்த நாற்காலியில் 'தொப்'பென்று உட்கார்ந்தாள். அவளையும் அறியாமல் அவள் இதழ்கள், 'ரொம்ப விசித்திரமான மனிதர்! இவரைவிட விசுவாமித்திரரே எவ்வளவோ தேவலை போலிருக்கிறது!' என்று முணுமுணுத்தன.

## 12

இதற்குமுன் சென்னை ரஸ்தாக்களில் எத்தனையோ தடவை அகல்யா தன்னந் தனியளாக நடந்திருக்கிறாள். அப்பொழுதெல்லாம் அவள் எதையும் யாரையும் ஒரு முறை கூடத் திரும்பிப் பார்த்ததில்லை; இப்பொழுதோ அவள் எல்லாவற்றையும் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றாள். குறிப்பாக ஜவுளிக் கடைகள், நகைக் கடைகள், வளைக் கடைகள், செருப்புக் கடைகள் ஆகியவற்றின்மீது அவள் கவனம் அடிக்கடி சென்றது. அங்கே தனக்குத் தெரிந்தவர்கள் யாராவது நின்று கொண்டிருப்பார்களோ, அவர்கள் தன்னைக் கண்டதும் தங்களுக்குள் ஏதாவது பேசிக் கொள்வார்களோ என்று அவளுக்கு அச்சமாயிருந்தது. அதற்கேற்றாற் போல் அங்கங்கே அவளுக்குத் தெரிந்தவர்கள் ஓரிருவர் இல்லாமலும் போகவில்லை; அவர்கள் அவளைப் பற்றிப் பேசாமலும் இருக்கவில்லை.

'இதோ போகிறாள் பார், இவள்தான் அகல்யா!' என்றாள் அவர்களில் ஒருத்தி.

'எனக்குத் தெரியுமே!—யாரோ ஒருவனுடன் ஓடிப் போய் விட்டாள் என்று சொன்னார்களே, அவள்தானே இவள்!' என்றாள் இன்னொருத்தி.

'ஆமாம்; ஆனால் ஓடிப் போகவில்லையாம்; நடந்துதான் போனாளாம்!' என்றாள் மற்றொருத்தி 'களுக்'கென்று சிரித்துக்கொண்டே.

'எனக்கு யாரோ பறந்து போனாள் என்று சொன்னார்களே!' என்றாள் வேறொருத்தி 'கலகல' வென்று நகைத்துக் கொண்டே.

இவ்வாறு 'பெண்ணினத்தில் பிறந்த வெண்ணிலா'வைப் போல, அந்த நாரீமணிகள் அகல்யாவைப் பழிப்பதன் மூலம் தங்களைத் தாங்களே, தங்களுக்குத் தெரியாமல் பழித்துக் கொண்டார்கள். அந்தப் பழிச் சொற்களைக் கேட்கக் கேட்க அகல்யாவின் உணர்ச்சி குன்றிற்று; உள்ளம் குன்றிற்று — ஏன், உடலே குன்றிற்று என்றுகூடச் சொல்லலாம். அது மட்டுமல்ல; அவளுடைய நிமிர்ந்த நடையும் நேர் கொண்ட பார்வையும் கூட நிலை குலைந்தன.



இப்பொழுதுதான் சமூகத்தின் உண்மையான சொரூபத்தைப் பேதை அகல்யா கண்ணாரக் கண்டாள்; காதாரக் கேட்டாள். கண்ட பிறகு, கேட்ட பிறகு, அவள் முதன் முதலாகக் கவலையும் கொண்டாள்.

'இன்னும் கொஞ்ச தூரந்தான்; இதோ போய் விடலாம்' என்ற நம்பிக்கை அந்த நிலையிலும் அவளுடைய நடைக்குக் கொஞ்சம் வேகம் கொடுத்தது.

"அம்மா! டாக்ஸி வேண்டுமா, அம்மா!"

"வேண்டாம்...."

"அம்மா! ரிக்ஷா வேண்டுமா, அம்மா!"

"வேண்டாம்...."

இவ்வாறு மறுத்துக் கொண்டு வரும்போது, அவள் என்ன நினைத்துக் கொண்டாளோ என்னமோ, தனக்குத்தானே சிரித்துக் கொண்டாள். அந்தச் சிரிப்பைத் தொடர்ந்து, 'அந்த நாட்களில் அப்பா ஊரிலிருந்து கேட்கும்போதெல்லாம் பணம் அனுப்பிக்கொண்டே இருப்பார்; நாம் பையைத் திறப்பதும் மூடுவதுமாகப் பணத்தை அலட்சியமாக எடுத்து அனாவசியமாகச் செலவழித்துக் கொண்டிருப்போம். இப்பொழுது யார் நமக்கு அப்படிப் பணம் அனுப்பி வைக்கப் போகிறார்கள்! யாருடைய தைரியத்தைக் கொண்டு நாம் இப்பொழுது 'டாக்ஸி'க்கும் 'ரிக்ஷா'வுக்கும் செலவழிக்க முடியும்!' என்று எண்ணி, அவள் உள்ளம் கடந்த நாட்களை நோக்கிச் சென்றது.

'பலனை எதிர்பாராமல் கடமையைச் செய்யும் அப்பாக்களைப் போன்ற ஜீவன்கள் இந்த உலகத்தில் வேறு ஏதாவது இருக்க முடியுமா!' என்று எண்ணி அவள் ஒரு கணம் வியந்தாள். மறுகணம், 'குற்றமற்ற அப்பாவின் அன்பை ஒரு நொடியில் உதறித் தள்ளிவிட்டு, குற்ற முள்ள இந்திரனின் அன்பை நாம் தேடிச் சென்றோமே!—என்ன மடமை! எவ்வளவு மதியீனம்!' என்று எண்ணி அவள் பொருமினாள்.

'பெற்ற தாயினும் மேலாக இன்னொருவர் நம்மிடம் அன்பு செலுத்த முடியுமா! நம்முடைய சுகத்திலும் துக்கத்திலும் அவளுக்கு இல்லாத அக்கறை வேறு யாருக்காவது இருக்க முடியுமா! — கடைசியில், 'தான் பத்து மாதங்கள் சுமந்து பெற்ற குழந்தை' என்பதையும் மறந்து, அவள் நம்மை வெறுத்துத் தள்ளும் படியான நிலைமைக்கு அல்லவா நாம் இப்பொழுது வந்து விட்டோம்! எல்லோரும் செத்துப் பிரிந்தால் நாம் சாகாமலேயல்லவா பிரிந்து விட்டோம்! — அப்பப்பப்பா! என்ன கொடுமை! எவ்வளவு கோரம்!—நினைக்கும்போதே நெஞ்சம் பதறுகிறதே!'

'உம், கடந்த காலத்தை எண்ணி இப்பொழுது வருந்துவதில் என்ன பயன்!—




இனிமேல் என்ன நடக்கப் போகிறதோ! சிநேகிதி தன்னை எப்படி வரவேற்கப் போகிறாளோ! அவள் தன்னைப் பற்றி, தன்னுடைய 'கடந்தை'யைப் பற்றி, என்ன நினைக்கப் போகிறாளோ! என்ன சொல்லப் போகிறாளோ......!'

'அவள் எப்படி வரவேற்றாலும் சரி; என்ன சொன்னாலும் சரி; — அவளிடம் எதையும் ஒளிக்கக் கூடாது; எல்லாவற்றையும் சொல்லிவிட வேண்டும்......'

'ஆம்; கனகலிங்கத்தைப் பற்றியும், அவரைப் பற்றித் தான் கண்ட கனவைப் பற்றியும், அந்தக் கனவு நிறைவேறாமல் போய்விட்டதைப் பற்றியும்கூட அவளிடம் சொல்லிவிடத்தான் வேண்டும்......'

'ஐயோ! இது என்ன!—நம்முடைய கனவு நிறைவேறவில்லை என்று நாம் எப்படிச் சொல்ல முடியும்! அவர் நம்மைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாரோ! நமக்காக அவர் இன்னும் என்ன செய்ய வேண்டுமென்று காத்துக் கொண்டிருக்கிறாரோ!—நாமோ எடுத்ததற்கெல்லாம் அவசரப் படுகிறோம்; அவரோ எதையும் ஆற அமர யோசித்துச் செய்கிறார்!—முன் பின் தெரியாத நமக்காக அவர் இதுவரை செய்திருக்கும் உதவியைத் தான் அற்பமென்று தள்ளிவிட முடியுமா! அவர் நம்மைக் கல்யாணபுரத்தில் சந்தித்திருக்காவிட்டால் நம்முடைய கதிதான் என்ன ஆகியிருக்கும்!—நமக்கிருக்கும் அவசரத்தின் காரணமாக நாம் இன்னும் எத்தனை தவறுகள் செய்திருப்போமோ! இன்னும் எத்தனை எத்தனை தொல்லைகளுக்கு ஆளாகியிருப்போமோ! —நல்ல சமயத்தில் கடவுள் போல வந்து அல்லவா அவர் நம்மைக் காப்பாற்றினார்.....!'

'அவர் நன்றாயிருக்கட்டும்; அவருடைய வாழ்க்கை எல்லாவிதத்திலும் சிறக்கட்டும்; அவருடைய அறிவுச் சுடர் என்னைப் போல் அந்தகாரத்தில் சூழ்ந்து அவதிப்படும் அபலைகளுக்கு நாலு பேரைப் போல வாழ வழி காட்டட்டும்!'

அகல்யா இப்பொழுது எதையும் பொருட்படுத்தவில்லை; யாரையும் திரும்பிப் பார்க்கவில்லை. இரு கைகளாலும் காதுகளைப் பொத்திக்கொண்டு 'மட மட' வென்று நடந்தாள்.

'பாம், பாம்—பாம்ப பாம், பாம்ப பாம்...!'

மோட்டார் 'ஹாரன்' சத்தம் அவள் காதில் விழவில்லை; எனவே அவளுடைய நடையின் வேகமும் குறையவில்லை.

திடீரென்று அவளுக்கு அருகே அந்த மோட்டார் 'கிறீச்'சிட்டுக் கொண்டு நின்றது.

"அகல்யா! அகல்யா!—ஓ, அகல்யா!"

நினைவு கலைந்து அகல்யா நிமிர்ந்து பார்த்தாள். அவ்வளவுதான்; "யோகமணாளா! என் யோகமணாளா!" என்றாள் அவள் வியப்புடன்.

"ஆமாம், உன்னுடைய சியாமளாதான்!" என்றாள் காரில் உட்கார்ந்து கொண்டிருந்த அந்தப் பெண்மணி.

"இல்லை; என்னுடைய சியாமளா!" என்றான் அவளுக்கு அருகில் உட்கார்ந்து கொண்டிருந்த அவள் கணவன் மணிவண்ணன்.

அவளைக் கடைக்கண்ணால் நோக்கிக் கொண்டே, "உன்னைத்தான் நானும் தேடிக் கொண்டு வருகிறேன்!" என்றாள் அகல்யா.

"யாரை!—என்னையா!" என்று மணிவண்ணன் தன்னைத்தானே சுட்டிக்காட்டி, தனக்கே இயற்கையான குறும்புடன் கேட்டான்.

சியாமளா சிரித்தாள்; அகல்யாவும் அவளுடன் சேர்ந்து சிரித்து, தன்னுடைய மனச் சுமையை ஓரளவு குறைத்துக் கொண்டாள்.

"அவர் இன்னும் தன்னைச் சின்னக் குழந்தையாகவே நினைத்துக் கொண்டிருக்கிறார், அகல்யா!—நீ வா; வண்டியில் ஏறிக் கொள்; வீட்டுக்குப் போவோம்" என்றாள் சியாமளா.

அகல்யா தயங்கினாள்; மணிவண்ணன் 'சட்' டென்று காரை விட்டுக் கீழே இறங்கி, மோட்டாரோட்டிக்குப் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டான்.

அகல்யா ஏறிக் கொண்டாள்; கார் ஆடி அசைந்து நடந்து செல்லும் பாதசாரிகளைக் கண்டு எள்ளி நகையாடிக் கொண்டே 'விர்' என்று கிளம்பிற்று!

* * *

அன்று மாலை கனகலிங்கம் சோர்வுடன் தன் அறைக்குத் திரும்பினான். நாள் பூராவும் அலைந்ததுதான் மிச்சம்; அவனுக்கு ஒரு வேலையும் கிடைக்கவில்லை. 'கையிலுள்ள காசு செலவழிவதற்குள் ஏதாவது ஒரு வேலை கிடைத்து விட்டால் போதும்' என்று எண்ணியவனாய், அவன் விவேகானந்தர் எழுதிய புத்தகம் ஒன்றை எடுத்து வைத்துக் கொண்டு படிப்பதற்காக உட்கார்ந்தான்.

பக்கத்தைப் புரட்டுவதற்குள் இருள் கவிந்து கொண்டு வந்தது. எழுந்து சென்று விளக்கைப் போட்டுவிட்டுத் திரும்பினான். அந்தச் சமயத்தில் முகத்தில் அசடு வழிய ராதாமணி அங்கு வந்து சேர்ந்தான்.

"என்னடா, ஏன் ஒரு மாதிரியாயிருக்கிறாய்!" என்று அவனை விசாரித்தான் கனகலிங்கம்.

"ஒன்றுமில்லை; சொல்வதற்கு என்னவோ போலிருக்கிறது......" என்று மென்று விழுங்கினான் ராதாமணி.

"ஒன்றுமில்லையாவது, சொல்வதற்கு என்னவோ போலிருக்கிறதாவது!— என்ன விஷயம்! சும்மா சொல்லு!" என்றான் கனகலிங்கம்.

"அம்மாவுக்கும் நீ கெட்டவனாகி விட்டாய்......!" என்று மேலே ஏதோ சொல்ல ஆரம்பித்த ராதாமணி, சொல்ல முடியாமல் நிறுத்தினான்.

"என்ன!"

"ஆமாம்; நான் எவ்வளவோ ஜாக்கிரதையாயிருந்தும் சீதா நீ யாரோ ஒரு 'அக்கா'வை அழைத்துக் கொண்டு வந்திருப்பதாக அம்மாவிடம் சொல்லி விட்டாள். 'அவ்வளவு தூரத்துக்கு முற்றி விட்டானா, அவன்!—இனிமேல் அவனுக்கு இங்கே சாப்பாடும் கிடையாது; நீயும் அவனுடன் சேரவேண்டாம்' என்று சொல்லி, இந்த மாதம் நீ சாப்பாட்டுக்காகக் கொடுத்த இருபது ரூபாயையும் அம்மா என்னிடம் திருப்பிக் கொடுத்தனுப்பி விட்டார்கள்—எனக்கு என்ன சொல்வது, என்ன செய்வது என்று ஒன்றும் தோன்றவில்லை......"

"அதுதான் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லி விட்டாயே, இனிமேல் தோன்றுவதற்கு என்ன இருக்கிறது!" என்றான் கனகலிங்கம், அதற்குள் ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டு.

"என்மீது குற்றம் ஒன்றுமில்லை; சீதா தான்......"

"அது சரி; உன்னைப்போல் அவளுக்குப் புளுகத் தெரியுமா, என்ன!—இனிமேல்தான் பெரியவர்களிடமிருந்து அந்தக் 'கலை'யை அவள் கற்றுக்கொள்ள வேண்டும்!" என்றான் கனகலிங்கம்.

சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தார்கள். எதிர்பாராத விதமாகச் சீதா அழுது கொண்டே அங்கு வந்து அவர்களுடைய மௌனத்தைக் கலைத்தாள்.

"இங்கே வா அம்மா, வா!— ஏன் அழுகிறாய்! நீ நல்ல பெண்ணாச்சே, அழவே மாட்டாயே!" என்று அன்புடன் அவளுடைய தலையைக் கோதிவிட்டுக் கொண்டே, அவளைத் தூக்கித் தன் மடியின் மேல் உட்கார வைத்துக் கொண்டான் கனகலிங்கம்.

"அண்ணா இல்லே,......அண்ணா இல்லே,.... அண்ணா இல்லே — அது என்னை அடிச்சுது!" என்றாள் அவள் விக்கலுக்கும் விம்மலுக்கும் இடையே.

"எனக்குத் தெரியுமே, யாராவது உனக்கு விரோதமாக உண்மையைச் சொன்னால் நீ அவர்களை அடித்து விடுவாய் என்று!—போடா, மண்டு!—குழந்தையை ஏன் அடித்தாய்!— நீ அழாதே அம்மா, அழாதே!" என்று ராதாமணியைப் பார்த்துச் சொல்லிக்கொண்டே, கனகலிங்கம் சீதாவைத் தேற்றினான். அவளும் சமாதானமடைந்து அழுகையை நிறுத்தினாள்.

ராதாமணி இருபது ரூபாயை எடுத்துக் கனகலிங்கத்தினிடம் கொடுத்துவிட்டு, "காலையில் எங்கோ வேலை தேடப் போகிறேன் என்றாயே, ஏதாவது கிடைத்ததா!" என்று கேட்டான்.

"அவ்வளவு சுலபத்தில் வேலை கிடைப்பதாயிருந்தால் தங்களைத் 'தர்மகர்த்தா'க்களாக நினைத்துக் கொண்டிருக்கும் முதலாளிகள் தொழிலாளிகளை ஏன் 'மிரட்டு, மிரட்டு' என்று மிரட்டப் போகிறார்கள்!" என்றான் கனகலிங்கம்.

"சரி, நாளைக் காலையில் நீ என்னுடன் வருகிறாயா!—இங்கிலீஷ் மருந்துக்கடை யொன்

தில் ஏதோ வேலை இருக்கிறதாம்; நான் உன்னை அழைத்துக் கொண்டு போய் அங்கே விடுகிறேன்....."

"ரொம்ப சந்தோஷம்! — அதற்கென்ன, அப்படியே வருகிறேன்."

"அதற்குள் சந்தோஷப் பட்டு விடாதே; வேலை கிடைத்த பிறகு வேண்டுமானால் சந்தோஷப் படலாம்" என்று சொல்லி விட்டு, ராதாமணி கோதாவை அழைத்துக் கொண்டு வீட்டுக்குக் கிளம்பினான்.



"அப்படியானால் இன்றிரவு நீ இங்கே படுத்துக் கொள்ளக்கூட வர மாட்டாயல்லவா!" என்று கனகலிங்கம் கேட்டான்.

ராதாமணி, "எப்படி வர முடியும்?—அம்மா கோபித்துக் கொள்வார்களே!" என்றான்.

"ஆமாம்; வந்தால் நீயும் என்னைப் போல் கெட்டுப் போனாலும் கெட்டுப் போய் விடுவாய்!" என்றான் கனகலிங்கம்.

ராதாமணி அசடு வழியச் சிரித்துக்கொண்டே அங்கிருந்து சென்றான்.

அவன் சென்ற பிறகு, 'நல்ல உலகம் இது!— இந்த உலகத்தில் எல்லோருமே விசுவாமித்திரர்களாக இருப்பார்கள் என்று ஏன் ஜனங்கள் நினைக்க வேண்டும்! — விவேகானந்தரைப் போலவும் ஒரு சிலராவது இருப்பார்கள் என்று அவர்கள் நினைக்கக் கூடாதா!' என்று கனகலிங்கம் தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான்.

இதே சிந்தனையில் அன்றிரவு சாப்பிடுவதற்காக அவன் ஹோட்டலுக்குக்கூடப் போகவில்லை. உட்கார்ந்தவன், அப்படியே உட்கார்ந்து கொண்டிருந்து விட்டான்!

சிறிது நேரத்துக்குப் பிறகு அவனுடைய சிந்தனை வேறு திசையை நோக்கித் திரும்பிற்று. அவன் அகல்யாவை நினைவு கூர்ந்தான். 'அவள் வந்தால் என்ன செய்வது! அவளிடமிருந்து இன்னும் கொஞ்ச நாட்களுக்குத் தன்னை எப்படிக் காப்பாற்றிக் கொள்வது!— ராதாமணி கூட நம்மைக் கைவிட்டு விட்டானே!' என்று எண்ணி, அவன் மேலும் கீழும் பார்த்தான்.

மணி ஏழு, எட்டு, ஒன்பது, பத்து என்று பதினொன்றும் அடித்து ஓய்ந்தது—அகல்யா வரவில்லை; ஆம், அவள் வரவே யில்லை!

'காலையில் திரும்பி வருவதாகத்தானே சொல்லிவிட்டுப் போனான்!—அதற்குள் என்ன ஆகியிருப்பாள்!' என்று ஒரு கணம் யோசித்துப் பார்த்தான் அவன். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. மறு கணம், 'சரி, எல்லாம் நன்மைக்கே!' என்று எண்ணித் துணிந்தவனாய் அவன் எழுந்து சென்று, கூஜாவிலிருந்து ஒரு டம்ளர் குளிர்ந்த ஜலத்தை எடுத்துக் குடித்தான்.

திரும்பும் போது, அவள் குளிப்பதற்கு முன்னால் கொடியில் அவிழ்த்துப் போட்டு விட்டுப் போயிருந்த புடவை யொன்று காற்றில் லேசாக அசைவாடிக் கொண்டிருப்பது அவன் கண்ணில் பட்டது. 'கல்யாணமாகாத ஒரு கட்டைப் பிரம்மசாரியின் வீட்டில் இந்தப்புடவை இருப்பதைப் பார்த்தால் ராதாமணியின் அம்மா என்ன, நம்முடைய அம்மா இருந்திருந்தால் கூட நம்மை 'யோக்கியன்' என்று ஒப்புக் கொண்டிருக்க மாட்டாளல்லவா!' என்று எண்ணி, அவன் தன்னைத் தானே சமாதானம் செய்து கொண்டான்.

அதற்குள் தூக்கம் கண்ணைச் சுழற்றுவது போல் இருந்தது; கதவைத் தாளிட்டுவிட்டு, விளக்கை அணைத்துவிட்டு, பாயை விரித்துவிட்டு, "பாவம்! 'வெளுத்த தெல்லாம் பால்' என்று நினைக்கும் அவனைச் 'சூத்திரதாரியான கடவுள்' இன்னும் எப்படி எப்படியெல்லாம் ஆட்டிப் படைக்கப் போகிறாரோ!" என்று அவன் வாய்விட்டுச் சொல்லிக் கொண்டே படுத்தான்.

ஆனால் அன்றைய தினமும் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. 'இயற்கையின் விந்தையே விந்தை! ஒரு பெண்ணுக்கு என்னதான் நல்ல மனதோடு இன்னொரு ஆண் மகன் உதவி செய்தாலும், அதை விபரீதமாக உலகம் எடுத்துக் கொண்டு விடுவதற்குப் பாழும் இயற்கை சுலபமாக இடம் கொடுத்து விடுகிறது!—இந்த லட்சணத்தில் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ வேண்டுமென்று பாரதியார் கனவு கண்டிருக்கிறார்! அவருடைய கனவு என்றுதான் நனவாகப் போகிறதோ!' என்று எண்ணிக் கொண்டே, அவன் வானத்தைப் பார்த்தான்.

வானம் நிர்மலமா யிருந்தது. 'இந்த வானத்தைப் போல மனிதர்களின் மனமும் நிர்மலமா யிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்!' என்று அவன் மறுபடியும் எண்ணி, ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

இந்தச் சமயத்தில் 'கலகல' வென்ற சிரிப்பொலி எங்கிருந்தோ வந்து அவன் காதில் விழுந்தது. சுற்று முற்றும் பார்த்தான்; யாரையும் காணவில்லை. 'வெறும் பிரமை!' என்று சிரித்துக் கொண்டே அவன் குப்புறப் படுத்தான். அகல்யாவின் கவர்ச்சி மிகுந்த உருவெளித் தோற்றம் அவனுடைய நினைவில் அடிக்கடி தோன்றி மறைந்தது! (தொடரும்)




## 9. கள்ளச் சாவி!

மீனாவைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற துடிப்பு சங்கரனுக்கு ஏற்பட்டிருந்தது. இந்தத் துடிப்பை உண்டாக்கி விட்டவன் அப்பு. மீனாவைச் சங்கரனுக்கு விவாகம் செய்து கொடுத்து, அவன் சகோதரி பிரேமாவை எப்படியாவது தான் கல்யாணம் செய்து கொண்டு விட வேண்டும் என்பதுதான் அப்புவின் திட்டம். சங்கரன், மீனாவைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்ற ஆசையை மனதோடு வைத்துத் துடித்துக் கொண்டிருந்தானே தவிர அதை அப்புவிடம் சொல்லத் தயங்கினான். ஆனால் அப்பு சங்கரனின் மன நிலையைச் சரியாக உணர்ந்திருந்தான். மீனாவுக்குச் சங்கிலி, வளையல்கள் போட்டுக் கொள்வதிலுள்ள அற்ப ஆசைகளைச் சங்கரனிடம் மெதுவாக எடுத்துச் சொன்னவுடன் சங்கரன் அவளுக்காகப் பத்து சவரனில் சங்கிலியும் வளையலும் வாங்கிக் கொடுத்தது அவன் மனதிலுள்ள ஆசையை இன்னும் தெளிவாக்கி விட்டது. சங்கரன் பத்து சவரனில் இந்த நகைகள் வாங்கியதற்குப் பணம் எங்கிருந்து கிடைத்தது, எப்படிச் சம்பாதித்தான் என்கிற ரகசியம் அப்புவுக்குத் தெரியாது. ஆனால் சங்கரன் பணக்கார வீட்டுப் பையன்; பணத்தைப் பற்றி அவனுக்கு என்ன கவலை என்பதுதான் அப்புவின் அபிப்பிராயம்.

சங்கரனுக்கு அப்போதைக்கப்போது பத்து இருபது கேட்டவுடனேயே கொடுத்து விடுவது அவனுடைய தகப்பனாரின் வழக்கம். இதைத் தவிர, தன் தாயாரின் பெட்டியிலிருந்தும் அவன் சில்லறையாக அடிக்கடி ஏதாவது எடுத்துக் கொள்வது வழக்கம். சில சமயங்களில் சங்கரன் வீண் செலவு செய்வது பற்றி வீட்டில் சிறுசிறு ரகளைகளும் நடப்பது உண்டு. இந்த நிலைமையில் சங்கரன் மீனாவுக்கு நகைகள் வாங்கிக் கொடுப்பதற்கு எண்ணூறு ரூபாய் வரையில் எப்படிச் சம்பாதித்தான் என்பது தான் ஆச்சரியம்! இத்தனை நாளும் இல்லாமல் இப்பொழுது சங்கரன் துணிவாகவும் புரட்சிகரமாகவும் ஒரு புது வழியில் இறங்கத் தீர்மானித்தான். அதாவது அவனுடைய தகப்பனாரின் பணப் பெட்டியை முற்றுகை போடத் தொடங்கினான். அது மிகவும் பழைய காலத்து இரும்புப் பெட்டி. அந்தப் பெட்டியின் சாவியைச் சங்கரனின் தகப்பனாரைத் தவிர வேறொருவரும் அதிகமாகக் கூடப் பார்த்திருக்க மாட்டார்கள். அவர் அதைத் தப்பித் தவறிக் கீழே வைத்துக்கூட ஒருவரும் பார்த்ததில்லை.

சங்கரன் அந்தப் பெட்டிக்கு மறு சாவி ஒன்று சம்பாதிப்பதில் தீவிரமாக முயன்றான்.

கடைத்தெருவில் பழைய பூட்டுக்கள் பழுது பார்க்கும் காதர்மொய்தீன் என்பவனிடமிருந்து ஒரு பழைய சாவியை விலைக்கு வாங்கி வந்தான். சங்கரனின் அதிர்ஷ்டத்தினால் அவன் தயார் செய்த சாவி சரியாக அமைந்து விட்டது

என்று சொல்ல முடியாது. அந்தப் பெட்டி இரும்புப் பெட்டி என்ற மதிப்போடு இருந்ததே தவிர அதன் பூட்டு எவ்வளவு பழுதான நிலைமையில் இருக்கிறதென்ற ரகசியம் அந்த இரும்புப் பெட்டிக்கு மாத்திரம்தான் தெரியும். அடிக்கடி அதைத் திறந்து பூட்டும் சபேசய்யருக்குக் கூடத் தெரியாது. சாதாரண குடைக் கம்பியை விட்டு அசைத்தால் கூடத் திறந்து விடும் நிலைமையில்தான் இருந்தது அந்த இரும்புப் பெட்டியின் பூட்டு. இப்படி இருக்கும் போது சங்கரன் தயாரித்த சாவி வெற்றிகரமாக வேலை செய்ததில் ஆச்சரியம் என்ன! ஆனால் சங்கரனால் ஆச்சரியப்படாமல் இருக்க முடியவில்லை. பெட்டியைத் திறந்து ஆயிரம் ரூபாய் வரையில் எடுத்துக் கொண்டான். லட்சக் கணக்காகக் குவிந்து கிடக்கும் அந்தப் பெட்டியிலிருந்து சங்கரன் ஒரு ஆயிரம் ரூபாய் எடுத்துக் கொண்டது பிரமாதமாகி விடாது. பாவம்! அவனுடைய தகப்பனருக்குப் பாங்கியில் பணம் போடுவதில் துளிக்கூட நம்பிக்கை இல்லை. ஏனென்றால் அடிக்கடி பாங்கிகளெல்லாம் திவாலாகிக் கொண்டு வருவது அவருக்குத் தெரிந்த விஷயம். தம்பிடியானாலும் அந்தப் பழைய இரும்புப் பெட்டியில் கொண்டு வந்து வைப்பதில்தான் அவருக்குத் திருப்தி. பெட்டியில் எவ்வளவு வைத்தோம் என்று அவர் கவலைப்படுவதோ கணக்குப் பார்ப்பதோ கிடையாது. அந்தப் பெட்டியில் வைப்பதைத் தவிர எடுப்பது என்பது மாத்திரம் நடந்ததே இல்லை.

ஆறு மாதத்திற்கு ஒரு தடவையோ, வருஷத்திற்கு ஒரு தடவையோ பழைய கிணற்றைத் தூறு எடுப்பது போல் பெட்டியில் இருக்கும் பணத்தை யெல்லாம் எடுத்துப் பெட்டியைச் சுத்தம் செய்து சாம்பிராணி போட்டு மறுபடியும் அடுக்கி வைப்பார். அப்பொழுதுதான் எவ்வளவு பணம் இருக்கிறது என்று பார்த்துக் கணக்குப் போட்டு வைத்துக் கொள்வார். அதற்கப்புறம் அடுத்த தடவையாக அந்தப் பெட்டியைச் சுத்தம் செய்து சாம்பிராணி போடும் போதுதான் அவைகளில் இன்னும் எவ்வளவு ஆயிரம் ரூபாய் அதிகமாயிற்று என்பது தெரியும். தடவைக்குத் தடவை பணம் அதிகமாகி இருக்குமே தவிரக் குறையாது. ஆனால் இப்பொழுது தான் அந்தப் பெட்டிக்கு இரண்டாவது சாவி ஏற்பட்டு விட்டதே! இனிமேல் எப்படி இருக்கு மென்பதை யார் கண்டார்கள்!

இரும்புப் பெட்டியின் சகோதரச் சாவி ஒன்று சங்கரனிடம் சிக்கி இருக்கிறது என்ற ரகசியம் அப்புவுக்குத் தெரிந்தால் அவன் சங்கரனுக்கு எப்படிப்பட்ட யோசனைகளெல்லாம் சொல்லுவானோ! ஆனால் சங்கரன் அப்புவிடம் கூட அந்த ரகசியத்தைச் சொல்லவில்லை.

அன்று மாலை சங்கரன் அப்புவைச் சந்தித்தபொழுது மீனாவைக் கல்யாணம் செய்து கொள்ளத் தான் எவ்வளவு ஆசையோடு இருக்கிறான் என்பதை அவனிடம் சொல்லிவிட நினைத்தான். "மிஸ்டர் அப்பு! உன் தங்கை மீனா நான் வாங்கிக் கொடுத்த சங்கிலியையும் வளையல்களையும் பார்த்தவுடன் என்ன சொன்னாள்!" என்றான் ஆவலுடன்.

"அவளா! அந்த நகைகளைப் பார்த்தவுடன் அவள் முகம் அப்படியே மலர்ந்து விட்டது. ஸ்தம்பித்து நின்றுவிட்டாள். 'அண்ணா, சங்கரைப் போன்ற உத்தமமான மனிதரை இது வரையில் நான் பார்த்ததே இல்லை. எப்படிப்பட்ட சமதர்ம நோக்கம்! தியாகபுத்தி! அவரால்தான் இந்த உலகத்திற்கே ஒரு விமோசனம் ஏற்படப் போகிறது' என்று சொல்லிப் பூரித்துப் போனாள்!" என்றான் அப்பு.

இதைக் கேட்டதும் சங்கரன் இருதயம் குளுகுளு வென்றிருந்தது. "அப்படியா சொன்னாள்!" என்று எகிறிக் குதித்துவிட்டு, "உன் தங்கை மிகவும் புத்திசாலி. இந்த உலகத்திற்கே என்னால்தான் ஒரு விமோசனம் ஏற்படப் போகிறது என்று சொன்னாள், பாரு! அதில் எவ்வளவோ அர்த்த மிருக்கிறது, அப்பு! இதிலிருந்து தெரிந்து கொள், சாதாரணமான பெண்களுக் கெல்லாம் என்னைப் பற்றிச் சரியாகத் தெரிந்து கொள்ள முடியாது என்று. உன் தங்கை மீனாவைப் போன்ற அபாரமான மூளை உள்ள பெண்களால்தான் என்னைப் பற்றிச் சரியாகத் தெரிந்துகொள்ள முடியும்" என்று பெருமையோடு சொன்னான் சங்கர்.

"அது உண்மையிலும் உண்மை. இவ்வளவு தூரம் பழகுகிறேனே, உன் தங்கை பிரேமா என்னைப் பற்றிச் சரியாகவே தெரிந்து கொள்ளவில்லையே, சங்கர்!" என்றான் அப்பு.

"பிரேமாவா! அவளால் உன்னைச் சரியாகத் தெரிந்து கொள்ள முடியாது. அவளுக்குப்



புத்தி கிடையாது. அது கிடக்கட்டும், மீனுவின் கல்யாண விஷயமாக ஏதாவது ஏற்பாடு செய்தாயா!'' என்றான் ஆர்வத்துடன் சங்கர்.

''கூடிய சீக்கிரம் ஏற்பாடு செய்து விட வேண்டுமென்றுதான் நினைக்கிறேன். தகுந்த பேர்வழி சிக்க வேண்டாமா!''

''பேர்வழியைச் சிக்கவைப்பதற்கு எங்காவது வலை எடுத்துக் கொண்டு போக வேண்டுமா! வேண்டாம். நான் ஒரு அருமையான யோசனை சொல்லுகிறேன்....'' என்று சொல்லி இழுத்து நிறுத்தினான் சங்கரன்.

''உன் யோசனை என்ன!''

''நான் சொல்கிறது என்னவென்றால்..... உதாரணமாக மீனுவுக்கு என் மீது ஒரு அன்பும் மதிப்பும் ஏற்பட்டிருக்கிறது. இல்லையா! இதிலிருந்து இயற்கையாக அவளுக்கு என்மீது காதல் ஏற்பட வசதி உண்டு என்பதை நீ நம்புகிறாயல்லவா!'' என்றான் சங்கரன் மெதுவாக.

''தாராளமாக நம்புகிறேன். இப்பொழுது கூட எனக்குச் சந்தேகம், அவளுக்கு உன் மீது காதல் ஏற்பட்டு விட்டதோ என்று!''

''இதில் சந்தேகமென்ன! அப்படித்தானிருக்க வேண்டும். அப்படித்தான் இருந்தாகணும். அதற்குத்தான் நான் உனக்கு ஒரு யோசனை சொல்லுகிறேன். என் மீனுவை எனக்குக் கல்யாணம் செய்து வைத்து விடக் கூடாது....!''

அப்பு ஒரு தடவை துள்ளிக் குதித்தான். ''அருமையான யோசனை! தாராளமாக உனக்கே கல்யாணம் செய்து கொடுத்து விடலாம். அந்த பாக்கியம் என் தங்கைக்குக் கிடைக்க வேண்டாமா! ஆனால் உன்னுடைய பெற்றோர்களின் சம்மதமும் வேண்டாமா! என்ன இருந்தாலும் நீங்கள் கொஞ்சம் பணம் படைத்தவர்கள்....''

''மிஸ்டர் அப்பு! பணம், காசு, அந்தஸ்து, அதிகாரம் இவைகளெல்லாம் உண்மையான காதலை ஒன்றும் செய்துவிட முடியாது. அதுவும் தவிரப் பணக்காரன், ஏழை என்ற பாகுபாடுகளெல்லாம் என்னைப் போன்ற சமதர்மவாதியின் அகராதியில் இல்லவே இல்லை. என் அபிப்பிராயத்திற்கு விரோதமாக ஒருவரும் ஒன்றும் செய்துவிட முடியாது.''

''அது எனக்குத் தெரியாதா! ஆனால் மீனு உள்ளபடி உன்னைக் காதலிக்கிறாளா என்று தெரிந்து கொள்ள வேண்டும். அதற்கு அவசரப்படக் கூடாது. சிறிது காலம் பொறுத்திருந்து கவனித்துப் பார்க்க வேண்டும். அப்படி அவள் உன்னைக் காதலிக்கா விட்டால் அவள் உன்னைக் காதலிக்கும்படி செய்தாக வேண்டும். உன்னைப் போன்ற சீர்திருத்தவாதி காதல் இல்லாமல் கல்யாணம் செய்து கொண்டால் உலகம் நகைக்கும். அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு....''

''என்ன வழி!'' என்று கேட்டு ஆவலோடு அப்புவின் முகத்தைப் பார்த்தான் சங்கர்.

''நீ இப்பொழுது வாங்கிக் கொடுத்தது போல் அடிக்கடி நகைகள், புடவைகள் ஏதாவது வாங்கி என் மூலமாக அவளுக்குக் கொடுக்க வேண்டும். நான் அவைகளை வாங்கிக்கொண்டு போய் அவளிடம் கொடுத்து உன்னைப் பற்றிப் பிரமாதமாக ஏதாவது புகழ்ந்து கொண்டே இருக்க வேண்டும். தவிர இன்னொரு முக்கியமான விஷயம். ஒரு ஐயாயிர ரூபாய் பணம் இருந்தால் கொடு: அதை என் பேரில் பாங்கில் போட்டு வைக்கிறேன். கல்யாண சந்தர்ப்பத்தில் அதைச் சட்டென்று எடுத்துச் செலவு செய்யச் சௌகரியமாயிருக்கும்...''

''ஐயாயிர ரூபாய்தானே! இது என்ன பிரமாதம்! நாளைக்கே தருகிறேன். அதை உன் பேரிலேயே பாங்கில் போட்டு வை. தவிர, மீனுவுக்காக இன்னும் சில பட்டுப் புடவைகள், நகைகள் எல்லாம் வாங்கித் தருகிறேன்.'' என்றான் சங்கர் துடிப்புடன்.

சங்கரனிடம் இவ்வளவு சுலபமாகத் தன் கோரிக்கைகள் நிறைவேறும் என்று அப்பு நினைக்கவே இல்லை. இதிலிருந்து மேலும் எப்படி எப்படியெல்லாம் பணம் பறிக்கலாம் என்ற பேராசையும் அப்புவுக்கு எழுந்தது. மெதுவாக அவன் தங்கை பிரேமாவிடம் தனக்குள்ள ஆசையையும் சொல்லி விட நினைத்தான் அப்பு. ''சங்கர், எனக்கு இன்னொரு யோசனை தோன்றுகிறது. நம்முடைய சமதர்மக் கொள்கைப்படியும் நம்முடைய நாலு வருஷத் திட்டத்தைச் சுலபமாக நிறைவேற்றவும் நமக்குள் ஒரு பிரிக்க முடியாத நெருங்கிய தொடர்பு ஏற்பட்டால்தான் சௌகரியம். என் சகோதரியை நீ கல்யாணம் செய்து கொள்வதினால் இந்த உறவு பலப்படுகிறது. அதோடு மட்டும் போதாது; உன் தங்கை பிரேமாவை நான் கல்யாணம் செய்துகொண்டு விட்டால் இந்த உறவு இன்னும் கெட்டியாகி விடும்!'' என்றான் அப்பு.

''பிரேமாவையா! எனக்குச் சம்மதம்தான். ஆனால் அவள் கொஞ்சம் பயித்தியம். அவர்கள் லேடீஸ் கிளப்பில் சிலர் கல்யாணமே செய்து கொள்ளப் போவதில்லை என்று தீர்மானித்திருக்கிறார்களாம். அவளும் அப்படியே கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று குதித்துக் கொண்டிருக்கிறாள். அவள் புத்தியை எப்படி நாம் மாற்ற முடியும்!''

''அது ஒன்றும் பிரமாதமில்லை. அவள் மனதை மாற்றும் பொறுப்பு என்னைச் சேர்ந்தது. இந்த அப்புவை என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்! எப்படியாவது அவளுக்கு என் மீது காதல் உண்டாகும்படி செய்து விட்டால்....!''

''சரியான யோசனை! காதல் ஏற்பட்டு விட்டால் பிரளயம் வந்தாலும் அந்தக் காதலை ஒன்றும் செய்துவிட முடியாது. உடனே கல்யாணம்; இல்லாவிட்டால் தற்கொலை....''

''சங்கர், பிரேமா தற்கொலை செய்து கொள்ளும்படியாக நான் விட்டுவிட மாட்டேன். ஆனால் கல்யாணத்திற்கு உன் பெற்றோர்கள் சம்மதிக்க வேண்டாமா!'' என்றான் அப்பு.

''அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். பிரேமாவின் மனது மாறி அவள் கல்யாணம் செய்து கொள்ளுகிறேன் என்று சொன்னால் போதும்; கழுதையாய் இருந்தாலும் கல்யாணம் செய்து கொடுக்கத் தயாராய் இருக்கிறார்கள் என் பெற்றோர்கள்!''

"கழுதைக்கு ஏன் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டும்! அப்படியெல்லாம் நேர்ந்து விடாது. நான் இருக்கிறேன். பார்த்துக் கொள்கிறேன். அதோடு இன்னொரு முக்கியமான விஷயம் வரதட்சணை....!"

"வரதட்சணையா! அது வாங்குவதில்லை என்றுதான் நம் கொள்கையாயிற்றே!"

"அது நம்முடைய கொள்கைதான். ஆனால் இந்தக் கொள்கைகளையும் சில இடங்களில் விதி விலக்களித்துத் தளர்த்த வேண்டியிருக்கிறது. பணம் இருக்கிறது பார், அது எப்பொழுதும் இடம் விட்டு இடம் மாறிக் கொண்டே இருக்க வேண்டும்; எப்பொழுதும் ஒரே இடத்தில் குவிந்து கிடக்கக்கூடாது. இதனால்தான் உலகத்தில் பொருளாதார நெருக்கடி, வியாபார மந்தம், தொழில் முடக்கம் எல்லாம் ஏற்படுகிறது. இதற்கு வரதட்சணை வாங்குவதும் ஒரு மார்க்கம். உதாரணமாக என் கையில் பதினாயிர ரூபாய் இருந்தால் நான் என்ன செய்வேன் சொல்லு!"

"என்ன செய்வாய்! அதைச் சரியான வழியில் செலவு செய்வாய். பணத்தை வைத்துக் கொண்டு உலகில் சமதர்மக் கொள்கை பரவுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வாய்....!"

"அப்படித்தான்! பணம் கிடைத்தவுடன் மலபாரில் ஒரு காட்டை விலைக்கு வாங்கி அதை அழித்துப் பேப்பர் மில் ஆரம்பித்து விடுவேன். நம்முடைய நாலு வருஷ திட்டத்தில் முதல் அம்சம் அதுதானே! அதுவும் தவிர, பிரேமாவை வேறொருவன் கல்யாணம் செய்து கொண்டாலும் உன் தகப்பனார் வரதட்சணை கொடுக்காமல் இருக்கப் போவதில்லை. அந்த வரதட்சணையை அவர் எனக்குத்தான் கொடுக்கட்டுமே!"

"வேறொருவன் அவளைக் கல்யாணம் செய்து கொண்டால் கட்டாயம் வரதட்சணை கொடுக்காத வண்ணம் தடுப்பேன். ஆனால் நீ பிரேமாவைக் கல்யாணம் செய்து கொண்டால் கட்டாயம் வரதட்சணை கொடுத்துத்தானாக வேண்டும் என்று வற்புறுத்துவேன்" என்றான் கண்டிப்பான குரலில் சங்கர்.

"வேறொருவன் பிரேமாவைக் கல்யாணம் செய்து கொள்ளும் வரையில் நாம் விட்டு விடக்கூடாது, சங்கர்! நீ மாத்திரம் எனக்குக் கொஞ்சம் உதவியாய் இருந்தால் ..."

"தாராளமாக உதவி செய்கிறேன். உன்னைப் பற்றி என் தாயாரிடமும் தகப்பனாரிடமும் பிரமாதமாகச் சொல்லுகிறேன். ஆனால் பிரேமாவிடம் மாத்திரம் நான் பேசவே மாட்டேன். அவள் கொள்கையே எனக்குப் பிடிக்காது!" என்றான் சங்கர்.

"அதைப் பற்றி நீ கவலைப்படாதே! நான் பார்த்துக் கொள்கிறேன். நான் யார் தெரியுமா! மிஸ்டர் அப்பு! மூன்று தடவை உலகப் பிரயாணம் செய்தவன். இந்த உலகத்தையே சுபிக்ஷமாக்க இருபத்தொன்பது அம்சங்களோடு கூடிய நான்கு வருஷ திட்டத்தைக் கையில் வைத்திருப்பவன்!" என்றான் அப்பு பெருமையோடும் மமதையோடும். (தொடரும்)

## புலி வந்தது!



# அருமை ஜிம்மி

ஸோமாஸ்

அன்று காலை வழக்கத்தைவிட எனக்குக் கொஞ்சம் உற்சாக மாகவேயிருந்தது. விடியற்காலை ஐந்தரை மணிக்கு லக்ஷ்மி ஒரு நாளும் இல்லாத திருநாளாக எனக்கு முன்னால் எழுந்து, பால்காரியின் குரலுக்குப் பதில் குரலும் கொடுத்து, பாலையும் தானே வாங்கிக் கொண்டு வந்துவிட்டாள் என்றால் எனக்கு ஆச்சரியமாயிருக்காதா?

அந்த ஆச்சரியத்தை வெளியே காட்டிக் கொள்ளாமல் பல் தேய்த்து விட்டு நான் அறைக்கு வந்தேன். காப்பி எனக்கு முன்னால் தயாராகக் காத்துக் கிடந்து, என்னைத் தடுத்தாட்கொண்டது.

காப்பியை ஆற்றிச் சாப்பிட ஆரம்பித்த எனக்கு மனம் ஒரு நிலையில் இல்லை. என் கையிலிருந்த காப்பியிலிருந்து மேல் நோக்கிக் கிளம்பிய ஆவி எப்படிக் கொஞ்ச தூரம் போனதும் மாயமாகிக் கொண்டிருந்ததோ, அதே மாதிரி என் மனசில் எழுந்த எண்ணங்களும் ஒன்றன் பின் ஒன்றாக எழுந்து மாயமாகிக் கொண்டிருந்தன.

இந்தச் சமயத்தில் லக்ஷ்மி கையில் 'தோசறு'க் காப்பியுடன் அன்ன நடை நடந்து வந்தாள். என் மனசில் லேசாகத் திகில் பற்றிக் கொண்டது; மௌனமாக நான் அந்தக் காப்பியையும் வாங்கிச் சாப்பிட்டேன்.

என் பயத்துக்குக் காரணம் இந்த மாதிரி திடீர் உபசாரங்களுக்குப் பின்னால் ஏதாவது ஒரு பெரிய திட்டம் இருக்கத்தான் செய்யும் என்பதுதான்! ஏனெனில், வழக்கத்துக்கு விரோதமாகக் கணவனுக்கு உபசாரம் செய்து மனைவிமார்கள் தங்களுக்கு வேண்டிய மாங்காய் மாலையையோ, கோதுமைச் சங்கிலியையோ, காசுமாலையையோ கணவன்மார்களிடமிருந்து அடைந்திருக்கிறார்கள் என்று நாம் எத்தனையோ கதைகளில் படித்துத் தொலைத்திருக்கிறோமல்லவா?

இவ்வாறு எண்ணி நான் பயந்து கொண்டிருந்த சமயத்தில், "காப்பி நன்றாயிருக்கிறதா? புதிதாக வறுத்து அரைத்து உடனே காப்பி தயாரித்தேன். மெஷினில் அரைத்தேனே இல்லையோ, துளிக் கூடச் சிரமம் தெரியவில்லை!" என்றாள் லக்ஷ்மி, பெருமிதத்தோடு.

"காப்பிக் கொட்டை மெஷினா! உனக்கு ஏது?" என்று திடுக்கிட்டுக் கேட்டேன்.

"ஏன் பயப்படுகிறீர்கள்? ராஜம் கொடுத்தாள். அவளும் அவள் அகத்துக்காரரும் குற்றாலம் போகிறார்களாம். ஒரு மாதம் ஆகும் திரும்பி வர. அதுவரையில் காப்பிக்கொட்டை மெஷினை உபயோகப்படுத்திக்கொள்ளச் சொன்னாள்!— அது கிடக்கட்டும்; உங்களிடம் நான் ஒரு சமாசாரம் சொல்ல வேண்டுமே...?" என்றாள் லக்ஷ்மி.

"என்ன சமாசாரம்?" என்று கேட்டேன் நான்.

"ஒன்றுமில்லை; அவள் ஊரிலிருந்து வருகிறவரையில் அவளுடைய வீட்டு நாயைப் பார்த்துக் கொள்ளச் சொன்னாள்!" என்றாள் அவள்.

"ஐயையோ! அந்தக் கிரஹசாரமெல்லாம் இங்கே வேண்டாம். அப்புறம் நான் எங்கேயாவது ஓடிப் போக வேண்டியதுதான்!" என்றேன் நான்.

"நீங்கள் எங்கேயும் ஓடவேண்டாம். ராஜத்தின் வீட்டு நாய் உங்கள் சிநேகிதர்களை விட மரியாதை தெரிந்ததுதான்! நீங்கள் கூப்பிட்டால் கூட அது உங்கள் வீட்டுக்கு வரக் காத்துக் கொண்டிருக்கவில்லை. ராஜம் அதை வாசல் வராந்தாவில் விட்டுவிட்டுப் போயிருக்கிறாளாம். தினம் ஆழாக்குப் பால் வாங்கி அதற்கு வைக்கச் சொன்னாள். அவ்வளவுதான்; பிரமாதம் ஒன்றும் இல்லை."

"ரொம்ப ஒழுங்காயிருக்கிறதே! நீயும் நானும் காப்பி சாப்பிடுவதற்கே நம்மால் பால்காரனுக்குச் சரியாய்ப் பணம் கொடுக்க முடியவில்லை. நாய்க்கு வேறு பாலா?" என்று கேட்டுவிட்டு நான் நாய் மாதிரியே உறுமினேன்.

"போதும், போதும். நிறுத்துங்கள் பேச்சை! உங்கள் சமாசாரம் தெரிந்துதான் ராஜம் பாலுக்காக ஐந்து ரூபாய் முன்னேற்பாடாகக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறாள்!" என்றாள் லக்ஷ்மி.

அப்புறம் அதைப் பற்றிப் பேச எனக்கு வாய் ஏது? எல்லா விக்கினங்களையும் தான் லக்ஷ்மி சமாளித்து விட்டாளே!

மறு நாள் நான் லக்ஷ்மி சமேதனாகப் புறப்பட்டு ராஜத்தின் வீட்டுக்குப் போனேன்; வீடு பூட்டியிருந்தது. வாசல் வராந்தாவில் நாயை வேறு காணவில்லை. லக்ஷ்மி அங்கும் இங்கும் பார்த்துவிட்டுக் கொஞ்சம் யோசனை செய்தாள். அந்த நாயின் பெயர் அவளுக்கு ஞாபகம் வந்திருக்கவேண்டும்—'ஜிம்மி, ஜிம்மி!' என்று கூப்பிட்டாள். பக்கத்து வீட்டு வாசலில் உறுமல் சத்தம் கேட்டது.

உடனே நான் அங்கே போய்ப் பார்த்தேன். அது ஜிம்மி இல்லை; அந்த வீட்டுக்கார ஐயங்கார் கனைத்த சத்தம் என்று தெரிந்தது!

அவர் என்னை ஒரு மாதிரி பார்த்தார். நான் மட்டும் சும்மா இருந்துவிடவில்லை; அவரை ஒரு மாதிரி பார்த்து விட்டு வந்தேன்.

அதற்குள் ஒரு சோனி நாய் லக்ஷ்மியைச் சுற்றிச் சுற்றி வந்தது. லக்ஷ்மி பயத்துடன் என்னைச் சுற்றிச் சுற்றி வந்தாள். நாய் சம்பந்தப்பட்ட வரையில் எனக்கும் பயந்தான்; ஆனால் நான் யாரைச் சுற்றுவது?



"சரி, பாலை என்னிடம் கொடுத்துவிடு; அப்பொழுதுதான் அது உன்னை விடும்!" என்றேன் நான்.

லக்ஷ்மி, பாலை என்னிடம் கொடுத்ததும் சோனி நாய் அவளை விட்டுவிட்டு என்னிடம் வந்து விட்டது.

நான் பால் செம்பை உயரத் தூக்கிப் பிடித்துக் கொண்டே, "லக்ஷ்மி, நேரம் ஆகவில்லையா? ஜிம்மி எங்கே, பார்!" என்றேன்.

"அதைக் காணவில்லையே! இந்தச் சோனி நாய் ஜிம்மியா யிருக்க முடியாது, இல்லையா?" என்றாள் லக்ஷ்மி.

"நாசமாய்ப் போச்சு, போ! நீயும் ஜிம்மியைப் பார்த்ததில்லையா?" என்றேன் நான்.

இருவரும் இவ்வாறு தவித்துக் கொண்டிருக்கையில், கொஞ்சம் பழுப்பும் வெளுப்பும் கலந்த ஒரு நாய் எங்கிருந்தோ ஓடி வந்தது. உடனே நானும் லக்ஷ்மியும் சந்தோஷமடைந்தோம். லக்ஷ்மி நாய்க்குப் பாலை வைத்தாள்.

மறுநாளும் அதிகாலையில் எழுந்து லக்ஷ்மியும் நானும் கையில் பாலுடன் ராஜத்தின் வீட்டுக்குப் போனோம். அந்தச் சோனி நாயைத் தவிர அங்கே இன்னும் எத்தனையோ நாய்கள் இருக்கின்றன என்பது அப்பொழுதுதான் எங்களுக்குத் தெரிய வந்தது

"என்ன இது! நாய்கள் இப்படி ஒரேயடியாகப் பிடுங்கித் தின்கின்றனவே!" என்றாள் லக்ஷ்மி கோபத்துடன்.

"நல்ல வேளை! நாம் துணையோடு வந்தது நல்லதாய்ப் போயிற்று!"

"துணையா! எங்கே? யார் வந்திருக்கிறார்கள்?" என்று லக்ஷ்மி கேட்டாள்.

"ஏன்? உனக்கு நான் துணை, எனக்கு நீ துணை, இல்லையா?"

"ஆமாம், போங்கள்!" உங்கள் ஹாஸ்யமும் நீங்களும்!" என்றாள் அவள்.

அதற்குள் நாலாபுறமும் எங்களை நாய்கள் சூழ்ந்து கொண்டு 'வள் வள்' என்று குரைத்துப் பாலுக்காகத் தாவித் தாவிக் குதித்தன. கடைசியாக ஒரு மாதிரி அவற்றிட மிருந்து தப்பி வீட்டுக்கு வந்து சேர்ந்தோம். லக்ஷ்மி அப்புறம் ஒரு வார்த்தை கூட என்னோடு பேசவில்லை.

அன்று காலையில் எழுந்ததும் எனக்கு இன்னொரு அதிசயம் காத்துக் கிடந்தது. முதல் முதலாக என் வாழ்நாளிலேயே என் அபிப்பிராயம் வெற்றியடைந்தது அன்றைக்குத்தான்! — அந்த அபிப்பிராயம் என்ன தெரியுமோ?—'இனிமேல் நீ நாய்க்குப் பால் வார்க்கப் போகவேண்டாம்' என்று நான் சொன்னதும், லக்ஷ்மி உடனே அதை ஏற்றுக்கொண்டு விட்டாள்.

ஆனால் அதற்குக் காரணம் என்னவென்று மறுநாளல்லவா எனக்குத் தெரிந்தது?—ஆமாம், அன்று நான் ஆபீஸிலிருந்து வந்ததும் லக்ஷ்மி அவசரம் அவசரமாக ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்தாள். அந்தக் கடிதம் குற்றாலத்திலிருந்து வந்திருந்தது:

"அன்புள்ள லக்ஷ்மி,

நான் புறப்படும் போது நேரம் ஆகிவிட்டபடியால் அவசரத்தில் உன்னிடம் கூடச் சொல்லிக்கொள்ளவில்லை. நாங்கள் செளக்கியமாய்க் குற்றாலத்துக்கு வந்து சேர்ந்தோம். எங்கள் ஜிம்மி விடாமல் தூரத்திக்கொண்டே ரயில்வே ஸ்டேஷன் வரையில் வந்துவிட்டபடியினால் அதையும் அழைத்துக் கொண்டு வந்துவிட்டோம். பாலுக்காகக் கொடுத்த பணம் உன்னிடமே இருக்கட்டும்; நான் வந்து வாங்கிக் கொள்ளுகிறேன். ராஜம்."

இந்தக் கடிதத்தைப் படித்ததும் என்னால்தான் எப்படிச் சிரிக்காமல் இருக்க முடியும்? — இல்லை, உங்களால்தான் எப்படிச் சிரிக்காம லிருக்க முடியும்?

# யுத்த கேந்திரம்



ஜெயமணி

●● மலைபோன்ற மருந்துக் குவியல் குபீர் என்று பற்றிக் கொள்வதற்கு ஒரு தீப்பொறி போதாதா?

அதுபோலவே பரந்த பசிபிக் மண்டலத்தில் ஒரு துளிப் பிரமாணம் உள்ள பார்மோஸா, பசிபிக் பிரதேசம் முழுவதையும் பற்ற வைக்கும் தீப்பொறியாகி விடுமோ என்ற கவலை ஏற்பட்டிருக்கிறது.

தென்கிழக்கு ஆசியாவிலே கேந்திரப் பிரதேசங்களாக விளங்கும் ஏழு நாடுகளைப் பற்றி இதற்கு முன் விவரிக்கப்பட்டது. இறுதியாக பிலிப்பைன், பார்மோஸாத் தீவுகளை இப்போது பார்க்கலாம். ●●

## 8. பிலிப்பைன் தீவுகள்

பூமண்டலத்தைச் சூழ்ந்துள்ள மகா சமுத்திரங்களிலே பசிபிக் மகாசமுத்திரம் மாத்திரம் சில அம்சங்களில் தனிச் சிறப்பு வாய்ந்ததாக இருக்கிறது. மற்ற மகா சமுத்திரங்களைக் காட்டிலும் பசிபிக் மகா சமுத்திரம் அதிக அகலமானது, மிகவும் ஆழமானது. அந்த மகா சமுத்திரத்தில் இருப்பதுபோல மற்ற எந்தச் சமுத்திரத்திலும் சங்கிலித் தொடர்போல் பதினாயிரக் கணக்கான தீவுகள் இல்லை.

'பசிபிக்' (Pacific) என்ற ஆங்கில வார்த்தைக்கு 'அமைதியான' என்று அர்த்தம். பல நூற்றாண்டுகளுக்கு முன் ஒரு போர்ச்சுகீய மாலுமி அந்த மகா சமுத்திரத்துக்கு அவ்வாறு பெயரிட்டதாகக் கூறப்படுகிறது. ஒரு வேளை அந்த மாலுமி கப்பலில் சென்ற சமயத்தில் பசிபிக் மகா சமுத்திரம் கொந்தளிப்பின்றி அமைதியாக இருந்திருக்கலாம். ஆனால் உண்மையில் அந்த மகா சமுத்திரத்தில் புயலுக்கும் சூறாவளிக் காற்றுக்கும் கொந்தளிப்புக்கும் எக்காலத்திலும் குறைவில்லை! இயற்கையாக ஏற்படும் அத்தகைய உற்பாதங்களைத் தவிர செயற்கையான யுத்தப் புயலுக்கும் பீரங்கி, வெடிகுண்டு மாரிக்கும் கூடக் குறைவில்லை! அப்படியிருக்க, அதைப் பசிபிக் மகா சமுத்திரம் அதாவது அமைதியான மகா சமுத்திரம் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்?

தீவுகள் மயமான பசிபிக் மகா சமுத்திரத்தில் உள்ள ஒவ்வொரு நாடும் பல பல தீவுகள் சேர்ந்ததாகும். நாலு பெரிய தீவுகள் அடங்கியதே ஜப்பான். இந்தோனேஷியாவிலோ நூற்றுக் கணக்கான தீவுகள் இருக்கின்றன. எனினும் ஏழாயிரத்து எண்பத்து மூன்று தீவுகள் கொண்டதுதான் பிலிப்பைன் நாடு என்பதைக் கேட்பவர்கள் வியப்படையாமல் இருக்க முடியாது.

அவைகளில் பதினொரு தீவுகள் மாத்திரமே பெரியவை; நானூற்று அறுபத்தாறு தீவுகள் ஒன்றிரண்டு சதுரமைல் விஸ்தீரணம் உள்ளவை. மற்றவைகள் எல்லாம் பெரும் திட்டுகளாகவும் பாறைகளாகவும் காட்சி அளிக்கின்றன.

1543-ம் வருஷம் அந்த நாட்டுக்கு முதன் முதலாகச் சென்ற ஸ்பானிஷ் கடற்படைத் தளபதி அதற்கு பிலிப்பைன் என்று பெயரிட்டார். ஸ்பெயினை ஆண்ட இரண்டாவது பிலிப் மன்னரின் ஞாபகார்த்தமாகவே அந்த ஸ்பானிஷ் தளபதி அவ்வாறு பெயர் சூட்டினார்.

1898-ம் வருஷம் வரையில் மூந்நூறு வருஷ காலம் ஸ்பெயின் தேசத்தினர் பிலிப்பைனில் சர்வாதிகாரம் செலுத்தி வந்தார்கள். பின்னர் அமெரிக்காவின் உதவி பெற்றுப் பிலிப்பானியர்கள் ஸ்பெயின் தேசத்தினரை விரட்டி விட்டு 1899-ம் வருஷம் ஜனவரி மாதம் 23-ந் தேதி குடியரசுப் பிரகடனம் செய்தனர்.

எனினும் கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைத்த கதையாக அதற்கு முந்திய வருஷம் ஸ்பெயின் தேசத்தினர் இரண்டு கோடி டாலருக்கு பிலிப்பைனை அமெரிக்கர்களிடம் விற்று விட்டார்கள்! ஸ்பெயின் தேசத்தினரை விரட்டிய பிலிப்பைன் மக்களுக்குத் தங்கள் நாட்டில் மறுபடியும் வேறொரு அன்னிய நாட்டின் ஆதிக்கம் ஏற்படுவது ஆத்திரத்தை உண்டு பண்ணியது. காலக்கிரமத்தில் பிலிப்பைனுக்குச் சுயாட்சி அளிப்பதாக அமெரிக்கர்கள் ஆசை வார்த்தை சொல்லி விட்டு அந்த நாட்டில் தங்களு

டைய பூரண ஆதிக்கத்தை நிலைநிறுத்திக் கொண்டார்கள்.

அன்னியர் ஆதிக்கத்தில் பிலிப்பைன் பட்ட கஷ்ட நஷ்டங்களைப் பற்றி அதிகமாக விவரிக்க வேண்டிய அவசியமில்லை. இந்தியர்கள் அன்னியர் ஆதிக்கத்தினலும் அந்த ஆதிக்கத்தை ஒழிக்கவும் எவ்வளவு கஷ்டப்பட்டார்களோ அவ்வளவு பிலிப்பானியர்களும் பாடுபட்டார்கள். இந்தியாவில் பிரிட்டிஷார் கையாண்ட அடக்குமுறைகளைக் காட்டிலும் அதிகக் கொடுமையான அடக்கு முறைகளை அமெரிக்கர்கள் பிரயோகித்துப் பிலிப்பானியர்களை வாட்டி வந்தனர்.

சென்ற மகா யுத்தத்தில் பிலிப்பைன் மக்கள் அடைந்த உயிர்ச் சேதமும் கஷ்ட நஷ்டங்களும் கணக்கில் அடங்கா. பிலிப்பைனிலுள்ள ஒரு நகரமாவது யுத்தத்தால் நாசமாகாமல் தப்பவில்லை.

இறுதியில் இந்தியாவில் பிரிட்டிஷாரின் மனம் மாறியதைப் போல பிலிப்பைனில் அமெரிக்கர்களுடைய மனமும் மாறியது. அதன் பலனாக பிலிப்பைன் 1946ம் வருஷம் ஏப்ரல் மாதம் குடியரசுப் பிரகடனம் செய்தது. அந்த வருஷம் ஜுலை மாதம் 4-ம் தேதி பிலிப்பைன் மக்கள் கோலாகலமான வைபவங்களுடன் குடியரசு விழாவைக் கொண்டாடினார்கள்.

★

**பி**லிப்பைன் தீவுகளின் விஸ்தீரணம் ஒரு லட்சம் சதுர மைல்களுக்கு மேல் இருக்கிறது. பிலிப்பைன் கடற்கரை ஓரம் மாத்திரம் 10,850 மைல்கள் தூரம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

அந்த நாட்டின் மொத்த ஜனத்தொகை ஒன்றே முக்கால் கோடி ஆகும்.

பிலிப்பைனில் எழுபதாயிரம் சதுர மைல்கள் காடாக இருக்கிறது. அந்த நாட்டுக்கு ஏராளமான வருமானத்தைக் கொடுக்கும் மூவாயிரம் வகையான உயர்ந்த மரங்கள் அந்தக் காடுகளிலிருந்து கிடைக்கின்றன. தங்கம் முதலிய சுரங்கச் செல்வத்துக்கும் பிலிப்பைன் தீவுகள் பிரசித்தி பெற்றவை.

பிலிப்பைன் தீவுகளில் சிலவற்றில் அரிசி உற்பத்தியும் சிலவற்றில் சர்க்கரை, புகையிலை உற்பத்தியும் முதல் ஸ்தானம் வகிக்கின்றன. உலகத்திலே அபரிமிதமாகக் கொப்பரையும் தேங்காய் எண்ணெயும் உற்பத்தியாகும் நாடுகளில் பிலிப்பை





உலகப் பிரசித்தி பெற்ற மணிலா நாரைத் தர வாரியாகப் பிரிக்கிறார்கள்.

னும் ஒன்று. இவற்றைக் தவிர அந்த நாட்டில் உற்பத்தியாகும் நாரிலிருந்து உலகப் பிரசித்தி பெற்ற மணிலாக் கயிறு தயாரிக்கப்படுகிறது. அங்கு உற்பத்தியாகும் மேற்படி நார் போர்ச் சாதனங்களுக்கு இன்றியமையாததாக இருப்பதால், அதில் பாதிக்கு மேல் அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது. பிலிப்பைன் தீவுகளில் ஒரு கோடிக்கு மேற்பட்ட ஆடுமாடுகளும், எருதுகளும், குதிரைகளும், பன்றிகளும் இருக்கின்றன.

அந்த நாட்டில் முத்து, பவளங்களும் ஏராளமாக எடுக்கிறார்கள்.

பிலிப்பைனின் தலைநகரான மணிலா பிரதான துறைமுகமாகவும் வர்த்தக ஸ்தலமாகவும் இருக்கிறது. மணிலா நகர் 1863-ம் வருஷம் ஏற்பட்ட பூகம்பத்தில் அழிந்து மறுபடியும் நிர்மாணிக்கப்பட்டதாகும். எனினும் சென்ற மகா யுத்தத்தில் அந்த நகர் மீண்டும் நாசமாகியது.

அமெரிக்காவிலே சர்வ கலாசாலை ஏற்படுவதற்கு முன்பே 1611-ல் பிலிப்பைனில் சர்வகலாசாலை ஏற்பட்டது அந்த நாட்டின் தனிச் சிறப்பாகும். அங்குள்ள ஜனங்களில் ஐம்பது சதவிகிதம் பேர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள்.

பிலிப்பைன் மக்களின் முக்கியத் தொழில் விவசாயமே யாதலால், அங்குள்ள கலவிச் சாலைகளில் விவசாயப் பயிற்சிக்கே அதிக முக்கியத்துவம் அளித்திருக்கிறார்கள்.

★

இந்தோனேஷ்யா முதலிய தென் கிழக்கு ஆசியா நாடுகள் மீது அராபியர்கள் படையெடுத்து அங்கு இருந்த ஹிந்துக்களை யெல்லாம் முஸ்லிம்களாக மாற்றினார்கள் என்று ஏற்கெனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது போலவே பிலிப்பைன்மீது நானூறு வருஷங்களுக்கு முன் படையெடுத்த ஸ்பெயின் தேசத்தினர் அந்த நாட்டு மக்களை யெல்லாம் கிறிஸ்துவர்களாக மாற்றி விட்டார்கள். எனவே இன்று பிலிப்பைன் மக்களில் தொண்ணூறு சதவிகிதத்தினர் கிறிஸ்துவர்களாக இருக்கிறார்கள். அதனால் அந் நாட்டில் நூற்றுக் கணக்கான அழகிய கிறிஸ்துவாலயங்கள் நிர்மாணிக்கப் பட்டிருக்கின்றன. பிலிப்பைன் தீவுகளில் இருப்பது போல் வேறு எந்த ஆசியா நாட்டிலும் அவ்வளவு அதிகமான கிறிஸ்துவாலயங்கள் இல்லை.

யுத்த கேந்திர நாடுகளைப் பற்றிய வரலாறு இத்துடன் பூர்த்தி யடைகின்றது. எனினும் இதை முடிக்குமுன் மற்றும் இரண்டு பிரதேசங்களைப் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடவேண்டியது அவசியம்.

பார்மோஸா: இது சீனாவைச் சேர்ந்த ஒரு சிறிய தீவு. இந்தத் தீவு சமீபகாலத்தில் திடீரென்று மிகவும் கீர்த்திபெற்றிருக்கிறது! பரந்த பசிபிக் மண்டலத்தில் பார்மோஸா ஒரு துளி போன்றது. எனினும், மலைபோன்ற மருந்துக் குவியல் குபீர் என்று பற்றிக்கொள்வதற்கு ஒரு பொறி போதாதா? அது போலவே இன்று பார்மோஸா பசிபிக் பிரதேசத்தைப் பற்ற வைக்கும் தீப்பொறிபோல இருந்து வருகிறது!

பார்மோஸாத் தீவு பதினாலாயிரம் சதுர மைல் விஸ்தீரணம் உள்ளது. அங்கு அறுபது லட்சம் ஜனங்கள் வசிக்கிறார்கள்.

அந்தத் தீவில் உற்பத்தியாகும் ஏராளமான தேயிலை கானடாவுக்கும் அமெரிக்காவுக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றது. கற்பூரம் செயற்கை முறையில் உற்பத்தியாவதற்கு முன், உலகத்துக்குத் தேவையான கற்பூரம் முழுவதும் அந்தத் தீவில்தான் உற்பத்தியாகி வந்தது.

கொரியாவில் யாருடைய ஆதிக்கம் நிலைப்பது என்பதை நிர்ணயிப்பதற்காகச் சீனாவுக்கும் ஜப்பானுக்கும் 1895-ம் வருஷம் நடந்த போரில் ஜப்பான் வெற்றி யடைந்தது. எனவே சீனா தனக்குச் சொந்தமான பார்மோஸாத் தீவை அப்போது ஜப்பானுக்கு நஷ்ட ஈடாகக் கொடுத்தது. அதிலிருந்து சென்ற மகா யுத்தம் முடியும் வரையில் பார்மோஸா ஜப்பான் வசமே இருந்து வந்தது. சென்ற மகா யுத்தத்தில் ஜப்பான் தோல்வி யுற்றதால், வெற்றி பெற்ற வல்லரசுகள்

பார்மோஸாவை மீண்டும் சீனவிடம் ஒப்படைத்தன.

எனினும் அந்தத் தீவின் கதை அத்துடன் முடிந்து விடவில்லை. சீன உள் நாட்டு யுத்தத்தில் தோல்வியுற்ற சியாங் கோஷ்டியினர் இப்போது பார்மோஸாவில் இருந்து வருகிறார்கள். எனவே கம்யூனிஸ்டு சீனப் படைகள் பார்மோஸா மீதும் படையெடுக்கக்கூடும். இதன் மத்தியில் பசிபிக் பிரதேசத்தில் தற்காப்பு முறைகளைக் கைக்கொள்வதற்காக அமெரிக்கப் படைகளும் தற்காலிகமாக பார்மோஸா தீவின் மீது கண்ணோட்டம் செலுத்தி வருகின்றன. எனவே எதிர்காலத்தில் பார்மோஸா தீவு காரணமாக ஒரு யுத்தமே ஏற்பட்டாலும் ஏற்படலாம்!

★

**ஹாவாய்:** ஆசியாவுக்கும் அமெரிக்காவுக்கும் நடுவே பசிபிக் மகா சமுத்திரத்தில் ஹாவாய்த் தீவுகள் இருக்கின்றன. பசிபிக் மண்டலத்தில் அவை தான் அமெரிக்காவின் முக்கியமான இராணுவத் தளம் ஆகும். சென்ற மகா யுத்தத்தின்போது ஜப்பான் ஹாவாய்த் தீவுகளில் உள்ள பர்ல் ஹார்பரில் வைக்கப்பட்டிருந்த அமெரிக்கக் கடற்படைகளைத் திடீரென்று தாக்கி அமெரிக்காவின் பலத்தைத் தகர்த்தது வாசக அன்பர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். எதிர் காலத்திலும் பசிபிக் பிரதேசத்தில் அதுதான் அமெரிக்காவின் படைத்தளமாக இருந்து வரும். பசிபிக் மகா சமுத்திரத்தில் செல்லும் எந்தக் கப்பலும் ஹாவாய்த் தீவுகளின் தலை நகரான ஹோனோலூலு துறைமுகத்தில் நிற்காமல் செல்வதில்லை.

ஹாவாய்த் தீவுகள் 'பசிபிக் பிரதேசத்தின் சுவர்க்கம்' என்று கூறுவது உண்டு. அதிலிருந்து அந்தத் தீவுகளின் இணையற்ற இயற்கை வனப்பை ஊகித்துக் கொள்ளலாம். ஹாவாய்ப் பெண்களின் ஹூலா நடனம் உலகப் பிரசித்தி பெற்ற விஷயம்.

ஹாவாய்த் தீவுகளின் மொத்த விஸ்தீரணம் ஆறாயிரத்து ஐந்நூறு மைல்கள் ஆகும். அங்கு நாலரை லட்சம் ஜனங்களுக்கு மேல் வசிக்கிறார்கள்.

ஹாவாயில் உற்பத்தியாகும் பொருள்களில் அன்னாசிப்பழம் முதல் ஸ்தானமும் கரும்பு இரண்டாவது ஸ்தானமும் வகிக்கின்றன. வருஷா வருஷம் அந்தத் தீவுகளில் சுமார் ஆறு கோடி டாலர் பெறுமானம் உள்ள கரும்பும் ஏழு கோடி டாலர் பெறுமானம் உள்ள அன்னாசிப் பழங்களும் உற்பத்தியாகின்றன. அந்தத் தீவுகளில் இருப்பதுபோல் உலகிலே வேறு எங்கும் அவ்வளவு பெரிய அன்னாசிப் பழத் தோட்டங்கள் இல்லை.



முதல் காக்கை:—உன் பெண்சாதி ஏன் இப்படி மூர்ச்சையாகிக் கீழே கிடக்கிறாள்......?

இரண்டாவது காக்கை:— அதுவா?—கோடி வீட்டில் யாரோ புதிதாகக் குடி வந்திருக்கிறார்கள்; அவர்கள் கொஞ்சம் அரிசிச் சோறு போட்டு விட்டார்கள்; அதைக் கண்டதும் இவள் மூர்ச்சையாகி விட்டாள்!

---

ஹாவாய்த் தீவுகள் 1555-ம் வருஷம் தான் கண்டு பிடிக்கப்பட்டன. அதற்கு முன்னும் பின்னும் அந்தத் தீவு ஒவ்வொன்றும் ஒவ்வொரு மன்னரின் ஆட்சியில் இருந்தது. 1800-ம் வருஷத்துக்குப் பின் அங்கு அமெரிக்கர்கள் குடியேற ஆரம்பித்தார்கள். நாளடைவில் ஹாவாய்த் தீவுகளில் உள்ள கரும்பு, அன்னாசிப் பழத் தோட்டங்கள் அவர்கள் வசமாயின. பின்னர் 1893-ல் அமெரிக்கர்கள் புரட்சி செய்ததன் விளைவாக அங்கு குடியரசு மறைந்து அன்னியர்களின்,— அமெரிக்கர்களின் ஆதிக்கம் ஏற்பட்டது. அதன் பிறகு தான் அத்தீவுகளை அமெரிக்கர்கள் தங்களுடைய படைத்தளமாக்க முற்பட்டார்கள்.

முதன் முதலாக மேற்படி தீவுகள் கண்டு பிடிக்கப்பட்டபோது அங்கு மூன்று லட்சம் சுதேசிகள் இருந்தனர். ஆனால் நோய் காரணமாகவும் கலப்பு மணம் காரணமாகவும் இப்போது அந்தத் தொகை இருபதாயிரத்துக்கும் குறைந்து விட்டது. எனவே இனி அங்கு சுயாட்சி என்ற பேச்சுக்கு இடமில்லை! ஏனெனில் இன்று அத்தீவுகளில் அமெரிக்கர்களே பெரும்பான்மையோர் ஆகி விட்டார்கள்!

# படித்துப் பாருங்கள்!

## அறிவுத் திரன்

"அப்பாவிப் பெண் ஒரு புத்திசாலியான கணவனை ஆண்டுவிடமுடியும். ரொம்ப புத்திசாலிப் பெண்தான் முட்டாளை ஆள முடியும்" என்று கூறுகிறார் கிப்ளிங் என்ற ஆங்கில ஆசிரியர்.

மார்க்ட்வெயின் என்ற அமெரிக்க நகைச்சுவை ஆசிரியர் "பிறருடைய துன்பங்களை நினைத்துப் பார்ப்பதால் நம்முடைய துன்பங்களைச் சகிக்கக் கற்றுக் கொள்கிறோம்" என்று கூறுகிறார்.

"யுத்தத்திலே முதலாவதாகவும் மிகப் பெரியதாகவும் ஏற்படுகின்ற சேதம் சத்தியம் தான்" என்று கூறுகிறார் காந்தியடிகள்.

மேற்கண்ட மணிமொழிகள் ஒவ்வொன்றிலும் பொதிந்து கிடக்கும் உண்மைகளை நினைத்துப் பார்த்தால் நம் நினைவுக்கு ஒரு முடிவிராது; நேரம் போவதும் தெரியாது.

இப்படி உலகம் தோன்றிய நாள் முதல் எத்தனையோ அறிவாளிகள் எத்தனையோ மொழிகளில் பலபல உண்மைகளைச் சொல்லி விட்டுப் போயிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் படிக்கக் கொடுத்து வைத்தால் நாம் பொழுது போக்குக்காக சினிமா பார்க்கப் போய்த் தேள் கொட்டிக் கொள்ள மாட்டோம்; பிரசங்கங்கள் கேட்கப் போய்த் தலைவலி வாங்கிக் கொள்ள மாட்டோம்; கண்ட நாவல்களைப் படிக்கப் போய் மூக்குக் கண்ணாடி வாங்கி அணிந்து கொள்ள மாட்டோம்!

ஆனால் இப்பொழுது நாம் 'கொடுத்து வைத்தவர்'களாகி விட்டோம். திரு. என். குமரேசன் என்பவர் உலக அறிவாளிகள் அத்தனை பேருடைய மொழிகளையும் திரட்டி இனிய தமிழில் மொழி பெயர்த்துப் புஸ்தகமாக வெளியிட்டிருக்கிறார். இப்புஸ்தகத்தில் மேல்நாட்டு அறிவாளிகள் கீழ்நாட்டு அறிவாளிகள், தவிர நம் நாட்டு அறிவாளிகளாகிய மகாத்மா காந்தி, புத்தர், பகவான் ராமகிருஷ்ணர், விவேகானந்தர், ஜவாஹர்லால் நேரு, ராஜாஜி, திலகர், லஜபதி ராய் முதலியோருடைய மணி மொழிகளையும் சேர்த்திருக்கிறார். புஸ்தகத்தின் விலையைப் பார்க்கும் போதுதான் நாம் மூர்ச்சை போட்டு விழுந்துவிடுகிறோம். இவ்வளவு நல்ல புஸ்தகத்தின் விலை இவ்வளவு அதிகமாக இருக்கிறதே என்று அல்ல; இவ்வளவு குறைவாக இருக்கிறதே என்று தான். ஆம், விலை ரூ 2 தான்.

[கிடைக்குமிடம்: யமுனா இண்டஸ்ட்ரீஸ் பார்வதிபுதூர், நாகர்கோவில்]

## வீணை பவானி

"ஒரு கச்சேரியைப்போல் இன்னொரு கச்சேரி இராது. ஒரு நாள் அவளுடைய பாட்டில் குதூகலம் பொங்கித் ததும்பும்; காலை வேளையில் உதய சூரியனை வரவேற்கும் புள்ளினங்களின் குரலிலுள்ள ஆனந்தமும், பௌர்ணமியன்று வெண்ணிலவைக் கண்டு பொங்கும் கடலின் ஆரவார உற்சாகமும் தொனிக்கும். இன்னொரு நாள் கச்சேரியிலோ, அவளுடைய பாட்டைக் கேட்கும் போது உள்ளமானது காரணம் தெரியாத சோகத்தை அடையும். தாயைப் பிரிந்த குழந்தையின் தீனக் குரலையும், பகவானைப் பிரிந்த பக்தனின் தாபக் கதறலையும் அவளுடைய பாட்டிலே கேட்பதுபோலிருக்கும். அவள் வீணை வாசிக்கும்போது, கையிலுள்ள வாத்தியத்தின் கம்பிகளைத்தான் மீட்டுகிறாளா, கேட்பவர்களின் இருதய வீணையின் கம்பியைத்தான் மீட்டுகிறாளா என்று சந்தேகம் தோன்றும். முதலில் இதெல்லாம் விந்தையாயிருந்தது; விளங்காத மர்மமாயிருந்தது. அப்புறம், அப்புறம் ஒருவாறு விஷயம் புரிந்தது" என்று கூறுகிறார் ஜயம் பேட்டை தவுல் கந்தப்பப் பிள்ளை.

தவுல் கந்தப்பப் பிள்ளைக்குப் புரிந்த விஷயத்தை நேயர்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்றால் 'வீணை பவானி' என்னும் நூலைப் படிக்கவும். இதில் வீணை பவானியைத் தவிர 'கல்கி' எழுதிய "என் தெய்வம்" "எஜமான விசுவாசம்" "இது என்ன சொர்க்கம்" "ஜமீன்தார் மகன்" முதலிய மற்றும் பதினொரு இனிய கதைகள் அடங்கியிருக்கின்றன.

இந்தச் சிறு கதைத் தொகுதி முதல் பதிப்பு வெளியான மூன்று மாதத்திற்குள் எல்லாப் புத்தகங்களும் விற்றுப் போய் விட்டன. தமிழன்பர்களுக்கு மூச்சுவிட அவகாசம் கொடுத்த பிறகு இரண்டாவது பதிப்பு வெளியாகியிருக்கிறது.

[பிரசுரம்: தமிழ்ப் பண்ணை, தியாகராய நகர், சென்னை, விலை: ரூ. 3—8—0]

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 308. பின் வாங்கி நிற்கும் கடல்.

**யு**த்த களத்தில் தந்தையை இழந்தவர்கள் பலர், மக்களை இழந்தவர்கள் பலர், மற்றும் உயிரை விட்டவர்கள் எண்ணிலாத பேர்.

இந்தக் கோரக் காட்சியைப் பார்த்த அரக்கர்கள் பயமடைந்து அப்படியும் இப்படியுமாகச் சிதறி ஓடி, நகரத்துக்குள் நுழைந்தார்கள்.

அவர்களுக்குப் பின் தூதர்கள் பலரும் ஓடினார்கள்.

இன்னதோர் தன்மைஎய் தி
இராக்கதர் இரிந்துசிந் திப்
பொன்னகர் புக்கார்இப் பால்
பூசல்கண் டோடிப்போ ன
துன்னருந் தூதர்சென் றார்,
தொடுகழல் ஆர்ப்பநின் ற
மன்னவன் அடியில்வீழ்ந் தார்,
மழையின்நீர் வழங்குங்கண் ணார்.

[இன்னதோர் தன்மை எய்தி: இந்த விதமாக நாசம் செய்யப்பட்டு: இராக்கதர் இரிந்து சிந்திப் பொன்னகர்: பயந்தோடிச் சிதறுண்டவராய் அரக்கர் இலங்கை நகரத்துக்குள்ப் போனார்கள்; இப்பால்பூசல் கண்டு ஓடிப்போன துன்னருந் தூதர் சென்றார்: அதன் பிறகு யுத்தத்தின் கொடுமையைக் கண்டு ஓடிப்போன தூதர்களும் ஒருவரோடு ஒருவர் நெருக்கிக் கொண்டு போனார்கள்; தூதர்களும் நகரத்தைச் சேர்ந்தார்கள். தொடு கழல் ஆர்ப்ப நின்ற மன்னவன்: காலில் அணிந்த கழல் சப்திக்கும்படி ஆத்திரத்தோடு காலை அப்படியும் இப்படியுமாக மிதித்துக் கொண்டு நின்ற ராவணனுடைய; அடியில் வீழ்ந்தார் மழையின் நீர் வழங்கு கண்ணார்: பாதத்தில் விழுந்தார்கள், மழைபோலக் கண்ணீர் வடித்தவராய்.]

* * *

**அ**ப்படி ஓடி வந்து காலில் விழுந்த தூதர்களைப் பார்த்து, "என்ன நடந்தது? சொல்லுங்கள்!" என்றான் ராவணன்.

தூதர்கள் சொல்லுகிறார்கள்: "இறந்துபோன சேனையைக் கணக்கிட்டால் மிஞ்சி இங்கு வந்த சேனை உரை போடவும் காணாது."

நோக்கிய இலங்கைவேந் தன்
'உற்றது நுவல்மின்'என் றான்
'போக்கிய சேனைதம் மில்ப்
புகுந்துள இறையும்போ தா.
ஆக்கிய போரின்ஐ ய
அதிகாயன் முதல்வரா ய
கோக்குலக் குமரர்எல் லாம்
கொடுத்தனர் ஆவி'என் றார்.

[நோக்கிய இலங்கை வேந்தன்: கண்ணீர் விட்டுப் புலம்பிக் கொண்டு காலில் விழுந்த தூதரைப் பார்த்த ராவணன்; போக்கிய சேனை தம்மில்: இறந்து போன சேனையின் தொகையைக் கணக்கிட்டால்; புகுந்துள இறையும் போதா: தப்பி ஊருக்குள் வந்த சேனையானது மிகக் குறைவு உரை போடவும் போதாது இறந்து போன சேனைகளுக்கு.

ஆக்கிய போரின் ஐய: பலமாக முயன்று செய்த யுத்தத்தில், ராவண மன்னனே: அதிகாயன் முதல்வராய கோக்குல குமரர் எல்லாம் கொடுத்தனர் ஆவி என்றார்: அதிகாயன் முதலான ராஜகுமாரர்கள் எல்லாரும் தங்கள் உயிரைக் கொடுத்தார்கள் உனக்கு வெற்றி உண்டாக வேண்டும் என்ற ஆத்திரத்தோடு, என்று சொன்னார்கள்.]

* * *

**அ**திகாயன் இறந்தான் என்ற செய்தி காதில் விழுந்த மாத்திரத்திலே ராவணனது உள்ளத்தில் ஒன்றுக்கொன்று ஒவ்வாத எத்தனையோ உணர்ச்சிகள் எழுந்து தாக்க ஆரம்பித்தன.

சமுத்திரத்தில் மாறுபட்ட அலைகள் பல ஒன்றோடொன்று மோதுவதைப் பார்த்திருக்கிறோம்.

சில அலைகள் கரையை நோக்கி ஓடி மோதும். மோதிய உடன் ஏதோ தடைப்பட்ட மாதிரி திகைத்துப் பின் வாங்கி மறுபடியும் மற்ற அலைகளோடு மோதிக் கோஷிப்பதையும் பார்த்திருக்கிறோம்.

அந்த சமுத்திரக் காட்சியே நம்முடைய கண்ணுக்கு வருகிறது, ராவணனது மன நிலையைப் பார்க்கும் போது.

ஏங்கிய விம்மல்,மா னம்;—
இரங்கிய இரக்கம்வீ ரம்;—
ஓங்கிய வெகுளி,துன் பம்;—
என்றிவை ஒன்றிற்கொன் று
தாங்கிய தரங்கமா கக்
கரையினைத் தள்ளித்தள் ளி
வாங்கிய கடல்போல்நின் றான்,
அருவிநீர் வழங்குங்கண் ணான்.

[ஏங்கியவிம்மல், மானம்: பெருமூச்சு காரணமாகத் தலை நிமிர்கிறது. அதற்கடுத்தாற் போல் மானம் தலையைக் கீழே கவிழ்க்கிறது;

இரங்கிய இரக்கம் வீரம்: இறந்து போனவர்களுக்காகப் பரிதாபம் உண்டாகிறது. அதை ஒட்டியே வீரமும் மேலே எழுகிறது;

ஓங்கிய வெகுளி துன்பம்: கோபாவேசம் உச்சத்தை அடைகிறது. அதை ஒட்டித் துன்பமும் மனசைத் தாழ்த்துகிறது.

என்றிவை ஒன்றிற் கொன்று தாங்கிய தரங்கமாக: மேலே சொன்ன உணர்ச்சிகள் மாறுபட்டிருந்தும் மனக் குழப்பத்தினால் ஒன்றை யொன்று உயர்த்தித் தாங்கிக் கொண்டு மனசில் ஊடாடின—அலைகள் ஒன்றையொன்று தாங்கி அப்படியும் இப்படியுமாக ஓடிப் பாய்வது போல;

கரையினைத் தள்ளித் தள்ளி வாங்கிய கடல் போல் நின்றான்: ஏதோ கரையைத் தகர்த்து விடலாம் என்று பாய்ந்த கடலானது பின் வாங்கித் திகைப்பது போலத் திகைத்து நின்றான்; அருவி நீர் வழங்கும் கண்ணான்: அருவி போலக் கண்ணீர் வடித்துக் கொண்டு நின்றவனான ராவணன்.]

ராவணனுடைய மனசில் நிகழ்ந்த குழப்பத்தில் உணர்ச்சிகள் முரண்பட்டு ஒன்றோடொன்று மோதுவதைக் கண்கூடாகப் பார்த்த மாதிரி இருக்கிறது காட்சி.

# தலைவலிக்கொரு தனி மருந்து

எம். எஸ். எம்.

எனக்கென்னமோ சுபமாக முடியும் கதைகளை எழுதவே முடிவதில்லை. எந்த விதமாகக் கதை யெழுதினாலும் கடைசியில் நான் எழுதின வேகம் தாங்காமல் கதாநாயகி கடுஞ்சுரம் வந்து இறந்து விடுகிறாள்; அல்லது கதாநாயகன் என் மேல் கோபித்துக் கொண்டு போய் ராணுவத்தில் சேர்ந்து எங்கேயோ விழும் குண்டைத் தன் தலையில் போட்டுக் கொண்டு மடிகிறான்.

என் கதைகளை நான் பத்திரிகைகளுக்கு அனுப்பு முன்பே அவைகளை என் மனைவி படிப்பது வழக்கம். அதாவது அவளை நான் படிக்கச் சொல்லுவது வழக்கம். அவளைக் கதையை உரக்கப் படிக்கச் சொல்லி விட்டு அவள் முக பாவங்களைக் கவனித்துக் கொண்டே வருவேன். கதை பிரசுரமானால் அதைப் படிக்கும் நேயர்களின் முகார விந்தங்கள் எப்படி யெப்படி மாறும் என்று அதன் மூலம் கற்பனை செய்து கொள்வேன். ஆனால் இந்தப் பத்திரிகைகள் என்னுடன் ஒத்துழைத்தால்தானே? ஆகையால் என்னுடைய சிறந்த சிறு கதைகளைப் படித்து ரசிக்கும் பாக்கியம் எங்கள் இருவரோடு முடிந்துவிடும்.

"போயும்போயும் அவன் (அவன்தான் கதாநாயகன்) தலையில் குண்டைப் போட்டு அநியாயமாக ஒரு சிறு பெண்ணின் வாழ்க்கையை வீணாக்குகிறீர்களே! அவன் 'மிலிட்டரி'யில் சேருவதற்குக் காரணமான அவன் தாயார் தலையில் அந்தக் குண்டைப் போடுகிறதுதானே!" என்பாள் என் மனைவி அம்புஜம்.

நான் எழுதிய, அதாவது அம்புஜம் படித்த கதை இதுதான்:—

கதாநாயகனும் கதாநாயகியும் காதல் மணம் புரிந்து கொள்கிறார்கள். ஆனால் இது பிள்ளையின் தாயாருக்குப் பிடிக்கவில்லை: ஏனென்றால் அவள் வேறு ஒரு பணக்காரப் பெண்ணைத் தன் பிள்ளைக்கு நிச்சயம் செய்து வைத்திருக்கிறாள். பையன் பணத்தை மதிக்காமல் ஏழையானாலும் காதலே பெரிதென்று விருபிக்கப் பலத்த எதிர்ப்புக்களிடையே தன் ஏழைக் காதலியை மணக்கிறான். மணமான பின்பும் அவனுக்கு வேலை கிடைக்கவில்லை. மாமியார் தினம் நூறு தடவை தன் மாட்டுப் பெண்ணைத் தூற்றுகிறாள், அவளுடைய துரதிர்ஷ்டத்தினால் தான் தன் பிள்ளைக்கு வேலை கிடைக்கவில்லை என்று. நளாயினி வம்சத்தில் உதித்த அந்தப் பெண் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டிருந்தாலும் ஒரு நாள் துக்கம் தாங்காமல் கிணற்றில் விழப் போகிறாள். அதைத் தற்செயலாகப் பார்த்த கணவன் அவளைத் தடுத்து நிறுத்தித் தேற்றித் தான் ராணுவத்தில் சேருகிறான். சேர்ந்து முதல் மாதச் சம்பளம் வாங்கு முன்னரே அவன் தலையில் எதிரி விமானக் குண்டு விழுகிறது. விஷயம் தெரிந்த பையனின் தாயார் மேலும் தன் மருமகள் மீது வசை மாரி பொழிகிறாள். ஆனால் அந்தப் பெண்ணின் காதில் இதெல்லாம் விழவேயில்லை.

ஏனென்றால் அவள் துயரம் தாங்காமல் இருதயம் வெடித்து 'எல்லை யில்லாத எல்லை'யைக் கடந்து விடுகிறாள்!

அதாவது 'செத்துப் போய் விட்டாள்' என்று சாதாரண ஜனங்கள் சொல்லும் நிலையை அடைந்து விடுகிறாள்!

* * *

"அந்தக் குண்டைப் பையனின் தாயார் தலையில் போடக் கூடாதோ!" என்று அம்புஜம் சொன்னது மறைமுகமாக என் தாயாரைக் குறித்துத்தான் என்று எனக்குத் தெரியாமலில்லை. இருந்தாலும் அதைக் கவனிக்காதவன் போலவும் அவள் சொன்னதின் உள்ளர்த்தத்தைப் புரிந்து கொள்ளாதவன் போலவும் நடித்து, "சோக முடிவென்றால் இதைவிடச் சிறந்த முடிவு கிடையாது! இதைப் படிக்கும் பேர்வழிகளின் மனதில் இந்தத் துயர சம்பவம் தபால் ஸ்டாம்பு கவரில் ஒட்டிக் கொள்வது போல ஒட்டிக் கொள்ளும்!" என்று விவரிப்பேன்.

* * *

எனக்குக் கதைகளை விடத் தலைப்புகள் தான் அதிகக் கவலை தரும் விஷயம். பத்திரிகையில் (பிரசுரமானால்தான்) என் கதை யிருக்கும் பக்கத்தை நேயர்கள் அசட்டை செய்து மேலே புரட்டி விடாமல், தலைப்பைக் கொண்டே அவர்களைக் கவர்ந்து கதையைப் படிக்கத் தூண்ட வேண்டுமென்பது என் கொள்கை. இந்த விஷயத்தில் நான் தற்கால விளம்பர யுக்திகளைக் கையாளுவது வழக்கம்.

"நீங்கள் கழுதைப்பாலில் குளித்திருக்கிறீர்களா?" என்று கொட்டை யெழுத்துக்களுடன் ஆரம்பமாகும் விளம்பரத்தை வியப்புடன் படித்தால், அது நம்மை "வேல் விழி மார்க்" சோப்பையே எப்போதும் உபயோகிக்கும்படி உபதேசிக்கும்! "இதோ அரிசி யில்லாமல் சாதம் சமைக்கும் விதம்!" என்ற பெரிய எழுத்துக்களுடன் தொடங்கும் பக்கத்தை ஆவலுடன் ஆராய்ந்தால் அது நம்மை எப்போதும் "வயிற்று வலி பிராண்ட்" விளக்கெண்ணெயையே வாங்கும்படி போதிக்கும்!

விளம்பரத்தைப் படித்து விட்டு யார் என்ன வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும்; அந்த அதிசயத் தலைப்புகளுக்காவது விளம்பரங்களைக் கடைசி வரையிலும் படிக்கிறார்கள் அல்லவா?

இதனாலேயே எனக்கு அபூர்வமான தலைப்புகள் தோன்றும் போதெல்லாம் உடனுக்குடனே அவைகளை ஒரு நோட்டுப் புத்தகத்தில் எழுதிக் கொண்டுவிடுவது வழக்கம். 'கன்னியின் கண்ணீர்,' 'அபலை



உரக்கப் படிக்கச் சொல்லிவிட்டு அவள் முக பாவங்களைக் கவனித்து......

யின் சாபம்,' 'சமையற்காரியின் பிள்ளை,' 'அந்தோ, பரிதாபம்!'......இவைகளெல்லாம் என்னிடம் கைவசமுள்ள பல தலைப்புகளுள் சில.

இப்படிக் கவர்ச்சியான தலைப்புக் கொடுக்கும்போது கதைக்கும் தலைப்புக்கும் சம்பந்தமிருக்க வேண்டுமென்ற நியதி என்னிடம் கிடையாது. எதற்காகச் சம்பந்தமிருக்க வேண்டும்? யதேச்சையாகச் சம்பந்தமிருந்தால் இருந்து விட்டுப் போகட்டும். தலைப்பு வேறு; கதை வேறு.

பார்க்கப்போனால் இன்னும் ஒருபடி மேலே போய்த் தலைப்பை முதலிலேயே தீர்மானித்துக் கொண்டுதான் அதற்குத் தகுந்த கதையை எழுத வேண்டுமென்று கூடச் சொல்லுவேன்! இந்தச் சின்ன விஷயத்தில் நான் அம்புஜத்தின் உதாரணத்தைக் கடைப்பிடிக்கிறவன் என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

பாயசம் மாதிரி திரவமான வஸ்துவை ஒரு டம்ளரில் கொண்டு வந்து என்னிடம் நீட்டி, "இந்தாருங்கள், சர்க்கரைப் பொங்கல்!" என்பாள் அம்புஜம்.

"இதென்ன பாயசம் போலிருக்கிறதே! சர்க்கரைப் பொங்கல் திட பதார்த்த வகையைச் சேர்ந்தது என்பதல்லவா என் ஞாபகம்?" என்று அவளுக்கு ஞாபக மூட்டுவேன்.

"எனக்கு அது தெரியும்! ஆனால் நான் காலையில் சொன்னது சர்க்கரைப்

## அவர் யோசனை!









பொங்கல் செய்யப் போகிறேனென்று தானே? அது சரியாக வராவிட்டால் குற்றம் சர்க்கரைப் பொங்கல் மீதுதானே? எப்போது நான் செய்யப் போகும் பண்டத்திற்குச் சர்க்கரைப் பொங்கல் என்ற தலைப்புக் கொடுத்து விட்டேனே, அப்போது அது முடிவில் திட பதார்த்தமாயிருந்தாலும் திரவ ரூபமாக மாறினாலும் கூட அது சர்க்கரைப் பொங்கல், சர்க்கரைப் பொங்கல்தான்! ஆகையால் சர்க்கரைப் பொங்கலைச் சீக்கிரம் குடித்துவிட்டு டம்ளரைக் கொடுங்கள்!" என்று அடித்துப் பேசுவான் அம்புஜம்.

அந்தச் சர்க்கரைப் பொங்கலை நான் குடிப்பதற்கு மிகவும் கஷ்டப்பட்டாலும் அதிலிருந்து நான் தெரிந்து கொண்ட விஷயங்கள் பல. தயிர் வடை யென்ற பெயர் கொடுக்கப்படும் வஸ்து மோர்க் குழம்பின் முடிவை யடையும்! சேமியா உப்புமா என்ற நாமதேயம் கொண்ட பண்டம் பகாளாபாத்தின் கதியை யடையும்!

ஆனால் 'முக்கண்ணனு யிருந்தாலும் குற்றம் குற்றமே!' என்று நக்கீரர் சொன்னது போல, முடிவாக வெளி வந்த பண்டம் மோர்க்குழம்பா யிருந்தாலும் அம்புஜத்தின்படி அதன் பெயர் தயிர்வடை, தயிர்வடையே! பகாளாபாத்தாயிருந்தாலும் அதன் நாமம் சேமியா உப்புமா, சேமியா உப்புமாதான்!

இந்த நீதியை யொட்டி, மேலே அம்புஜம் படித்த கதைக்கு நான் முன்னதாகவே சீட்டுக் குலுக்கிப் போட்டுப் பொறுக்கி யெடுத்து வைத்திருந்த தலைப்பு 'துயரத்தின் முடிவு' என்பதேயாகும். அதிர்ஷ்டவசமாக இந்தத் தலைப்பிற்கும் என் கதைக்கும் சம்பந்தமிருப்பதாக எனக்குப் பட்டது சர்க்கரைப் பொங்கல் செய்ய நினைத்துத் திடமான சர்க்கரைப் பொங்கலாகவே வெளி வந்துவிட்டது!

* * *

"என்ன இது? தலைவலிக்கொரு தனி மருந்து என்ன வென்று தெரிந்து கொள்ளலாமென்று இதைப் படித்தால், இல்லாத தலைவலி உடனே வந்துவிடும் போலிருக்கிறதே!" என்று பல குரல்கள் கேட்கின்றன!

நான்தான் முன்னமேயே சொல்லி விட்டேனே! தலைப்பு வேறு; உள்ளிருக்கும் விஷயம் வேறு; இரண்டிற்கும் சம்பந்தமிருக்க வேண்டிய அவசியமில்லையென்று. இந்தக் கவர்ச்சியான தலைப்புக் கொடுக்காவிட்டால் நீங்கள்தான் தலைவலியை வரவழைத்துக் கொள்ளச் சிரமப்பட்டு இதைக் கடைசி வரையிலும் படித்திருப்பீர்களா, சொல்லுங்கள்?

# வட்ட மேஜை

## நல்ல மாறுதல்

அகில இந்திய ரேடியோ நிலையத்தார் அக்டோபர் 1உ யிலிருந்து ஒலிபரப்பு நேரத்தில் சிற்சில மாறுதல்கள் செய்திருக்கிறார்கள். முக்கியமாக திருச்சி, சென்னை இவ்விரு நிலையங்களிலும் இதுகாறும் வெறும் சங்கீதத்துக்காக ஒதுக்கப்பட்டு வந்த நேரத்தில் மொத்தமாக ஒரு மணியைக் குறைத்து அதை வேறு வழியில் ஈடு செய்திருக்கிறார்கள். இவ்விரண்டு மாறுதல்களும் வரவேற்கத் தக்கவை.

ரேடியோ சங்கீதம் என்றாலே, தரத்தில் கீழானது என்ற அபிப்பிராயம் அனேகமாக எங்கும் பரவியிருக்கிறது. சங்கீதத்தின் தரத்தைக் குறைத்ததோடல்லாமல் அதை மலிவாகவும் ஆக்கிவிட்டார்கள். ரேடியோதான் சங்கீதத்தில் காணப்படும் தரமின்மைக்கு முக்கிய காரணம் என்று 'கல்கி'யில் முன்பு ஒரு தடவை ஆடல் பாடல் பகுதியில் எழுதியிருந்ததையும் இங்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். எனவே ரேடியோ, கீழ்த்தரமான சங்கீதத்தைப் பரப்புவதில் விசேஷ சிரத்தை காட்டி வந்திருக்கிறது. இம்முறையில் பார்த்தால், தற்போது அவர்கள் செய்திருக்கும் மாறுதல் ஓரளவு, கீழ்த்தர சங்கீதத்தின் வளர்ச்சியைத் தடை செய்திருக்கிறது என்றுதான் கூற வேண்டும். ஒரு மணி நேரம் அதிகமாக இனி நம் காதில் அது ஒலிக்க வகையில்லை. கடனுக்காக கேட்டுக் கொண்டிருப்பவர்களும், இனி கேட்க முடியாது. எனவே சங்கீதத்தின் 'மலிவான தன்மை' இதனால் சற்று பாதிக்கப்படும் என்பதில் சந்தேகமேயில்லை.

எனவே, ரேடியோ நிலையத்தார் பிற்போக்கு சங்கீதத்துக்கு, சாவு மணி அடிக்க ஆரம்பித்து விட்டார்கள் என்றெண்ணி மனம் பூரிக்கிறோம். சங்கீதத்தை மலிவாக ஆக்காமல் அதையும் கால வரம்பினுக்குள் கட்டுப்படுத்தி அதன் ருசி குறையாமல் செய்ய முற்பட்டுவிட்டார்கள் என்று அறிந்து சந்தோஷப்படுகிறோம். இது நல்ல சங்கீதம் வளர அறிகுறி என்று அறிந்து பெருமைப் படுகிறோம்.

வெட்டின ஒருமணி நேரத்தை, வேறு வகையில் ஈடு செய்திருப்பதையும் நாம் இங்கு குறிக்காமல் இருக்க முடியாது. நடுத்தரப் பள்ளிகளுக்காகவும் ஆரம்பப் பள்ளிகளுக்காகவும் அந்த ஒரு மணி நேரத்தைச் செலவிடப் போகிறார்கள். இதுவும் மகிழ்ச்சிக் குரிய செய்தி. பொழுது போக்குக்காகப் பயன் படுத்தப்பட்டு வந்த கருவி என்ற நிலை மாறி அறிவை வளர்க்கவும் உபயோகப்படுத்தப் படுகிறது என்று அறிந்து மிகவும் சந்தோஷப் படுகிறோம். கோயில்களெல்லாம் கல்விச் சாலைகளாக மாற வேண்டும் என்று ஆர்ப்பரிக்கும் இந்நாட்களிலே, வீடுகளும், ரேடியோ மூலம், கல்விக் கூடங்களாக மாறுகின்றன என்பதை அறியும் போது நம்மை அறியாமல், இன்பம் பிறக்கிறது. எனவே ரேடியோ நிலையத்தார் மனமுவந்து செய்திருக்கும் இம்மாறுதல்கள் இரு வகையில் நன்மை தருகின்றன என்பதில் சற்றும் சந்தேகமில்லை.

செம்மங்குடி
25—9—50 என். குஞ்சிதபாதம்

○●○

## இலவசம்!

"இலவச" விளம்பரத்தில் ஏமாந்து போனவர்களில் நானும் ஒருவன். "இலவசம். எங்கள் கம்பெனி...யை விளம்பரப்படுத்த நாங்கள்...கைக் குட்டைகளை வழங்கப் போகிறோம். முற்றிலும் இலவசம். எழுதுங்கள் இன்றே!" இப்படியாக நாம் பலதரப்பட்ட விளம்பரங்களைப் பார்க்கிறோம். இதனால் எவ்வளவு கஷ்டங்கள் ஏற்படுகின்றன!

ஒரு சமயம் நான் இந்தமாதிரி விளம்பரங்களைப் பார்த்துவிட்டு, எட்டு கவர்கள் வாங்கி எழுதிப் போட்டேன். அவ்வளவுதான்! மூன்று நாட்கள் கழித்து, வி. பி. பி. ஒன்று வந்தது. ஏற்றுக் கொள்ளவில்லை. இனும் பேர்வழிக்கு, வி. பி. பி. வாங்கப் பணமேது! இப்படியாக எட்டு வி. பி. பி.யும் வந்து திரும்பின! இதில் யாருக்கு லாபம்! விளம்பரம் கொடுத்தவருக்கும் 'ஸ்டாம்பு' செலவு வீண்! எழுதிப் போட்ட எனக்கும் ஒரு ரூபாய் நஷ்டம்! கடைசியாக தபால் கொடுப்பவர் கூட, ஏதாவது வி. பி. பி. வந்தால் "திருப்பிடட்டுங்களா" என்கிறார்! ஆக, எனக்கு வி. பி. பி. ஒத்து வராது என்று "போஸ்ட்மேனு"க்கே தெரிந்திருக்கிறது. அந்த இடத்தில் மானம் போகிறது! இன்னும் எவ்வளவோ! போலி விளம்பரங்களைக் கொடுத்து என் போன்ற ஏழைகளைப் பரிதவிக்க விடுவதைவிடச் சும்மா இருப்பதே மேல்! இதைத் தடுக்க வழி கிடையாதா! ஆக 'இலவசம்' என்ற பெயரைக் கேட்டாலே எனக்குப் பயமாயிருக்கிறது.

குரிச்சி
27—9—50 ஜி. பி. ராமன்

○●○

## சில அவசியமான திட்டங்கள்

சமீபத்தில் பாளையங்கோட்டையில் நடந்தேறிய அரை வருஷ நீர்ப்பாசன மகாநாட்டில் பல முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டு சென்னை சர்க்காருக்கு அனுப்பப்பட்டன. இத்தீர்மானங்களில் கண்ட திட்டங்கள் நிறைவேற்றப்பட்டால், நெல்லை ஜில்லாவில் ஏராளமான மக்கள் நன்மை அடைவார்கள்.

உதாரணமாக, கல்லாறை எடுத்துக் கொள்வோம். இந்த நதி திருவிதாங்கூர் — கொச்சி ராஜ்யத்தில் உள்ளது. இதில் செல்லும் தண்ணீர் ஒருவருக்கும் பயன்படாமல் அரபிக் கடலில் சங்கமமாகிறது. சென்னை சர்க்கார், திருவிதாங்கூர்—கொச்சி சர்க்காரின் சம்மதம் பெற்றுக் கல்லாறின் குறுக்கே அணையைக் கட்டித் தண்ணீரைத் திருப்பினால், சங்கரன் கோவில், கோவில்பட்டி, தென்காசித் தாலு

காக்களில் சுமார் 30,000 ஏக்கருக்கு மேல் பாசனமாகிறது.

பாபநாசம் மின்சார உற்பத்திக்கு அனுசரணையாக கல்லாறு நதியின் குறுக்கே அணையைக் கட்டுவது பற்றிப் பரிசீலனை செய்ய சென்னை சர்க்காரின் மின்சார இலாகா உத்தேசித்தது. அவ்வாறு கட்டப்படும் அணைத் தண்ணீர் மின்சார உற்பத்திக்கு மாத்திரமின்றி நீர்ப்பாசனத்திற்கும் பயன்படும்படி சென்னை சர்க்கார் கவனித்துக் கொள்ள வேண்டும்.

தண்ணீர் ஊற்றுக்கள் உள்ள இடங்களைக் கண்டு பிடிக்கவல்ல நிபுணர் ஒருவரை நெல்லை ஜில்லாவுக்குச் சர்க்கார் கொடுத்து உதவவேண்டும். ஏனெனில் ஏராளமான விவசாயிகள் கிணறு தோண்டுவதன் பொருட்டு ஏழு எட்டு ஜெதும்வரை ஆழமாகத் தோண்டியும் தண்ணீர் காணுமல் அதை மூடிவிட்டு வேறு இடத்தில் தோண்டுகிறார்கள். இதனால் விவசாயிகளுக்குப் பொருள் விரயமும் மனக் கஷ்டமும் ஏற்படுகிறது.

மேலும் மேற்குத் தொடர்ச்சி மலையில் கிரியாறு என்ற நதி ஒன்றிருக்கிறது. இதுவும் திருவாங்கூர் பூமியில் இருக்கிறது. மலையின் ஒரு புறமாகச் சிறிது சுரங்கம் தோண்டினால் சங்கரன்கோவில், கோவில்பட்டி தாலுகாக்களுக்கு நல்ல பலன் கிடைக்கும். இதற்கு ஏற்பாடு நடைபெறுவதாக மராமத்து எக்ஸிக்யூட்டிவ் இஞ்சினீயர் அறிவித்தார். இது அறிவிப்போடு நின்று விடாமல் உடனே செயலில் இறங்க வேண்டும்.

சர்க்காரும் அவ்வளவாக அத்தியாவசியம் இல்லாத திட்டங்களிலேயே பெரும்பாலும் நாட்களைக் கடத்தாமல், இது போன்ற இயற்கை வசதியுடன் அமைந்த இடங்களைத் திருத்தி உடன் பயன் தரும் இத்திட்டங்களைச் செய்து முடித்தால், உணவு உற்பத்தி பெருகும். ஏராளமான மக்களும் நன்மையடைவார்கள். சர்க்காருக்கும் நற்பெயர் உண்டு.

சிவகிரி
17—9—50

மு. மதுரம்

○●○

★ ## ஒரு ஏற்பாடு

'கல்கி' மாமா அவர்களுக்குச் சிறுமி கமலா எழுதிக் கொண்டது.

எனக்குப் பத்திரிகைகள் படிப்பதில் நிரம்ப ஆசை. ஆனால் அதை வாங்க காசுக்கு எங்கே போவது! அம்மா, அப்பாவைக் கேட்டால், 'சாப்பாட்டுக்கே கஷ்டமாய் இருக்கும் பொழுது பத்திரிகைகள் வேறு!' என்று கேட்கிறார்கள்.

ஆகையால் நல்ல நல்ல படங்களைப் பார்க்க, பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள எங்களுக்கு வசதி வேண்டாமா! ஆகையால் எங்கள் பள்ளிக்கூடங்களிலாவது தினம் ஒரு பீரியட் (Period) பல அழகான பத்திரிகைகளைக் கொடுத்து எங்களைப் படிக்கச் சொன்னால் எவ்வளவு சந்தோஷமாகவும் அறிவுக்கு விருந்தாகவும் இருக்கும்!

அமெரிக்காவிலும் மற்ற மேல் நாடுகளிலும் உள்ள பள்ளிக்கூடங்களிலே வித விதமான பத்திரிகைகளை வரவழைத்து என்னைப் போன்ற குழந்தைகளுக்குக் கொடுக்கிறார்களாமே! அது போல எங்களுக்கும் வசதி அளித்தால் எவ்வளவு குதூகலத்துடன் நாங்கள் பள்ளிக்கூடம் போவோம்! சென்னை சர்க்கார் என் போன்ற குழந்தைகளின் வேண்டுகோளை நிறைவேற்றுவார்கள் என்று நம்புகிறேன்.

சென்னை
13-9-50

எஸ். கமலா

○●○

## இதற்குமா கள்ள மார்க்கெட்?

தென்னிந்திய ரயில்வேயில் வேலைக்கு மனுப் போடுவதற்கு என்று ஒரு தனி மனு இருப்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். முன்பெல்லாம் ஒரு ரூபாய் மணி ஆர்டரோ அல்லது ஒரு ரூபாய்க்கு போஸ்டல் ஆர்டரோ Staff Selection Board அதிகாரிக்கு அனுப்பினால் அச்சிட்ட மனு ஒன்று பெற்றுக் கொள்ளலாம். ஆனால் இப்போது மணியார்டர் அனுப்பினால் 'மனு கைவசம் இல்லை' என்றும் அவைகளை ரயில்வே ஸ்டேஷன்களிலோ அல்லது ரெக்ரூடிங் ஆபீஸிலோ பெற்றுக் கொள்ளலாம் என்று கூறி அந்த மணியார்டர்கள் திருப்பி அனுப்பப் படுகின்றன. ஸ்டேஷன்களிலும் ரெக்ரூடிங் ஆபீஸிலும் விசாரித்தால் "மனுக்கள் எல்லாம் தீர்ந்து விட்டன" என்று சொல்லுகிறார்கள். ஆனால் ரூ. 5 முதல் ரூ. 10 வரையில் கள்ள மார்க்கெட்டில் விற்கப் படுகின்றன. இதை மேலுள்ள எஸ். ஐ. ஆர். அதிகாரிகள் தடுப்பார்களா! மேற்படி கள்ள மார்க்கெட் எஸ். ஐ. ஆர். நிர்வாகத்திற்கே ஓர் அவதூறு கொடுக்கிறது.

தஞ்சாவூர்
14—9—50

ராஜகோபாலன்

○●○

★ ## மாம்பலம் ரேடியோ!

மாம்பலம் பொதுக் கூட்டங்களில் பேசுகிறவர்களில் பெரும்பாலோர், "மாம்பலம் வாசிகள் நல்ல ரசிகர்கள்" என்று சொல்லுவார்கள். இதில் யாருக்காவது ஏதாவது சந்தேகம் இருந்தால் அதைப்போக்கித் தெளிவு படுத்தும்படியான ஒரு ரஸமான நிகழ்ச்சி சமீபத்தில் நடந்தது.

சுமார் இரண்டு வாரங்களுக்கு முன்னால் மாம்பலத்தில் ஒரு பார்க் திறந்து வைக்கப் பட்டது. சென்னை நகரசபைக் கமிஷனர் அந்த வைபவத்தின்போது பேசுகையில் ஒரு உண்மையை வெளியிட்டார். புதிதாகத் திறக்கப் படும் அந்தப் பார்க்கிலும் ஒரு ரேடியோ வைக்கவேண்டும் என்று எண்ணியிருந்தார்களாம். ஆனால் அங்கே வசிக்கும் ஜனங்கள், "பார்க் வேண்டுமானால் நிச்சயமாய் ஏற்படுத்துங்கள்; ஆனால் தயவுசெய்து அங்கே ரேடியோ மட்டும் வைக்க வேண்டாம்" என்று கேட்டுக் கொண்டார்களாம். அவர்களுடைய வேண்டுகோளுக்கு இணங்க, நகர சபையும் அங்கே ரேடியோ வைக்கும் எண்ணத்தைக் கைவிட்டு விட்டார்களாம்! மாம்பலம் வாசிகள் நல்ல ரசிகர்கள் என்பதில் இனியும் சந்தேகம் உண்டா!

இந்த நல்ல செய்தியைக் கேட்டு மாம்பலம் வாசிகள் சந்தோஷப்படும்பொழுது எல்லோ

ருமே சந்தோஷப்படும்படியான இன்னொரு செய்தி வந்திருக்கிறது. அதாவது, அக்டோபர் 1-ம் தேதியிலிருந்து ரேடியோ நிகழ்ச்சிகளில் ஒரு மணி நேரம் குறைக்கப்படும் என்பது தான். கடைசியில் ரேடியோ மஹாதேவர் கருணை புரிந்துவிட்டார்! தினமும் ரேடியோவைத் திருப்பிவிட்டு ஏதாவது நாராசமான ஹிந்திப் பாட்டுக்களையோ அல்லது தமிழ்ச் சினிமா பாட்டுக்களையோ கேட்டு பயப்படுகிறவர்களுக்கு ஒரு ஆறுதல் ஏற்படக்கூடும் அல்லவா! அந்த ஒரு மணி நேரத்தில் ரேடியோ நிகழ்ச்சிகளில் இருந்து தப்பித்து கொள்ள வசதிசெய்து கொடுத்த ரேடியோ அதிகாரிகளுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மாம்பலம்
30—9—50 கே. வி. ராமச்சந்திரன்.

○●○

## ஒரு வேண்டுகோள்!

செப்டம்பர் 24-ந்தேதி 'கல்கி' இதழில் சிவன் அவர்களின் அமரத்வம் பெற்ற கீர்த்தனைகளைக் குறிப்பிடுகையில் மிகப் பிரபலமான "பாமாலைக் கிணையுண்டோ" என்ற பாடலைச் சேர்க்க மறந்து விட்டீர்கள். அமரகவி பாரதியின் புகழைக் கூறும் அப்பாடல் அமரத்வம் பெற்றது என யாவரும் ஒப்புக் கொள்வார்கள்.

பாடகர்களுக்கு ஒரு வேண்டுகோள். 'பாமாலை' எனும் கீர்த்தனையில், "தமிழ் நாடு செய் தவப் பயனாய் வந்தவதரித்தாய்" என முன்னிலை வினையோடு அமைந்த அடியை நிரவல் செய்கையில் பிரபல பாடகர்கள் கூட, தாளக் கட்டுப் பாட்டிற்காக, "தமிழ் நாடு செய்தவப் பயனாய் வந்தவர்" என நிரவல் செய்கின்றனர். இவ்வாறு செய்வது பாடலின் பொருள் நயத்தைக் குறைப்பது போல் தோன்றுகிறது. ஆகவே "தமிழ்நாடு செய் தவப்பயனாய் வந்தனை" என்பது போலவோ அல்லது வேறு விதமாகவோ, தாளக் கட்டுப் பாட்டிற்கு ஒத்தபடி, அந்த அடியை முன்னிலையிலேயே அமைத்து நிரவல் செய்யும்படி பாடகர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

அண்ணாமலைநகர்
25—9—50 ஸ்ரீநிவாஸன்

○●○

## பட்டமளிப்பு விழா!

சென்ற ஆகஸ்டு 15-ம் தேதியன்று நடந்த சென்னை சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழாவில் கலந்து கொண்ட 1556 பட்டதாரிகளில் நானும் ஒருவன். கல்லூரிப் படிப்பில் கரை கண்ட அறிவு விற்பன்னர்கள் அடங்கிய கூட்டம். எனவே, பட்டமளிப்பு விழா பலரும் பாராட்டும்படி அமைதியாக நடைபெறுமென்று நான் நம்பி யிருந்தேன். ஆனால், அன்று நான் கண்டதென்ன! சர்வகலாசாலை செனெட் ஹால் அமைதி யின்மையாலும் கூச்சலினாலும் சர்வ கலாட்டா சாலையாக மாறிவிட்ட காட்சியைத்தான் கண்டேன்.

இந்திய முறையில் பஞ்சகச்சமும் தலைப்பாகையும் அணிந்து வந்திருந்த பட்டதாரிகள் அறிமுகம் செய்து வைக்கப்படும்போதுதான் கைதட்டலும் கூச்சலும் ஏற்பட்டன. தொன்று தொட்ட வழக்கத்தைப் பின்பற்றிய ஒரு சில பட்டதாரிகள் அன்று 'அறிமுகம்' என்ற பெயரால் அவமானப்படுத்தப் பட்டனர். மேனாட்டு முறையில் சூட்டும் தொப்பியும் அணிந்து வந்திருந்த பட்டதாரிகளில் சிலர், இந்திய உடைகளில் வந்திருந்த தங்கள் சகோதர பட்டதாரிகளைக் கேலி செய்தது அவர்களின் மட்டரகமான மனப்பான்மையைத்தான் காட்டுகிறது.

இரண்டாவதாக, பட்டமளிப்பு விழாப் பிரசங்கத்தின்போது பூரண அமைதி நிலவுவதற்குப் பதிலாக ஒரே சலசலப்பாக இருந்தது. பிரசங்கத்தைக் கவனித்தவர்கள் வெகு சிலரே. எவ்வளவுதான் நேரமாகி விட்டபோதிலும் பட்டமளிப்பு விழாவின் முக்கிய கட்டமான பிரசங்கத்தின்போது அமைதியாக இருந்திருந்தால் பட்டதாரிகள் பட்டமளிப்பு விழாவின் முக்கியத்வத்தை உணர்ந்திருப்பார்கள்.

இந்தியப் பாணியில் உடையணிந்து வருபவர்களின் தலைப்பாகையே கூச்சலுக்குக் காரணம். ஆகவே, விழா அமைதியாக நடைபெற ஒன்று இந்திய உடையில் வருபவர்கள் தலைப்பாகையின்றி வர அனுமதிக்கப்பட வேண்டும்; அல்லது, பட்டதாரிகள் அனைவரும் ஒரேபாணியில் உடையணிந்து வரும்படி செய்ய வேண்டும்.

மேலும், பட்டமளிப்புப் பிரசங்கத்தை, சம்பிரதாயத்திற்கு மாறாக 'பட்டதாரிகள் அறிமுகம் செய்து வைக்கப்படும் படலம்' ஆரம்பமாகுமுன் நிகழ்த்தினால் எல்லோரும் அமைதியாக உற்சாகத்துடன் கேட்பார்கள். அறிமுகம் செய்து வைக்கப்படும் நிகழ்ச்சிக்குத்தான் அதிக நேரமாகிறது. எனவே அதைக் கடைசியாக வைத்துக் கொள்ளலாம்.

இதுபோன்ற மாறுதல்களைச் சர்வ கலாசாலையினர் கைக்கொள்ளாவிடில் வரும் ஆண்டுகளிலும் பட்டமளிப்பு விழா அமைதியின்மை காரணமாக, பார்க்கிறவர்களுக்குக் கேலிக்கூத்தாகவே தோன்றும்.

மதுரை
27—8—50 எஸ். கருப்பையா

## அதுவும் இல்லை!

போலீஸ்காரன்:—யாரப்பா அது? சைக்கிளில் விளக்கு இல்லாமல் போகிறாயே? நிறுத்து வண்டியை!

சைக்கிள்காரன் (போய்க் கொண்டே)—அது சரிதான், அப்பா! என் வண்டியில் பிரேக்கும் இல்லையே! அதை எப்படி நிறுத்துவேன்?



★ வட்ட மேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ 'மாம்பலம் ரேடியோ' என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ கே. வி. ராமச்சந்திரனுக்கும், 'ஒரு ஏற்பாடு' என்ற கடிதம் எழுதிய சென. எஸ். கமலாவுக்கும் ரூ. 12—8—0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.





மாசு படிந்த தோற்றத்துடனும் அடிக்கடி முகப் பருக்களினாலும் தோலில் தடிப்புகளுடனும் வாழ் நாள் முழுதும் அவள் அவதிப்பட வேண்டுமென்றிருந்ததா? ஆம், அவள் அப்படித்தான் நினைத்தாள். அதிகப் பணச் செலவில் செய்த சர்ம சிகிச்சைகளும், க்ரீம்களும், களிம்பு களும் நிரந்தரமான பலனை அளிக்க வில்லை. பின்னர்தான் அவளது உபாதைகளின் மூல காரணத்தைத் தாக்கிய "க்ருஷனை" நாடினாள்......

அப்பழுக்கற்ற மேனி நிறத்தை யுடைய ஆயிரக்கணக்கான ஸ்திரீகள் உலகெங் கும் 'க்ருஷ'னுக்கு நன்றி செலுத்து கின்றனர். ரத்தத்திலுள்ள அசுத்தங் களே, தோலின் மங்களான நிறத்திற் குக் காரணமாக அமையும் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் க்ருஷனிலுள்ள ஆறு விதமான லோக உப்புக்கள் அதி அற் புதத்தை விளைவிக்கின்றன. மந்த மடைந்த உறுப்புக்களினால் கழிக்கப் பட முடியாத தொல்லை தரும் விஷப் பொருள்கள் வெளியே தள்ளப் படுகின் றன. ரத்தம் சுத்திகரிக்கப்பட்டு ஆரோக்கியம் ததும்புகிறது. தோலின் மேலுள்ள மறுக்கள் நீக்கப் பட்டு இயற்கையாகவே உள்ள அழகிய தோற்றம் பெறுகிறது.

க்ருஷனால் அடையப்பட்ட உட்புற சுத்தம் திருப்பி யளிப்பது சர்ம சௌந் தர்யம் மாத்திரமல்ல. அது வாழ்க்கை யின் ஆனந்தத்தையும் அளிக்கிறது. ஈரல், மூத்திரக்காய், குடல்கள் இவற்றை இயங்குமாறு ஆறு விதங் களில் தூண்டும் "க்ருஷ"னே தேக நலத்தையும் இயற்கை யழகையும் திரும்பப் பெற மிகச் சிறந்ததும் சிக்கன மான வழியாகும். க்ருஷனின் விலை ரூ. 1-10-0 தான். எல்லாக் கெமிஸ்டுக ளிடமும் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

க்ருஷன் ஈ. கிரிபித் ஹியூஸ், லிமிட்., மான்செஸ்டர், இங்கிலாந்து அவர்களால் தயாரிக்கப்பட்டு ஈக் கம்பெனி லிட்., பம்பாய், மத ராஸ், கல்கத்தா அவர்களால் விநியோகிக் கப் படு கின்றன.




**நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்!**




## மிக்க ஆரோக்யமான தோற்றம்........

மைசூர் ஜாஸ்மின் சோப் சாதாரணமாக உபயோகத்திற்குப் புதியதாக வந்துள்ள மற்றவகை சோப்புகளைப்போல் அல்ல. அதிலுள்ள உயர்ரக மூலிகைச் சத்துக்கள் அதிக நன்மையைப் பயப்பதுடன் ஆரோக்கியத்தையும் வசீகரத்தையும் நிச்சயம் அளிக்கின்றன. இன்றே ஒரு ஜாஸ்மின் சோப் வாங்கி உபயோகித்துப் பாருங்கள்.

# மைசூர் ஜாஸ்மின் சோப்

எங்கும் கிடைக்கும்

கவர்ன்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்

# 15 வருஷங்களுக்கு மேலாக




# ஐ·டி·எல்·தயாரிப்புகள்

வைத்தியர்களால் தவறாமல் சிபார்சு செய்யப்பட்டு வருகின்றதுடன், நம்பிக்கையாக உயர்தரமான பயனளிப்பதில் சிறந்தமான கீர்த்தி பெற்று விளங்குகின்றன.

1. காட்லிவர் ஆயிலுடன் கூடிய மால்ட் எக்ஸ்ட்ராக்ட்
2. கிளைப்ஸிரப்
3. ஜூலாக்
4. ஜெகோபாம்
5. பெப்டுசின்
6. கெபேடின்
7. விட்டோபெரின்
8. கால்கோனேட் D
9. விட்டோமால்ட்
10. ஹைபா-டி காட்லிவர் ஆயில்

*தயாரிப்பவர்கள்*

மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேடரீ லிமிடெட்.,
மல்லேஸ்வரம், பெங்களூர்.

விற்பனை ஏஜண்டுகள்:

பெஸ்ட் & கம்பெனி லிமிடெட்.
தபால்பெட்டி நெ. 63, மதறாஸ்.

83 24TM

# டன்லப்

## ஆர்·எச்·எஸ் டிரக் & பஸ் டயர்கள்



DUNLOP



இந்தப் பெரிய கனமான டயர் ரியின்போர்ஸ்ட் கேஸிங் கொண்டது. இது லோ ஸ்டிரெச் கார்டுகளுள் பயன்படுத்தப்பட்டது. பிரத்தியேகமான டன்லப் முறைப்படி இயற்கையான ரப்பரில் கலக்கப்பட்டது. இதன் ஜாடையும், தேய்வும் சமீபகால டயரின் சரித்திரத்திலேயே மிகப்பெரிய முன்னேற்றத்தைக் குறிப்பிடுகிறது.

**பெரியவை-கனமானவை-பத்திரமானவை-**

**லேடக்ஸ் இணைப்புள்ளவை.**

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Audens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

"கல்கி" ஆசிரியர் எழுதிய இருபெரு நவீனங்கள்

## சிவகாமியின் சபதம்

பரிசுப் பதிப்பு ரூ. 15-0-0

●

## பார்த்திபன் கனவு

விலை ரூ. 6-8-0

●

தமிழ் நாட்டுச் சரித்திரத்தின் மகோன்னத காலத்தை இவ்விரு நவீனங்களும் அற்புதமாக விளக்குகின்றன

●

சசிதேவி எழுதிய **விஜயா** முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபாற் செலவு பிரத்தியேகம்)

கிடைக்குமிடம்

"கல்கி" காரியாலயம், கீழ்ப்பாக்கம், சென்னை



## ஆஸ்துமா மார்ச்சளி இருமல், மூச்சுத் திணறல், 3 நிமிஷங்களில் ஒழிக்கப்படுகின்றன

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதியுறுகிறீர்களா? அதிகமாக இருமுவதால் பிராணவேதனையாக இருக்கிறதா? பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், குளுமையான சில வஸ்துக்களையும் உணவுகளையும் சாப்பிட முடியவில்லையா?

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ (Mendaco) ஓர் புதிய நம்பிக்கை அளிக்கும். மயக்க மருந்துகளில்லை, புகை பிடித்தலில்லை, இஞ்சக்ஷனில்லை, ஆட்டோமைசர் தேவையில்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின்போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக மறைந்துவிடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ (Mendaco) இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி, கபத்தைக் கரைத்து சிரமமின்றி ஸ்வாசத்தை அபிவிருத்தி செய்து முதல் நாள் இரவே நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 வருஷங்களாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ (Mendaco) அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிர்கால தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக ஜே. ரிச்சர்ட்ஸ், ஹாமில்டன், ஒன்ட், கானடா, இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து, இறந்து விடுவார் என எதிர்பார்க்கப் பட்டது. மெண்டாகோ (Mendaco) ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்தி விட்டது. இரண்டு வருஷங்களில் அவ்வுபாதையே மீண்டும் ஏற்பட்டதில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ (Mendaco) முதல் வேளை சாப்பிட்டதும் நேரடியாக ரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ (Mendaco) அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் கீழ் மெண்டாகோ (Mendaco) உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ (Mendaco) சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்றுத் திருப்தியளிக்காவிடில் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரிகளிடமிருந்து மெண்டாகோ (Mendaco) வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறுநாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றது.

**Mendaco**

மெண்டாகோ

● ஆஸ்துமா ● மார்ச்சளி நோய் ● ஹே ஜுரம் இவற்றை நிவர்த்திக்கிறது

REGD. NO. M. 4392

# கோவிந்தன் கிப்ஸ் உபயோகிக்கிறான்—

அவன் பற்கள் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன.












## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர காரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரீஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புதுமணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ் டென்டிபிரீஸ்

ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது

விலையோ சொற்பம்—பலநாட்கள் நீடித்துவரும்

GD. 27-179 TM